# வளர்தமிழ் இலக்கணம்

## (நூற்பாவும் உரையும்)




பாவலரேறு ச. பாலசுந்தரம்

தாமரை வெளியீட்டகம்

# வளர்தமிழ் இலக்கணம்

(நூற்பாவும் உரையும்)

ஆசிரியர்

**பாவலரேறு ச. பாலசுந்தரம்**

தொல்காப்பிய ஆராய்ச்சிக் காண்டிகை உரையாசிரியர்

**தாமரை வெளியீட்டகம்**

**367, மேலவீதி, தஞ்சாவூர் 613 009.**

# நூல் விவர அட்டவணை


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | **வளர்தமிழ் இலக்கணம்** |
| நூல் ஆசிரியர் | : | பாவலரேறு ச. பாலசுந்தரம் |
| மொழி | : | தமிழ் |
| பொருள் | : | மொழி இலக்கணம் |
| நூல் வெளியீடு | : | ஆசிரியன் சொந்த வெளியீடு<br>தாமரை வெளியீட்டகம் |
| பதிப்பு ஆண்டு | : | முதற்பதிப்பு - நவம்பர் 2003 |
| தாள் | : | T.N.P.L. 13.7 Kg. |
| பக்கங்கள் | : | 186 பக்கங்கள் |
| நூலின் அளவு | : | 1 x 8 டெம்மி |
| எழுத்தின் அளவு | : | 11 புள்ளி |
| விலை | : | ரூ. 60/- |
| கணினியாக்கம் | : | திருவள்ளுவர் ஆப்செட் பிரிண்டர்ஸ்<br>141, ஜே.டி. காம்ப்ளக்ஸ், ஈசுவரி நகர்,<br>தஞ்சாவூர் - 7. போன் : 242764. |

# வளர்தமிழ் இலக்கணம்
## (நூற்பாவும் உரையும்)

*பாயிர உரை:* தமிழ்மொழி மிகவும் தொன்மையானது போற்றத்தக்க இலக்கியவளமும் இலக்கணக்கட்டுக் கோப்பும் உடையது. அறிவியலுக் கொத்த சொல்லாக்க மரபினையுடையது. அயல்மொழித் தாக்கங்களால் திரிபுற்று மெலியாத திண்மையுடையது. தெளிவான எழுத்திலக்கணத்தையும் சொல்லிலக்கணத்தையும் செம்மையான பொருளிலக்கணத்தையும் உடையது. இயல்பானது எளிதானது தெளிவானது இனிமையானது.

தமிழில் தொல்காப்பியத்திற்குப்பின் மூன்று அதிகாரங்களையும் கொண்ட முழுமையான இலக்கண நூல்கள் யாதும் காணப்பெறவில்லை. மொழியிலக்கணத்தை ஐந்து கூறுகளாக அமைத்து வடமொழி பாலிமொழிக் கோட்பாடுகளைக் கொண்ட வீரசோழியம் பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றியது. அது தொல்காப்பிய நெறி மரபுகளையோ அறிவியற் கோட்பாடுகளையோ பின்பற்றாமல் பழந்தமிழ் மரபுகளுக்கு எதிராகச் செய்யப்பட்டது. அதன்பின் பதின்மூன்றாம் நூற்றாண்டில் வீரசோழியத்தை மறைமுகமாக மறுப்பது போலத் தொல்காப்பிய அமைப்பினைப் பின்பற்றி நேமிநாதம் இயற்றப்பட்டது. அதுமொழியியற் பயிற்சிக்குப் பெரிதும் பயன்படாமையைக் கண்டு பவணந்தி முனிவர் என்னும் சமண சமயப் பெரியார் பாலிமொழியையும் பாணினீயவியாகரணச் சொல்லாக்க முறையையும் பின்பற்றி நன்னூலைச் செய்தார்.

நன்னூல் மொழியின் வரிவடிவங்களை அடிப்படையாகக் கொண்டு செய்யப் பெற்றமையால் எளிதாகவும் சுருக்கமாகவும் அமைந்தது. அதனை ஒரு முழுமையான நூலாகக் கருதிப்பலர் காண்டிகையுரையும் விருத்தியுரையும் எழுதினர். சங்கர நமச்சிவாயப்புலவர் தொல்காப்பியத்தை ஒட்டி அதன் கருத்துக்கள் யாவும் அமைந்திருப்பதாக எண்ணி நன்னூலார் பிழையாகக் கூறியுள்ளவற்றிற்கெல்லாம் உயர்வாக விளக்கங் கூறி ஒருவிருத்தி உரையை வரைந்தார். சங்கரநமச்சிவாயர் உரையில் உள்ள சில குறைபாடுகளை நீக்கிச் சிவஞான முனிவர் அதற்கு விளக்கம் எழுதிச் சென்றார்.

இற்றைக்கு நன்னூல் சிவஞானமுனிவர் உரை அடிப்படையில் தமிழ் எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும் கற்பிக்கப்பட்டு வருகின்றன. அறிவியல் தத்துவவியல், பொருளியல், ஆட்சியியல், பயிற்றுமொழி முதலிய எல்லா நிலைகளிலும் தமிழ்மொழி முதன்மை பெற வேண்டுமென்னும் கருத்து மேலோங்கிய நிலையில் செய்தித்தாள்களும் இலக்கிய இதழ்களும் பெருகி வந்தன புதிய இலக்கிய வகையாகச் சிறுகதை தொடர்கதை புதினம், கட்டுரை, திறனாய்வு, அரசியல் விமரிசனம் முதலிய துறைகள் வளர்ந்தன. அவை காரணமாக உருது இந்துத்தானி ஆங்கிலம் முதலிய அயல்மொழிச் சொற்களும் அம்மொழி மரபுகளும் தமிழிற் கலந்து வருகின்றன. தமிழ் இலக்கண மரபுகள் புறக்கணிக்கப்பட்டுகின்றன. இக்கலப்பு மேலும் பெருகி மொழி சிதைந்து விடாவண்ணம் அவற்றை ஒருவாறு கட்டுப்படுத்தும் முறையில் புதிய இலக்கண நூல்கள் தோன்றவில்லை. நன்னூலையும் அதன் உரைகளையும் தழுவிச் சில நூல்கள் தோன்றின.

தமிழ்ப்பல்கலைக் கழகத்தைத் தோற்றுவித்த அன்றைய தமிழக முதலமைச்சர் திரு.ம.கோ. இராமச்சந்திரனார் புதிய இலக்கண நூல்கள் தோன்ற ஆவன செய்யுமாறு தமிழறிஞர்களைக் கேட்டுக் கொண்டார். எனினும் பல்கலைக்கழகங்களோ, மொழி இலக்கியக் கழகங்களோ அதற்கான முயற்சியை மேற் கொள்ளவில்லை. தமிழ்மொழி நிறுவனங்கள் அதற்கான முயற்சியை மேற்கொள்ளத் தூண்டும் வகையில் முன்னோடியாக 1991 ஆம் ஆண்டில் இலக்கியமொழி வழக்குமொழி, அயல்மொழித் தமிழாக்கம் புதிய இலக்கிய வரவுகளின் அடிப்படையில் எழுத்து-சொல்-இலக்கியம் பற்றி மூன்று பகுதியாகத் 'தென்னூல்' என்னும் பெயரில் புதிய இலக்கண நூலை யான் எழுதி வெளியிட்டேன். எழுத்துப்படலம் சொற்படலங்களுக்குக் காண்டிகையுரை எழுதி வைத்துள்ளேன் விரைவில் வெளிவரும்.

தொல்காப்பியத்திற்குப் பழைய உரையாசிரியன்மார் எழுதியுள்ள உரைகள் அடிப்படையான பகுதிகளில் மாறாகவும் வேறாகவும் அமைந்துள்ளமையைக் கண்டு தொல்காப்பியம் முழுமைக்கும் அறிவியல் நோக்கில் ஆராய்ச்சிக்காண்டிகை உரை எழுதி 1988 இல் வெளியிட்டேன் தமிழறிஞர் பலரும் போற்றி ஏற்றனர். அன்றைய அரசியல் அமைச்சர்

சிலரும் மகிழ்ந்தனர். அக்காலை மதுரை யாதவர்கல்லூரி முதல்வராகப் பணியாற்றிய தமிழ்ப் பேராசிரியர் திரு தமிழ்க் குடிமகன் தொல்காப்பியச் செந்நெறி பரவ ஆவன செய்வதாகக் கூறினர்.

பின்னர்த் தி.மு.கழகம் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற போது தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சராக அமர்ந்த பேராசிரியர் தமிழ்க் குடிமகன் அவர்கள். இன்றைய மொழி வளர்ச்சி இலக்கிய வளர்ச்சிக்கேற்ப புதியதொரு நூலை உருவாக்க விரும்பி இலக்கணப் பேராசிரியர் குழு ஒன்றை அமைத்தார். முதல் கூட்டத்தில் குழுவினரிடம் புதிய இலக்கண நூலாக்கம் பற்றி உசாவியபோது தென்னூலை அடிப்படையாக வைத்துச் சேர்க்க வேண்டியவை மாற்ற வேண்டியவற்றை ஆராய்ந்து புதிய நூலை உருவாக்கலாமென்று எனது கருத்தைக் கூறினேன். தென்னூலையும் ஒப்பு நோக்கிப் பழைய நூல்களின் கருத்துக்களில் வேண்டியவற்றைக் கொண்டு புதிதாக ஒருநூலைப் படைப்போம் என்றார் அமைச்சர். குழுவினர் தம் கருத்துக்களைக் கட்டுரை வடிவில் எழுதித்தருமாறு கூறினார். பொறுப்பு தமிழ் வளர்ச்சி இயக்குநரிடம் தரப்பட்டது. பின்னர் இரண்டு முறை குழு கூடியது. பின்னர்க் குழுவினர் தம் தம் கருத்துக்களை எழுதித் தரும்படி இயக்குநர் கேட்டுக் கொண்டார். யான் என்னுடைய கருத்துக்களை நூற்பாக்களால் ஒரு நூலாக எழுதியனுப்பினேன். இந்நூலை அடிப்படையாகக் கொண்டு வேண்டும் மாற்றங்களைச் செய்து கொள்ளலாம் என்று தெரிவித்தேன். அரசு வேறு நூல் உருவாக்க நினைத்தால் இதனை நானே வெளியிட உள்ளேன் என்று தெரிவித்திருந்தேன்.

காலங்கடந்தது ஆட்சி மாறியது திட்டம் பற்றிய நிலை தெரியாமையால் யான் தெரிவித்திருந்தவண்ணம் அந்நூலில் சிலதிருத்தங்களைச் செய்து உரையுடன் வெளியிடலானேன் "வளர்தமிழ் இலக்கணம்" என்னும் இந்நூல் பத்திரிகையாளர் எழுத்தாளர்களுக்கேயன்றிப் பிறதுறையில் உள்ளவர்கட்கும் மாணவர்கட்கும் பெரிதும் பயனளிக்கும் என்று நம்புகிறேன்.

நூலாசிரியர்.

# நூல்

## (தமிழ்த் தெய்வத்திற்கு வணக்கம்)

ஒளிர்கருத் துருவொடெம் உயிர் உணர்வாய்த் திகழ்
வளர்தமிழ் அன்னையை வணங்குதும் மகிழ்ந்தே.

(1)

## எழுத்துப்படலம் - எழுத்தியல்

### (எழுத்துக்களின் பொதுவிலக்கணம்)

சூத்திரம் -1 நாதவளி இசையால் கண்டத்திருந்து
வாயுறுப்பாலே மொழிக்கடிப் படையாச்
செவிகொள மக்கள் எழுப்புவன எழுத்தே.

பொருள் : ஓசையும் இசையும் ஒலியுமாக ஆக்கம் பெறும் நாதம் என்னும் வளியிசையால் குரல்வளையாகிய கண்டத்தினின்று வாயின் இதழ், நா, பல் அண்ணம் மூக்குவளை ஆகிய உறுப்புக்களால் உருப்பெற்று மக்கள் பேசும் மொழிக்கு அடிப்படையாய்க் கேட்போர் செவிக்குப் புலனாகுமாறு மக்களால் எழுப்பப் பெறுவன எழுத்து எனப்படும்.

நாதவளி என்பது நிலம், நீர், தீ காற்று என்னும் பூதங்களால் உருவாகி ஆகாயமென்னும் பூதத்தால் வெளிப்படுவது. அதுபிரபஞ்சம் முழுதும் அருவாக நிற்பதாகும். தோற்பறையில் கோல்கொண்டு மோதுமிடத்தும் நரம்புக் கருவிகளில் நரம்புகளை அசைக்குமிடத்தும் குழற்கருவிகளில் வெப்பக் காற்றைச் செலுத்துமிடத்தும் நிகழ்வது நிலமென்னும் பூததத்துவமாகும். அங்ஙனம் மோதிச் செலுத்துமிடத்து எழும் ஒலியலைகள் தீ என்னும் பூததத்துவமாகும். அவ்வலைகள் எங்கும் பரவுவது காற்று என்னும் பூததத்துவமாகும். அம்மூன்றானும் ஒருபொருளாக உருவாகிச் செவிப்புலனாவது ஆகாயமென்னும் தத்துவமாகும் நீர் என்னும் பூதம் நிலத்திலும் காற்றிலும் அடங்கும்.

எனவே நாதம் என்பது ஐம்பூதங்களின் தன்மாத்திரைகளால் நிகழ்வது என்பது விளங்கும். அவ் ஆற்றல் காரணமாகவே சொற்கள் இன்பதுன்பங்களை உண்டாக்குவதும் மந்திரங்கள் உருவாவதும் அமைகின்றன. தோற்கருவிகளின் கட்டுக்களைப் போலவும் நரம்புக் கருவிகளின் மெட்டுக்களைப் போலவும் குழற்கருவிகளின் துளைகளைப் போலவும் வாயுறுப்புக்கள் அமைந்து ஓசை ஒலிகளுக்கு வடிவம் தருகின்றன. அவ்வுருவங்களை உயிர்ப்பிசை வாய் வழியாகவும் மூக்குவழியாகவும் வெளிப்படுத்துகின்றது. தொல்காப்பியம் இதனை எழுத்துக்களின் பிறப்பிலக்கணங் கூறுமிடத்துச் சுருக்கமாக விளம்புகின்றது.

சிற்பச் சிலை உருவங்களைத் தெய்வங்களாகவும் நிகழற்படங்களை அவ்வம் மக்களாகவும் பொருள்களாகவும் கருதி உணர்வதைப் போல எழுத்துவரி வடிவங்கள் அவ்வவ் ஒலிவடிவங்களைக் குறித்து நிற்றலான் வரிவடிவும் எழுத்தெனப்படுகின்றது. அம்முறையிற்றாள் வரை கோட்டுயந்திரச் சக்ககரங்கள் செயலாற்றுகின்றன.

உயிரினங்களால் எழுப்பப்படும் ஓசை ஒலிகள் அளவிறந்தன. அதலின் மொழிக்கு உறுப்பாக அமையும் வரையறுக்கப் பெற்ற ஓசை ஒலிகள் மட்டும் எழுத்தெனப்படுகின்றன. ஓசைஒலிகள் எழுத்திற்கு முதற் காரணம் எழுத்து மொழிக்கு முதற்காரணமாகும். ஆதலின் கண்டத்தினின்றும் நாதவளியால் எழுப்பப்படுவது எழுத்தெனப்பட்டது. ஓலைகளில் கீறுவதாலும் மை முதலியவற்றால் தீட்டுவதாலும் வரிவடிவங்கள் கண்ணுக்குப் புலனாக எழுதலான் வரிவடிவும் எழுத்தெனப்பட்டது. அம்முறையில் எழுத்து என்னும் பெயர் ஒலி உருவத்திற்கும் வரிவடிவத்திற்கும் பொருந்தித் திகழ்கின்றது.

## தமிழ் எழுத்துவகை

சூ.2. *எழுத்துயிர் மெய்சார் பென முத்திறப்படும்*

பொருள் : தமிழ் எழுத்துக்கள் உயிர் எழுத்து மெய்யெழுத்து சார்பெழுத்து எனமூன்று வகைப்படும்.

கண்டத்தினின்று உயிர்ப்பதனால் வெளிப்படுதலின் அகரம் முதலிய எழுத்துக்கள் உயிர் எனப்பட்டன. வாயுறுப்புக்களால் வடிவு கொள்ளுதலானும் உயிர்ப்பிசையை மேவி வெளிப்படுதலினாலும் ககர முதலிய எழுத்துக்கள் மெய் எனப்பட்டன. தனித்தியங்க ஒல்லாமல் ஒருசொல்லின்கண் உயிர் மெய்களைச் சார்ந்து வருதலின் குற்றியலிகரம் முதலிய மூன்றும் சார்பெழுத்து எனப்பட்டன.

## உயிர் எழுத்துக்களின் விரி

சூ.3. *அவற்றுள்,*
*அம்முதல் ஔவரை உயிரீராறே*

பொருள் : மேற்கூறப் பெற்ற மூவகையுள் உயிர் என்பவை தமிழ் மொழியில் அகர முதல் ஔகாரம் ஈறாகிய பன்னிரண்டாம். அவை அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ ஔ என்பனவாம்.

## உயிர் எழுத்து வகை

சூ.4. அ இ உ எ ஒ ஐந்தும் குறில், நெடில்
ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ எழுமாம்
குறில் நெடில் என்றது மாத்திரை யளவே.

பொருள் : உயிர்பன்னிரண்டனுள் அ இ உ எ ஒ என்னும் ஐந்தும் ஒரு மாத்திரையளவு இசைத்தலின் குற்றெழுத்தெனப்படும் ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்னும் ஏழும் இரண்டு மாத்திரையளவு இசைத்தலின் நெட்டெழுத்து எனப்படும். இவை மெய்யினை ஊர்ந்து நிற்குமிடத்தும் இப்பெயர்களைப் பெறும்.

## மெய்யெழுத்துக்களின் தொகையும் இயல்பும்

சூ.5. கம்முதல் னவ்வரை மெய்ம் மூ வாறே
உயிர்ப்பிசை துணையா வெளிப்படும் வையே.

பொருள் : ககரம் முதல் னகரம் ஈறாக மெய் எழுத்துக்கள் பதினெட்டாகும். அவை தாமாக வெளிப்படா. உயிர்ப்பிசை துணையாக வெளிப்படும். உயிர்ப்பிசைகளைத் துணையாகப் பெறுமிடத்து ஓர் உயிரெழுத்தின் பின்னர் அதன் அலையாலும், உயிர்ப் பிசையை ஏற்று ஒன்றுபட்டும் வெளிப்படும். தம்மை மட்டும் வெளிப்படுத்துமிடத்து அகர உயிரைச் சாரியையாகப் பெற்றுக் க ங ச ஞ ட ண த ந ப ம ய ர ல வ ழ ள ற ன என வெளிப்படும்.

## மெய்களின் இனவகை

சூ.6. அவற்றுள்
கசட தபற ஆறும்வல் லினமாம்
ஙஞண நமன ஆறும்மெல்லினமாம்
யரல வழள ஆறும்இடை இனமாம்

பொருள் : மெய் பதினெட்டனுள் நெஞ்சுவளியாற் பிறக்கும் கசடதபற என்னும் ஆறும் வல்லினம் எனப்படும். மூக்குவளியாற் பிறக்கும் ஙஞணநமன என்னும் ஆறும் மெல்லினம் எனப்படும். வன்மைக்கும் மென்மைக்கும் இடைப்பட்டுமிடற்று வளியால் பிறக்கும் யரலவழள என்னும் ஆறும் இடையினம் எனப்படும். இவை ஓசையால் இடைப்படுதலேயன்றி வல்லினமெல்லின எழுத்துக்களைப் போலத் தடையுற்று வாராமல் உயிர்ப்பிசை

போல வாயுறுப்புக்கள் உரசுதலினால் வெளிப்படுதலானும் இடை எழுத்து எனப்பட்டன.

## மெய்களின் செயற்பாட்டு நிலைகள்

*சூ.7. உயிரிணைந் திசைப்பின் உயிர் மெய் எனப்படும்
உயிரின்பின் ஒலிப்பினவை புள்ளிமெய் எனப்படும்.*

*பொருள் :* மெய்யெழுத்துக்கள் தனித்துத் தாமாக வெளிப்படா ஆதலின் உயிர்ப்பிசைய ஏற்று மெய்யொலி முன்னும் உயிர்ப்பிசை பின்னுமாக இணைந்து வெளிப்படுமிடத்து அவை உயிர்மெய் (உயிர்க்கும்மெய் - உயிர்மெய் என்பது வினைத்தொகை மொழி) நிலைமொழியீறாக நிற்குமிடத்து உயிரீறாகவும் வருமொழி முதலாக வருமிடத்து மெய்ம் முதலாகவும் நின்று புணரும். மொழியாக்கத்தின் கண் ஓரெழுத்தாகவும் புணர்ச்சியிடத்து ஈரொலியாகவும் கொள்ளப்படும். ஓர் உயிரெழுத்து அல்லது மெய்யொடு கூடிநிற்கும் உயிரெழுத்துக்களின் பின்வரின் அவ்வுயிரின் இசை அலையில் அரை மாத்திரை பெற்று மொழியிடையிலும் ஈற்றிலும் செவிப்புலனாக ஒலிக்கும் அவ்வழி அவை புள்ளிமெய் எனப்படும் ஈறுகுன்றிப்புள்ளி எனவும் வழங்கப் பெறும். நிலைமொழி ஈறாக நின்று வருமொழி உயிரொடு கூடுமிடத்துத் தனது மாத்திரையையிழந்து உயிர்மெய்யாக இசைக்கும்.

அம்முறைமையான் வாயுறுப்புக்களால் உருவாகி வெளிப்படாத நிலையில் மெய் என்றும் உயிரிசையின் பின் அரை மாத்திரையளவாக ஒலிக்குமிடத்துப் புள்ளி மெய் என்றும் உயிரை ஏற்று இணைந்திசைக்குமிடத்து உயிர்மெய் என்றும் மெய் எழுத்துக்கள் முத்திறமாகச் செயற்படும் அதனான் உயிர்மெய்யின் மாத்திரையளவுகள் ஊர்ந்து நிற்கும் உயிரின் அளவாக அமைகின்றன. அல்-கல். லகரமெய் அரை மாத்திரையளவு ஒலிக்கும். க ஒரு மாத்திரை கா இரண்டு மாத்திரையளவு இசைக்கும்.

## உயிர்மெய்வரிவடிவம்

*சூ.8. வரிவடிவுயிர்மெய் இரண்டுநூற்றெட்டே*

*பொருள் :* பன்னிரண்டு உயிர்களும் பதினெட்டு மெய்களை ஊர்ந்து வருமிடத்து ஒவ்வொரு மெய்யும் பன்னிரண்டு வடிவம் பெறுதலின் உயிர்மெய் வடிவங்கள் இருநூற்றுப் பதினாறாகும். இருநூற்றுப்பதினாறு வரிவடிவங்களில் உள்ள ஒலி உருவங்கள் முப்பதேயாகும். அதனான்

உயிர்மெய்களைச் சார்பெழுத்து என்பதும் அவை இருநூற்றுப் பதினாறு என்பதும் பிழையாகும். வரிவடிவங்கள் தாம் இருநூற்றுப் பதினாறு வடமொழி உட்பட்ட இந்திய மொழியாளர் யாவரும் உயிரையும் மெய்யையும் இணைத்தே எழுதுவர் எனினும் அவற்றைத் தனிவகை எழுத்தாகக் கொள்ளலர் உயிரையும் மெய்யையும் மட்டுமே எழுத்தாக எண்ணித் தொகை கூறுவர் உயிர் மெய் வடிவங்களை எண்ணி முதற்கண் தொகை கூறியவர் நேமிநாத நூலாசிரியர் ஆவார். அவர் கூற்றை ஆராயமல் பவணந்திமுனிவர் மேற்கொண்டதோடு அமையாமல் உயிர்மெய் எழுத்துக்கள் தமிழிற்கே உரிய சிறப்பெழுத்துக்கள் என்று பிழையாகச் கூறிச் சென்றார்.

தமிழில் ஒலிவடிவங்கள் உயிர் 12, மெய் 18. சார்பு மூன்று ஆக முப்பத்து மூன்றேயாம் வரிவடிவங்கள் உயிர் 12, மெய் 18, உயிர்மெய் 216, ஆய்தம் 1 ஆக இருநூற்று நாற்பத்தேழாம். குற்றியலிகரம் குற்றியலுகரங்கட்குத் தனி வரிவடிவமில்லை. இகர உகரம் ஏறிய உயிர்மெய் வடிவங்களின்மேல் அரை மாத்திரையளவைக் குறிக்கும் புள்ளியடையாளம் இடப்படுதலே பழையமரபாகும். நாடு் கேண் மியா என வடிவம் பெறும். இவ்வரிவடிவங்களைச் சேர்ப்பின் வரிவடிவம் 249 ஆகும்.

## சார்பெழுத்துக்கள்

**சூ.9. குற்றியலிகரம் குற்றியலுகரம்**
**ஆய்தம் இம் மூன்றும் சார்பெழுத்தாகும்.**

பொருள் : தனித்தியங்கலின்றி ஒருமொழியைச் சார்ந்து வரும் குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்னும் மூன்றும் சார்பெழுத்துக்களாகும்.

*விளக்கம்:* ஆடியாது என்னும் புணர்மொழி ஆடி + யாது (ஆடித்திங்கள் யாது) எனப் பொருள்தரின் முற்றிய லிகரமாகும். ஆடு + யாது (=ஆடியாது) எனப் பொருள்தரின் குற்றியலிகரமாகும். குற்றியலிகரத்தை வரிவடிவில் உணர ஆடி யாது எனப்புள்ளியிடுதல் மரபு ஓடு உடைந்தது என்னும் புணர்மொழியில் ஓடு என்பது மண்ணோட்டைக் குறிக்கும் பெயர். குற்றியலுகரமாய் அரை மாத்திரை பெற்று ஓடுடைந்தது எனவரும். சாத்தா நில்லாதே ஓடு என்னுமிடத்து ஓடு என்பது ஏவல்வினை அது குறுகாமல் ஒரு மாத்திரையே பெறும். சாத்தானில்லாதே ஓடு என்றான் எனத்தற் கூற்றாகப்பிறிதொரு வினையால் முடியுமிடத்துக் குறுகும். செய்யுளிடத்துப் பாவோசைக்கேற்பக் குறுகியும் குறுகாதும் வரும்.

எ.டு : இருநோக் கிவளுண்கண் உள்ளதொருநோக்கு
நோய் நோக்கொன்றந்நோய் மருந்து

இச்செய்யுளுள் இருநோக்கு என்னுமிடத்துக் குறுகியும் ஒரு நோக்கு என்னுமிடத்துக் குறுகாதும் நின்றன. பிற விளக்கங்கள் அதன் இலக்கணம் கூறும் வழிப்புலப்படும்.

ஆய்தம் வல்லெழுத்தை நலிவோசையாகச் செய்யும் மொழியுறுப்பாக வரும். சுட்டுப் பெயரிடத்து இடையே வரும். லகர ளகர வகர ஈற்றுப்புணர்ச்சி விகாரமாகவும் வரும்.

எ.டு : எஃகு, பஃறி, அஃது, இஃது : பஃறாழிசை முஃடீது அஃகடிய என வரும். ஆய்தத்திற்கு மாத்திரை அரை எனினும் செய்யுளிடத்து ஒரோவழிக் குற்றுயிரைப் போல ஒரு மாத்திரை பெற்று அசைநிறைத்து வரும்.

எ.டு : "அற்றால் அளவறிந் துண்க. அஃதுடம்பு பெற்றான் நெடிதுய்க்குமாறு". இச்செய்யுளில் ஆய்தம் அகரத்தோடு குறிலாக இணைந்து நிரசையாக நின்றது.

"தோன்றிற் புகழொடு தோன்றுக. அஃதிலார் தோன்றலின் தோன்றாமை நன்று." இச்செய்யுளில் அகரத்தின்பின் ஒற்றெழுத்தாய் நேரசையாக நின்றது. அதனான் ஆய்த எழுத்திற்குத் தனிநிலை என்பதும் ஒருபெயராகும்.

## குற்றியலிகரத்தின் இயல்பு

***சூ.10. யகரம்வரக்குற்றுகரத்திரிபினும்
அசைச் சொல் மியாவினும் குற்றிகரம் வரும்.***

பொருள் : குற்றுகர ஈற்றுச் சொற்களின் முன் யகரம் வருமொழியாகப் புணருமிடத்து உகரம் இகரமாகத் திரியும். அத்திரிபின் கண்ணும் மியா என்னும் முன்னிலையசைச் சொல்லின் கண்ணும் குற்றியலிகரம் வரும்.

எ.டு : நாடு, எஃகு, முரசு, முத்து, வண்டு, தெள்கு என்பவற்றின் முன் யாது என்பதனைப் புணர்த்தின். நாகியாது எஃகியாது முரசியாது, முத்தியாது, வண்டியாது தெள்கியாது எனவும் கேண்மியா சென்மியா எனவும் வரும்.

## குற்றியலுகர இயல்பு

சூ.11. தனிக்குறில் தவிர்ந்த எழுத்தாறன்பின்
வல்லொற் றூர்ந்து குற்றுகரம் வருமே.

பொருள் : தனிக்குறில் தவிர்ந்த பிறநெடில், ஆய்தம், உயிர் வல்லொற்று மெல்லொற்று இடையொற்றுக்களின் பின் வல்லெழுத்துக்களை ஊர்ந்து குற்றுகரம் வரும். வல்லெழுத்திணை ஊர்தலாவது குசுடுதுபுறு என வருதல்.

எ.டு : நாகு, ஆடு, எஃகு, முரசு பலாசு, கொக்கு வண்டு, உல்கு எனவரும் இங்ஙனம் தொடர்ந்து நிற்கும் எழுத்துக்களைச் சுட்டி நெடிற்றொடர்க் குற்றியலுகரம் ஆய்தத்தொடர்க் குற்றியலுகரம், உயிர்தொடர்க் குற்றியலுகரம், வன்றொடர்க் குற்றியலுகரம் மென்றொடர்க் குற்றியலுகரம் இடைத்தொடர்க் குற்றியலுகரம் என அறுவகையாக வழங்குவர். உயிர்த்தொடர் என்பது உயிர்மெய்யின் கண் நிற்கும் உயிரைக் கருதி அமைந்த பெயராகும். முரசு - பலாசு என உயிர்த்தொடர் வரும். எ.டு. நாகு, காசு, நாடு, காது, கோபு, ஆறு எனவும், எஃகு, கஃசு, பஃது, கஃபு கஃடு, கஃறு, எனவும், சுக்கு, மச்சு கட்டு, பத்து காப்பு, காற்று எனவும் தெங்கு, மஞ்சு, வண்டு, பந்து, கம்பு கன்று எனவும் தெள்கு, கய்சு, வெய்து, சால்பு (டறக்கள் இடையின மெய்யொடு மயங்கா) எனவும் வரும்.

## ஆய்த எழுத்தின் இயல்பு

சூ.12. ஆய்தம் என்னும் முப்பாற் புள்ளி
குறிற்கும் வல்லெழுத்திற்கும் இடைவரும்

பொருள் : ஆய்தம் என்னும் முப்பாற்புள்ளியாகிய எழுத்து குற்றெழுத்திற்கும் உயிர்மெய் வல்லெழுத்திற்கும் இடையே வரும். குறில் என்பது உயிர்க்குறில் - உயிர் மெய்க் குறில்களை, ஆய்தம் = நுணுகியஓசை. ஆய் = நுணுக்கம். த் எழுத்துப் பேறு அம் சொல்லாக்க விகுதி இது முன்னும் பின்னும் நிற்கும் அஇஉ என்னும் மூன்றுயிர்களின் சாயலையும் பெறுதலின், முப்பரற்புள்ளி எனப்பட்டது. ஃ என்னும் அடையாளத்திற்கும் இதுவே பெயராகும்.

எ.டு : எஃகு, கஃசு - அஃகியகன்ற அறிவு, பஃறி அஃகம், எஃகம் எனவரும் ஆய்தம் அஃகான், மஃகான், விலஃகு என விரித்தல் விகாரமாகவும் வரும் பிற விளக்கங்கள் மேற் கூறப்பெற்றன.

லகரளகரங்கள் புணர்மொழியில் ஆய்தமாகத் திரியும் என்பது மேல் விளங்கும்.

## எழுத்துக்களின் மாத்திரையளவின் விகாரம்

செய்யுள் வழக்காகச் செய்யுளோசையும் இன்னிசையும் யாப்பமைதியும் கருதி உயிர் எழுத்துக்களும் மெய்யெழுத்துக்களும் கொள்ளும் மாத்திரையளவு பெருக்கமும் குறுக்கமும் எழுத்துக்களின் விகாரம் எனப்படும். இவை இலக்கண வழக்கில் அளபெடை என்றும் குறுக்கம் என்றும் கூறப்படும். பவணந்தி முனிவர் இவ்விகாரங்களைச் சார்பெழுத்தாகக் கூறுவர். அவை பொருள் வேற்றுமை செய்யாமையான் சார்பெழுத்து எனக் கொள்ளுதல் வழுவாகும்.

## உயிரளபெடை

சூ.13. செய்யுளிசை கருதின் நெட்டெழுத் தேழும்
ஓரிருமாத்திரை ஏற்றள பெடுக்கும்

பொருள் : செய்யுளுள் சீரும் தளையும் ஓசையும் கருதி இசையை நீட்ட வேண்டியவிடத்து நெட்டெழுத்துக்கள் ஏழும் தமக்கு இனமாகிய குற்றெழுத்தொடு கூடி மூன்று மாத்திரையாகவும் நான்கு மாத்திரையாகவும் அளபெடுத்து இசைக்கும்.

நீட்ட வேண்டிய அளவிற்கு ஏற்பக் குற்றெழுத் திசையை எடுத்துக் கொள்வதனால் அளபெடை எனப்பட்டது. (அளவு + எடை = எடுத்துக்கொள்ளல்) ஐகாரத்திற்கு இகரமும் ஔகாரத்திற்கு உகரமும் இனக் குற்றெழுத்தாக வரும். எடுத்துக் கொள்ளும் ஒவ்வொரு மாத்திரைக்கும் வரிவடிவில் குற்றெழுத்து அடையாளமாக வரும்.

எ.டு : ஆஅ ஈஇ ஊஉ ஏஎ ஐஇ ஓஒ ஔஉ காஅ தீஇ பூஉ, சேஎ தைஇ கோஒ வௌஉ உயிர் அளபெடை ஏற்றபெற்றி முதலிடைகடை மூன்றிடத்தும் வரும். எ.டு. காஅந்தள் தமாஅலம் புறாஅ என வரும்.

'உறாஅர்க் குறுநோய் உரைப்பாய்க் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு'

இக்குறட்பாவில் செறாய் என்பது சீரும் தளையும் நோக்கி இரண்டு முறை அளபெடுத்தது. சீர் புளிமாங்காய் - நிரைநேர்நேர் என்பதாகும். இசையிலும் விளியிலும் நான்கு மாத்திரையின் மிக்கு வரும் எனினும் அவை எண்ணப்படா. சீரும் தளையும் கெடவரின் அவ் அளபெடை எண்ணப் பெறாது அசை நிலையாகக் கொள்ளப்படும்.

எ.டு : கண்ணாஅ என அழைத்து உள்ளம் களி கூர்ந்தாள். பெண்ணாளும் பேதையவள் எனவரும். கண்ணாஅ என்பதில் அளபெடை எண்ணப் பெறாது காட்சி தந்தருள்வாய் கண்ணாஅஅஅ என இசையில் மிக்குவரும். பேச்சு வழக்கில் உயிரிசை நீண்டுவரினும் எழுத்தில் அளபெடையாக எழுதப்பெறா.

## ஒற்றளபெடை

நூ.14. ஙஞண நமன வயலள ஆய்தம்
பாவினுள் அளபெடையாகவும் வருமே.

பொருள் : ஙஞணநமனவயலளஃ ஆகிய பதினொன்றும் செய்யுளுள் சீரும்தளையும் கருதி அளபெடுத்து வரும். அளபெடுக்கும் அவ் எழுத்தே அடையாளமாக அமையும். ஒற்று அளபெடுத்தவழி முன்னும் பின்னும் உள்ள எழுத்துக்களோடு இணையாமல் தனித்து ஒருநேரசையாக நிற்கும். ஒற்றளபெடை மொழியிடையிலும் ஈற்றிலும் குறிலின் பின்னும் குறிலிணையின் பின்னும் வரும். ஆய்தம் இடையில் மட்டுமே அளபெடையாக வரும்.

எ.டு. இலங்ங்கு வெண் பிறைசூ டீசனடியார்க்குக்
கலங்ங்கு நெஞ்சமிலை காண்
எங்ங் கிறைவன் உளனென்பாய் மனனேயான்
எங்ங் கெனத் திரிவாரின்
மடங்ங்கலந்த மனனேகளத்து-விடங்ங்கலந்தானை வேண்டு
அங்ங்கனிந்த அருளிடத்தார்க்கன்புசெய்து
நங்ங்களங்கறுப்பாம் நரம்
அருஞ்ஞ் சுவையுணவு - நெஞ்ஞ் சிருள்நீங்கினான்
பரண்ண் மிசையுறங்கும்பல்லி - கண்ண் கருவினை ஒக்கும்
அருந்ந்து மெல்லடகு - பந்ந் தடித்துவினை யாடு
சுரும்ம்பு சூழ்மலர் - செம்ம் பவளவாய்
மதன்ன் மலரம்பு - பொன்ன் மலர்ந்தன்ன பூ

செவ்வ்வி பெற்றது தெய்வத்தாமரை
செய்ய்யவள் நல்லருள் சேர்க நாளுமே
கழல்ல் புனைந்தனர் கரந்தைவீரரே நெல்ல் விளைந்தது
அருள்ள் நிறைந்தவன் அங்கணன் என்பவே
உள்ள்மலிந்தது மெய்ப்பொருள்
விலஃஃகி வீவீங்கிருள்ஒட்டும். எஃஃகிலங்கிய கையர்
எனவரும்.

## அயல்மொழிச் சொற்களின் எழுத்துக்களை மேற்கொள்ளும் முறைமை

நூ.15. அயல்மொழிச் சொற்சில ஜ ஸ ஷ ஹ க்ஷ
ஒலிகொளும் அவற்றை இ ய ச ட த உயிர் மெய்
ட ச க ஆக்குக உள்ளவாறிசைக்க
சகவில் குறியீடு அமைத்தெழுது தல்நலம்

பொருள் : தத்துவம், அறிவியல், பொறியியல் இயற்பெயராட்சி காரணமாக ஒரு மொழிக்கண் அயல்மொழிச் சொற்கள் வந்து கலப்பது இயற்கையாகும். அங்ஙனம் வந்து கலக்குமிடத்துத் தமிழ் மொழியில் இல்லாத எழுத்தொலிகளும் வரும். அம்முறையில் வடமொழி ஐரோப்பிய மொழி ஆசியமொழிச் சொற்கள் தமிழில் வந்து கலக்குங்கால் அவற்றைத் தமிழ் எழுத்தொலி மரபிற்கேற்பத் திரித்து வழங்குதல் மரபாகும். அயல்மொழிகளிலிருந்து வருவனவற்றுள் ஜ ஸ ஷ ஹ க்ஷ என்பவை மிகுதியாக வரும். அவற்றை இ ய ச ட த எழுத்துக்களையும் ஏற்புடைய உயிரெழுத்துக்களையும் பயன்படுத்தல் மரபாகும். ட் ச் க் ஆகிய மெய்களும் ஈடாக வரும். அயல்மொழிச் சொற்களை ஓசை ஒலி சிதையாமல் வழங்க வேண்டுமிடத்து தமிழ் வரிவடிவ எழுத்துக்களில் சில அடையாளங்களைச் செய்தல் வேண்டும். பெரும்பான்மையும் ச க இரண்டிலும் அடையாளம் செய்து கொள்ளலாம்.

## அயல்மொழி எழுத்துக்களும் அவற்றிற்கு ஈடான தமிழ் எழுத்துக்களும்

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|
| ஜ.J.G. | ஸS | ஷSH | ஹH | F | க்ஷ | Z |
| ச ய இ எ | ச த ற | ச ட | அ.க. | ப | ட் ச் க் | ச |

## எடுத்துக்காட்டு

1.

ஜேஸஸ் - இயேசு, ஏசு ஜன்னல் - சன்னல் புஜம் - புயம்
ஜோசப் - யோசேப்பு ஜம்பு - சம்பு நிஜம் - நிசம்
ஜோர்தான்- யோர்தான் ஜார் - சார் தாஜ்மால் - தாசுமகால்
ஜப்பான் - சப்பான், யப்பான் ஜுலை - சூலை ஜாவா - யாவா

2.

ஸகாரா - சகாரா ஸ்நேகம் - சிநேகம் மாஸம் - மாதம்
ஸர்ப்பம் - சருப்பம் ஸ்காட்லாண்ட் - இசுக்காட்லாண்டு
விஸனம் - விசனம், விதனம் ஸ்ருங்காரம் - சிங்காரம்
ஆஸநம் - ஆதனம், ஆசனம்
ஸுகி - சுகி ஸன் சன் - பஸ்மம் - பற்பம்

3.

புஷ்பம் - புட்பம் லங்காஷயர் - இலங்காசயர்
விஷம் - விடம் ரிஷி - இருடி
ஷண்முகம் - சண்முகம் ருஷபம் - இடபம்
கோஷம் - கோடம் - கோசம் காஷ்மீர் - காசுமீரம்
புஷ்-புசு ரஷ்யா - இரசியா, உருசியா கேஷ்-காசு தேஷ்-தேசம்

4.

ஹிமாசல் - இமாசலம்; ஹாஸ்யம் - ஆசியம்
ஹாரம் - ஆரம் ஹுமாயூன் - குமாயூன்
மஹிஷன் - மயிடம்

5.

COFFEE - காஃபி
OFF - ஆஃப்
FULL - ஃபுல்

6.

பக்ஷம் - பக்கம் - பட்சம்
பக்ஷி - பட்சி -

7.

சாக்ஷி - சாட்சி சாக்கி
மீனாக்ஷி - மீனாட்சி

ZIN - சின்
BAZZAR - பசார் எனவரும்

# அயல்மொழி எழுத்துக்களைக் குறிக்கத் தமிழ் எழுத்துக்களில் செய்துகொள்ளத்தக்க அடையாளக் குறியீடுகள்

சூ.16. சகரத்தின்முன் ஜவ்விற் கொருகால்
ஸவ்விற் கொருபுள்ளி ஷவ்விற்கு இரண்டு
ககரத்தின்முன் ஹவ்விற் கோராய்தம்
க்ஷவ்விற் க்ட்சக குறியீடாகும்
அயல்மொழி வரிவடிவு அறமாகாதே
உள்ளவாறெழுதுதல் இழிவழக்காகும்

பொருள் : அயல்மொழி ஜ எழுத்தைக் குறிக்கச் சகரத்தின் முன் 1ச என ஒரு காலும் ஸகரத்திற்கு .ச என ஒருபுள்ளியும் ஷகரத்திற்கு :ச என இரண்டு புள்ளியும் ஹகரத்திற்கு ஃக என ஓர் ஆய்தமும் அடையாளமாகும் க்ஷகரத்திற்கு க்க், ட்ச என்பவை குறியீடாகும். இவ்வாறு குறியீடு செய்து எழுதாமல் அயல்மொழி எழுத்து வரிவடிவத்தையே எழுதுதல் மொழி அறமாகாது உள்ளவாறு ஒலித்தல் வேண்டி அயல்மொழி எழுத்துக்களைத் தமிழ் எழுத்துக்களோடு கலந்து எழுதுதல் இழிந்த உலக வழக்காகும்.

எ.டு : ஜப்பான் - 1சப்பான் ஹிமம் - ஃகிமம்
ஜன்னல் - 1சன்னல் மஹான் - மஃகான்
ஸகாரா - 0சகாரா ஹுமாயூன் - ஃகுமாயூன்
சாஸனம் - சா0சனம் லக்ஷணம் - இலக்கணம்
புஷ்பம் - பு:ச்பம் லக்ஷியம் - இலட்சியம்
வேஷம் - வே:சம்

ஜப்பான் ஸகாரா ஹுமாயூன் புஷ்பம் என வடமொழி எழுத்தையே எழுதுதல் தமிழ்மொழியமைப்பிற்கு இழிவு செய்தலாகும்.

# அயல்மொழிக்கு ஆய்தத்தைப் பயன்படுத்தலும் முன்னொட்டுச் சேர்த்தலும்

சூ.17. அயல் மொழிக் காய்தம் ஆக்கம் நல்கும்
யரலக்கு அஇஉ முன்னொட்டாகும்

பொருள் : அயல்மொழிச் சொற்கள் சிலவற்றைத் தமிழில் எழுதுமிடத்து ஆய்த எழுத்து ஓரளவு ஆக்கந்தரும் ய ர ல க்களை முதலாக உடைய அயல்மொழிகளை எழுதுமிடத்து அ இ உ ஆகிய உயிர் எழுத்துக்கள் முன்னொட்டாக வரும்.

எ.டு : Office ஆஃபீசு Saffar சஃபர் M.Phil எம்ஃபில் எனவும் அரங்கம், இராமன், உரோமம், இலக்குவன், இயேசு, உலோகம், இயக்கன் உயுத்தம் எனவும் வரும்.

## தமிழில் மொழி முதற்கண் வரும் உயிர் எழுத்துக்கள்

சூ.18. உயிரீராறும் மொழிமுதற்கண்வரும்.

பொருள் : உயிர் எழுத்துக்கள் பன்னிரண்டும் தனித்து மொழி முதற்கண் வரும். எ.டு. அணில், ஆடு, இலை, ஈந்து, உரல் ஊசல், எருது, ஏணி, ஐயன், ஒலி, ஓசை, ஔவியம் எனவரும்.

சூ.19. அஇஉ எ இவை சுட்டுப்பொருளிலும்
எவ்வினா எஞ்சாப்பொருளிலும் ஒகரம்
ஒப்புப்பொருளிலும் மொழி நிலை எய்தும்.

பொருள் : குற்றுயிர் ஐந்தனுள் அ இ உ எ நான்கும் சுட்டுப் பொருளிலும் எகரம் சுட்டுப் பொருளோடு வினாப்பொருளிலும் எஞ்சாப் பொருளிலும் ஒகரம் ஒப்புப் பொருளிலும் ஒருதனி மொழிநிலை பெற்று வரும்.

எ.டு : அவ்வீடு, இவ்வீடு, உங்வீடு, எவ்வளவாயினும் கொள்வேன் எனவும், எவ்வீடு, எப்பொருள் யார் யார் வாய்க்கேட்பினும் எனவும் இஃது ஒவ்வும் அஃது ஒவ்வாது எனவும் வரும். ஒகரம் ஒத்தான், ஒப்பான் என முதனிலை வினைப்பகுதியாயும் வரும்.

சூ.20 உயிர்நெடில் ஏழும் தனிமொழியாயும் வரும்.

பொருள் : உயிர்நெட்டெழுத்துக்கள் ஏழும் தனித்து ஓரெழுத்தொரு மொழியாயும் வரும்.

எ.டு : ஆ (பசு) ஆ (ஆகு) ஈ (சிறுபறவை) ஈ (கொடு) ஊ (தசை - நடுவிடம்) ஏ (அம்பு - செல்) ஐ (தலைமை -- வியப்பு) ஓ (மதகு நீர் தரங்கும் பலகை - நீக்கு) ஔ (முதுமை, சுருங்கு) எனவரும்.

சூ.21. *சிலசொலில் அகரம் எதிர்மறைப்பொருள் தரும்*

பொருள் : தமிழ்ச் சொல் சிலவற்றில் அகரம் எதிர்மறைப் பொருள் தரும் (வடசொல்லாக்கத்தின்கண் பலவாகவரும்).

எ.டு : அவலம் -- அ + வலம் - வலம் = வலிமை அவலம் வலியிண்மை. அநிலம் -- அ + நிலம் -- நிலம் = நிலைபெறல் - நிலை பெறாது அலைதல் -- காற்று. இவை தமிழ், வடமொழிச் சொற்களில் அநீதி - அதருமம், அகாலம் அராகம் எனவரும்.

## மொழி முதல் வரும் உயிர்மெய் எழுத்துக்கள்

சூ.22. *மெய்ம் முதல்வாரா உயிர்மெய்யாய் வரும்.*

பொருள் : மெய்யெழுத்துக்களின் நிலை மூன்றனுள் மெய் என்னும் நிலைமையில் மொழிமுதற்கண் மெய்யெழுத்துக்கள் வாரா - உயிர்மெய்களே வரும். அவை வருமாறு மேற்கூறப்பெறும்.

சூ.23. *கதந பம விவை எல்லா உயிரொடும்*
*சகரம் ஐஔ தவிர்த்தும் முதல் வரும்.*

பொருள் : க த ந ப ம ஐந்தும் எல்லா உயிரொடும் கூடி உயிர் மெய்யாக மொழி முதலில் வரும் சகரம் ஐஔ தவிர்ந்து ஏனைய பத்து உயிர்களோடு கூடி முதலில் வரும்.

எ.டு : கனி, காளை, கிளி, கீறி, குமரி, கூடல், கெளிறு கேளிர் கையர், கொங்கு, கோழி, கௌவை - தவம், தானை, திசை, தீனி, துவரை, தூசு, தெய்வம், தேவர், தையல், தொடி, தோகை, தௌவை, நகர், நாடு, நிலம், நீர், நுகம், நூல், நெல், நேயம், நைவளம், நொச்சி, நோன்பு நௌவி, பகல், பாகல்பிணை, பீற்றல், புகழ், பூதம், பெண், பேதை, பைதல், பொன், போர், பௌவம், மழை, மாடம், மிடல், மீன், முதலை, மூரல், மென்மை, மேன்மை, மையல், மொக்குள், மோத்தை, மௌவல் எனவும், சமம், சாந்து, சிவல், சீர்த்தி, சுடர், சூர், செவி, சேவல், சொல், சோலை எனவும் வரும். சையம், சைலம், சௌரியும் என்பவை வடசொற்கள்.

## ஙகரம்

சூ.24. ஙகரம் அகரமொடு சுட்டு வினாப் பின்வரும்.

பொருள் : ஙகரமெய் அகர உயிரொடு கூடிச் சுட்டெழுத்து வினா எழுத்துக்களின் பின் ஒருசொல்லாய் வரும்.

எ.டு : அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், எங்ஙனம், யாங்ஙனம் எனவரும். ஙனம் என்பது தன்மை, நிலை, முறை என்னும் பொருளில் சுட்டு வினாக்களை அடுத்தேவரும் தனித்து ஙனம் எனம் வாராது.

## ஞகரம்

சூ.25. அ ஆ இ ஈ எ ஏ ஒவ்வொடு ஞவ்வரும்

பொருள் : ஞகரம் அ ஆ இ ஈ எ ஒ என்னும் உயிர்களொடு கூடி மொழி முதல்வரும்.

எ.டு : ஞமலி, ஞாலம், ஞிமிறு, ஞீலம், ஞெகிழி ஞேயம் ஞொள்கல் எனவரும். ஞேயம் என்பது நகரத்தில போலியாகும். ஞீலம் என்பது நகரத்தில் போலியாகும்.

## யகரம்

சூ.26. யகரம் தமிழில் அஆவொடுவரும்
உஊஒ ஔவொடு வடசொல் லாய்வரும்.

பொருள் : யகரமெய் அகர ஆகாரங்களுடன் கூடித்தமிழில் வரும். உஊஒஔ காரங்களொடு கூடி வடசொல்லாய் வரும்.

எ.டு : யவனர், யானை, இவைதமிழ், யுகம், யூகம், யோகம், யௌவனம் இவை வடசொல்.

## வகரம்

சூ.27. அஆஇஈ எஏ ஐஔ
எட்டுயி ரோடும் வகரம் முதல்வரும்

பொருள் : வகரமெய் அஆ இஈ எஏ ஐ ஔ என்னும் எட்டு உயிர்களொடு கூடி மொழிக்கு முதலில் வரும்.

எ.டு : வயல், வாயில், விழைவு, வீரம், வெளி, வேட்கை, வையம் வெளவினான் என வரும்.

## ஓரெழுத்தொரு மொழி உயிர்மெய்கள்

சூ.28. உயிர்மெயுள் ஓரெழுத் தொருமொழி யாம் சில.

பொருள் : உயிர்மெய்யுள் ஓரெழுத்தொரு மொழியாகச் சில பெயராயும் வினையாயும் வரும்.

எ.டு : கா, கூ, கோ, கை, கௌ, சா, சீ, சே, சோ, தா, தீ, து, தூ, தே, தை நா, நீ, நூ, நே, நை, நொ, நோ, பா, பீ, பூ பே, பை, போ, மா, மீ, மூ, மே, மை, மோ, யா, வா, வீ, வே, வை, வெள எனவரும்.

## தமிழில் மொழிக்கு முதல் வாராத எழுத்துக்களும் அவற்றிக்குப் புறனடையும்

சூ.29. டறணன ரலழள மொழிமுதல் வாரா
அயல் மொழியாக டரல அஇஉ
முன்னொட்டுடன் வரும் உலகியல் வழக்கில்
பட்டாங் இசைத்தல் பழியன் றென்ப.

பொருள் : ட ற ண ன ர ல ழ ள எட்டும் தமிழ் மொழிச் சொல்லாக மொழி முதற்கன்வாரா. அயல்மொழிச் சொற்களாக வருமிடத்து ஏற்ற பெற்றி அ இ உ என்னும் உயிரெழுத்துக்களை முன்னொட்டாகக் கொண்டு வரும், உலகியல் வழக்கில் பட்டாங்குப் பேசதல் பழியாகாது என்று கூறுவர்.

எ.டு : டம்பம் - இடம்பம், டமாரம் -- இடமாரம்: ராமன் - இராமன் - ரங்கன் அரங்கன், லிங்கம் - இலிங்கம், லாபம் - இலாபம் லோபம் - உலோபம் எனவரும் இவை தமிழாக்கம். டப்பி, டாக்டர், டிக்கெட், டெலிவிசன், டேரா, டோங்கா, ரங்கூன், ரோகம், ராடார் - ரேடியோ, லட்டு, லாடம், லீலை, லேசர் இவை உலகியல் வழக்கு - ற ண ன ழ ள இவை அயல்மொழியாகவும் வருதலில்லை. றகரம் ரகரமாகவும் ணனக்கள் நகரமாகவும் ழளக்கள் லகரமாகவும் வருதல் பிழையாகும்.

## தமிழில் மொழியிறுதியில் வரும் எழுத்துக்கள்
## உயிரீறு

**நூ.30. எகரம் தவிர் உயிர் மெய்யொடீறாய் வரும்.**

பொருள் : உயிருள் எகரந்தவிர்ந்த பதினோருயிர்களும் மெய்யொடு கூடி ஈறாக வரும். எ.டு. விள, பலா, கனி, கோடீ, கடு, ஆடூ, நே, மரை, நொ, போ, கௌ எனவரும். ஒரெழுத்தொரு மொழியாக நெட்டுயிர்கள் வருமொழியாக வருமிடத்து முதலாகவும் கொள்ளப்படும்.

**நூ.31. குற்றுயிர் அளபெடை ஈறாய் நிற்கும்.**

பொருள் : குற்றுயிர் ஐந்தும் செய்யுள் வழக்கில் அளபெடையீறாக வரும்.

எ.டு : விளாஅ, குரீஇ,, மகடூஉ, தேஎ, கோஒ எனவரும்.

## மெய்யீறுகள்

**நூ.32. ஞணநம னயரல வழள குற்றுகரம்**
**மொழியீ றாகும் ஞ ந இரு சொற்கணாம்.**

பொருள் : ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள என்னும் புள்ளிமெய் குற்றுகரம் ஆகிய பன்னிரண்டும் மொழியிறுதியாக வரும். அவற்றுள் ஞவும் நவ்வும் இரண்டே சொற்களில் வரும்.

எ.டு : உரிஞ், உறிஞ். மண், வெரிந், பொருந், மரம், புலன், வேய், நகர், கடல் தெவ், யாழ், கேள் எனவரும்.

சூ.33. அயல்மொழிக்கண் பிற சிறுபான்மை வரும்.

பொருள் : அயல்மொழிச் சொற்களாயின் ககர முதலிய ஏழும் சிறுபான்மை ஈறாக வரும்.

எ.டு : கிரீக், பரூக், மேச், வாட்ச், தாட், மீட், பாத், ஒர்த், பாப், பிரதாப், பஞ்சாப், திங் எனவரும் றகரமெய் இறுதியாக வாராது.

## மொழியிடை நிற்கும் எழுத்துக்கள்

சூ.34. அளபெடையன்றி உயிரிடைவாரா

பொருள் : அளபெடையாகவன்றி உயிர் எழுத்துக்கள் மொழியிடையே வாரா.

எ.டு : காஅவிரி, மீஇகான், கூஉவிளம், தேஎவன், கோஒவில் என அளபெடையாக வரும். இவை பெரும்பான்மையும் செய்யுள் வழக்காகவே வரும்.

சூ.35. பதினெண்புள்ளியும் மொழியிடையே வரும்.

பொருள் : பதினெட்டுப்புள்ளி மெய்களும் மொழி இடையேவரும்.

எ.டு : மக்கள், திங்கள், நொச்சி, மஞ்சள், வட்டம், வண்ணம், புத்தன், மைந்தன், கப்பல், கம்பன், வெய்யில், போர்வை, கல்வி, தெவ்வர், வாழ்வு, வேள்வி, கற்பனை, இன்பும் எனவரும்.

## தனிமொழி புணர்மொழிகளுக்கு இடையே மெய்யும் உயிர்மெய்யும் இணைந்து நிற்குமிடத்துத் தமிழ்மொழியில் இணைந்து நிற்றற்குரியவை இடைநிலை மெய்ம் மயக்கம்

சூ.36. கசதப தம்முயிர் மேய்யொடு தாம் வரும்
அயல்மொழி யாயினிவ் வரையறையில்லை

பொருள் : மொழியிடையில் கச தப என்னும் நான்குமெய்யும் மேல்வரும் தம் உயிர்மெய்யொடு மட்டுமே மயங்கி இணைந்து வரும். அயல்மொழியாயின் இவ்வரையறையில்லை.

எ.டு : மக்கள், தச்சன், நித்திலம், கப்பல் - பாக்கு, கச்சு, முத்து, செப்பு எனவரும்.

அயல்மொழி - பக்தி, விக்ரகம், விச்வம், மத்யமம், ஆத்ரேயன், சப்தம், அப்ரகாம், பாக்யம், பத்மம், காப்ரி எனவரும். இவற்றை தமிழாக்கம் செய்யுமிடத்து பத்தி, விக்கிரகம், விசுவம், மத்திமம் ஆத்திரேயன், சத்தம், அப்பிரகாம், பாக்கியம், பதுமம், காப்பிரி என வரும்.

**சூ.37. அயல்மொழிக்கிடைவரும் இவற்றுமேல் இகரம்**
**உகரம் தரல் தமிழ்நெறி, சில சிதையும்**

பொருள் : அயல்மொழிக்கிடையே கசதப நான்கும் தம்மொடு மயங்காமல் பிற எழுத்துக்களோடுவரின் இவற்றின் மேல் இகரத்தையோ உகரத்தையோ கூட்டிக்கூறுதல் முறை. சில சொற்களைச் சிதைத்து வழங்கலும் மரபு. மெய்யெழுத்துக்களை முதலாகவும் ஈறாகவும் கொண்டு வரும் அயல்மொழிச் சொற்களுக்கும் இம்முறைமை பொருந்தும்.

எ.டு : வாத்யம் - வாத்தியம் (வாச்சியம் என்பது தமிழ்) செளக்யம் - சவுக்கியம் - பக்வம் - பக்குவம். அர்க்கன் - அருக்கன், தர்மம் - தருமம் எனவும் ப்பிகாஷ் - பிரகாசு, ஆபீஸ் - ஆபீசு எனவும் வரும்.

## ரகரழகரங்களின் இயல்பும் பிறவற்றின் மயக்கமும்

**சூ.38. ரழத்தம் மொடுந்தனிக் குறிலொடும் வாரா**
**ஏனைஈ ராறும் இருவகை யினும் வரும்.**

பொருள் : ரகரமும் ழகரமும் தம்முயிர் மெய்யொடு மயங்கா தனிக்குறிலின் பின் ஒற்றாக வாரா. பிற ஙஞடணநமயலவளறன என்னும் பன்னிரண்டும் தம்முயிர் மெய்யொடும் பிற உயிர்மெய்யொடும் மயங்கி வரும். ரழக்கள் நெடிற்கீழும் தொடர் எழுத்துக்களின் பின்னும் வரும்.

எ.டு : ஏர், காழ், புகர், புகழ் எனவும். பீர்க்கு, வாழ்க்கை எனவும் வரும் பிறபன்னிரண்டும். இங்ஙனம், நங்கை - மஞ்ஞை மஞ்சள், வட்டம், வேட்கை, எண்ணம் பண்டம் - வெந்நீர்பந்தம் - செம்மல் அம்பரம்; வெய்யில், பொய்தல், மல்லல் நல்கல் - நவ்வி,தெவ்நலம் - வெள்ளம் - கொள்கை, வெற்றி - புற்கை, மன்னன் புன்கம் எனவரும்.

## டற

**சூ.39 டறமுன் தாமும் கசபவும் மயங்கும்**

பொருள் : டகரறகரங்கள் தம் உயிர் மெய்யொடும் கசப உயிர்மெய்யொடும் மயங்கிவரும்.

எ.டு : தோட்டம், உட்கு, வெட்சி, ஞாட்பு எனவும் கூற்றம், கொற்கை, முயற்சி, வெற்பு எனவும் வரும்.

## ணன

**சூ.40. ணனமுன் இனங்கசஞபமயவ வரும்.**

பொருள் : ணகரஒற்று தன்னொடும் தன் இனமாகிய டகரத்தொடும் க ச ஞ ப ம ய வ என்னும் உயிர்மெய்களொடும். னகரம் தன்னொடும் தன் இனமாகிய றகரத்தொடும் கசஞபமயவ உயிர்மெய்களொடும் மயங்கி வரும்.

எ.டு : அண்ணல், கொண்டல், விண்கலம், வெண்சீர், வெண்ஞமலி, பண்பாடு, திண்மை, பண்யாழ், கண்வலை எனவும், தென்னை, மன்றம், புன்கு, நன்செய், பொன்ஞாண், இன்பம், நன்மை, பொன் யானை, தென்வயல் எனவும் வரும்.

## ஞநமவலள

**சூ.41. ஞநமுன் இனம்ய, மம்முன்பயவ**
**வம்முன் வவும் லள முன்கசபயவவாம்**

பொருள் : ஞநக்கள் தாமும் தம் மினமும் யகர உயிர் மெய்யும் மகரம் தானும் பயவ உயிர் மெய்யும் வகரமெய் தானும் யவஉயிர்மெய்யும் இணைந்து மயங்கும்.

எ.டு : ஞ - மஞ்ஞை, மஞ்சள் உறிஞ்யாது எனவும்
ம - செம்மல், கம்பம், நிறம் யாது, நிறம் வலிது எனவும்
வ - செவ்வி, தெவ்யாது எனவும்
ல - மல்லல், வெல்க, வல்சி, மால்பு, நல்யானை, செல்வம் எனவும்

ள - அள்ளல், உருள்கை, வாள்சிறிது, கொள்ப, வேள்யார், வாள் வலிது எனவும் வரும்

## ஈரொற்றுடனிலை

சூ.42. யரழ ஒற்றின்முன் கசதபஙஞநம
எனுமிவை இணைந்தீ ரொற்றாயும் வரும்

பொருள் : யரழ என்னும் மூன்று ஒற்றுக்களின் முன் கசதபஙஞநம என்னும் எட்டும் உயிர் மெய்யாக வருதலேயன்றி ஒற்றாகவும் இணைந்து மயங்கிவரும்.

எ.டு : (ய) வாய்க்கால், வாய்ச்சி, பாய்த்துள், வாய்ப்பு வேய்ங்குழல், மெய்ஞ்ஞானம் ஆய்ந்துரை, மெய்ம்மை எனவும் (ர) தேர்க்கால், நேர்ச்சி, கார்த்திகை, பார்ப்பு ஆர்ங்கோடு, கூர்ஞ்சிறை, நேர்ந்தனர், கூர்ம்பனி எனவும் (ழ) வாழ்க்கை, சூழ்ச்சி, வாழ்த்து, காழ்ப்பு, பாழ்ங்கிணறு, பாழ்ஞ்சிறை, வீழ்ந்தான் - பாழ்ம் பயிர் எனவும் வரும்.

## புறஎடை

சூ.43. உயிர்மெய் இணைந்துவரற் கில்லை வரையறை

பொருள் : உயிர்மெய் என்பது உயிரொடு கூடிய மெய்யாகலின் அவை பேச்சிலும் எழுத்திலும் இணைந்து வருதற்கு வரையறையில்லை. சொல்லாக்கங்களுக்கு ஏற்பவரும் இவ்வாறே உயிர் எழுத்துக்கள் முதலாக அடுத்து வரும் உயிர்மெய்களும் வேண்டியாங்கு வரும். உயிரின்பின் வரும் வல்லெழுத்துயிர் மெய்கள் சிறிது நலிந்திசைக்கும்.

## குற்றியலிகரம் வரும் முறைமை

சூ.44. தன்னொழி மெய்ம்முனும் குற்றுகரத்தின்முனும்
யகரம்புணரின் குற்றிகரம் இடை வரும்

பொருள் : தன்மெய்தவிர்ந்த மெய்யீறுகளின் முன்னும் குற்றியலுகரத்தின் முன்னும் யகரம் வருமொழியாக வருமிடத்து நிலைமொழியில் குற்றியலிகரம் இடையே வரும்.

எ.டு : உறிஞியாது, மண்ணியாது, வெரிநியாது, குலமியாது அவனியாவன், சுவரியாது, அகலியாது, தெவ்வியாது, புகழியாது, வேளியாவன் எனவும் நாகியாது வரகியாது எஃகியாது, தேக்கியாது, கொங்கியாது, உலல்கியாது எனவரும் - இருசொற்களும் பிளவுபடாமல் இசைக்குமிடத்து இகரம் வரும் விட்டிசைப்பின் உறிஞ்யாது - மண் யாது என வரும். பேச்சு வழக்குப் பெரும்பாலும் விட்டிசையாகவே நிகழ்தலின் செய்யுள் வழக்கில் மட்டுமே பெரும்பான்மையான புணர்ச்சிவிதிகள் அமைந்து வருகின்றன.

## எழுத்துக்கள் உருவாகிப்பிறக்கும் முறைமை

பகுபதச் சொற்களின் ஆக்கத்தின் கண்ணும் சொற்கள் ஒன்றுடன் ஒன்று புணர்ந்து தொடருமிடத்தும், எழுத்தொலி மிகுதல் பிறிதாகத் திரிதல் வெளிப்படாமல் குன்றுதல் ஆகியவற்றிற்குக் காரணம் எழுத்துக்களின் பிறப்பிடங்களும் வாயுறுப்புக்களால் உருவாகும் நிலையும் வெளிப்படுத்தும் முறையுமே யாதலின் எழுத்துக்களின் பிறப்பிடம் முயற்சிகளை நன்கு தெரிதல் மாணாக்கர் கடனாகும்.

## எழுத்துக்கள் பிறப்புப் பற்றிய பொதுவிலக்கணம்

சூ.45. உந்திமுத லாயெழும் நாதவளி உச்சியின்
நிறைந்து பின் நெஞ்சு குரல்வளை மூக்கில்
நிலைபெற் றண்ணம் இதழ்நாப் பல் எனும்
உறுப்பான் உருவாய்ச் செவிப்புலனாக
வெளிப்படல் இசைஒலி எழுதுப்பிறப்பே

பொருள் : மூலாதாரத்தினின்றும் குண்டலி என்னும் சத்தி உந்துதலால் உந்தி முதலாக எழும் நாதவளி ஓங்கி உச்சிவரை சென்று நிறைந்து சிந்தையைத் தூண்டிப்பின் இறங்கி நெஞ்சு குரல்வளை மூக்கு வளை இடமாக நிலையுற்று அண்ணம் வரயிதழ் நாவு பல் என்னும் உறுப்புக்களால் உருப்பெற்றுச் செவிப் புலனாக வெளிப்படுதல் எழுத்துக்களின் பிறப்பியல்பாகும்.

## பிறப்பிடமும் எழுத்துக்களும்

சூ.46. உயிரோடிடையினம், வலிமெலி முறையே
மிடறுரம் மூக்கின் வளியான் வெளிப்படும்.

பொருள் : உயிரெழுத்துக்களும் இடையின மெய்யும் மிடற்று வளியாலும் வல்லின மெய்கள் நெஞ்சு வளியாலும் மெல்லின மெய்கள் மூக்கு வளியாலும் வெளிப்படும்.

## உயிர் - அஆ

சூ.47. வாயங்காப்ப அஆ பிறக்கும்

பொருள் : உயிருள் அஆ இரண்டும் அண்ணம் மேல் எழவாய் அங்காத்தலால் பிறக்கும்.

## இஈஎஏஉஊஒஓ

சூ.48. வாயிதழ்விரிய இஈயும் எஏயும்
குவிய உஊவும் ஒஓவும் பிறக்கும்

பொருள் : அங்காந்த நிலையில் வாயிதழ்கள் இருபுறமும் விரிய இ ஈ எ ஏ என்னும் உயிர்களும் வாயிதழ் மேலோங்கிக் குவிய உ ஊ ஒ ஓ என்னும் நான்கு உயிர்களும் பிறக்கும்.

இஈ விரிவினும் எஏ விரிவு சிறிது வேறுபடும் உஊ விரிவினும் ஒஓ விரிவு சிறிது வேறுபடும். எஏ இரண்டும் இ+அ வின் கலப்பிசையாகும். ஒஓ இரண்டும் உ+அ வின் கலப்பிசையாகும். குறில் நெடில் மாத்திரை அளவிற்கு ஏற்ப இதழ் செயற்படும்.

## ஐ.ஔ

சூ.49 அங்காந்து வாயிதம் ஓங்கி விரியவும்
குவியவும் ஐ ஔ கூட்டிசை பிறக்கும்

பொருள் : அகரத்திற்கு அங்காத்தல் போல வாய் அங்காந்து பின்விரிய ஐகாரமும் வாய் அங்காந்து குவிய ஔகாரமும் ஆகிய கூட்டிசை எழுத்துக்கள் பிறக்கும் (அ+இ=ஐ. அ+உ=ஔ - எனவரும்)

## மெய்எழுத்துக்களின் பிறப்பு. கங சஞ டணறன

சூ.50. முதல்நா அண்ணம் இயையக் கஙவும்
இடைநா அண்ணம் இயையச் சஞவும்
கடைநா அண்ணம் இயையட் டணவும்
நானுனி அண்பல் அடியுற றனவும்
உரத்தொலி மூக்கொலி இசையாற் பிறக்கும்

பொருள் : தொண்டையிலிருந்து தொடங்கும் நாவின் முதலும் முதல் அண்ணமும் நன்கு பொருந்தி நிற்க நெஞ்சு வளியால் ககரமும் மூக்கு வளியால் ஙகரமும் பிறக்கும் நாவின் இடைப்பகுதியும் அண்ணத்தின் இடைப்பகுதியும் நன்கு பொருந்தி நிற்க நெஞ்சு வளியால் சகரமும் மூக்கு வளியால் ஞகரமும் பிறக்கும். நாவின் கடைப்பகுதியும் கடையண்ணமும் நன்கு பொருந்தி நிற்க நெஞ்சு வளியால் டகரமும் மூக்கு வளியால் ணகரமும் பிறக்கும். நாவின் நுனி அண்பல்லடியைப் பொருந்தி நிற்க நெஞ் வளியால் றகரமும் மூக்கு வளியால் னகரமும் பிறக்கும். (அண்பல் என்பது நாவினிம்பால் அணுகப்படும் பற்களின் அடிப்பகுதி)

### த.ந.

சூ.51. மேல்வாய் அண்ணம் பல்லடிநாவுறத்
தகர நகரம் முறையே பிறக்கும்.

பொருள் : மேல்வாய் அண்ணத்தின் பல்லடிகளை நா நுனி நன்கு பொருந்தி நிற்க நெஞ்சு வளியால் தகரமும் மூக்கு வளியால் நகரமும் முறையே பிறக்கும்.

### ப.ம

சூ.52 ஈரிதழியையப் பம்மப்பிறக்கும்.

பொருள் : இதழ் இரண்டும் நன்கு பொருந்தி நிற்க நெஞ்சு வளியாற் பகர மெய்யும் மூக்கு வளியால் மகர மெய்யும் பிறக்கும்.

## ய

சூ.53. அடிநா அண்ணம் படிய யவ்வரும்.

பொருள் : அடிநா அண்ணத்தில் விரிந்துபடிய மிடற்றுவளியால் யகரம் பிறக்கும்.

## வ

சூ.54. மேற்பலைக் கீழிதழ் நனியுற வவ்வரும்.

பொருள் : மேற்பல்லைக் கீழிதழ் நுனி சென்று நன்கு பொருந்தமிடற்று வளியால் வகரம் பிறக்கும்.

## லள

சூ.55. நாவிளிம்பு தடித்துயர்ந் தண்பல் அடியினை
ஒற்றவும் வருடவும் லள கான் பிறக்கும்

பொருள் : நாவின் விளிம்பு தடித்து வளைந்து மேலெழுந்து அண்பல்லின் அடியை ஒற்ற லகரமும் வருடளகரமும் மிடற்றுவளியால் முறையே பிறக்கும்.

## ரழ

சூ.56. அண்ணம் நுனிநா வருடவும் அணரவும்
ரகார ழகாரம் முறையே பிறக்கும்.

பொருள் : நாநுனிமேலெழுந்து அண்ணத்தை ஒட்டாமல் வருடரகர ஒற்றும் நாவளைந்து அணர ழகரமும் முறையே மிடற்றுவளியாற் பிறக்கும். (அணருமுதல் = வளைந்து அசைதல்)

## ஆய்தம். பிறப்பியல்பு

சூ.57. அங்காந் துகுப்ப ஆய்தம் தோன்றும்

பொருள் : வாய் அங்ககாந்து மிடற்றினின்றும் நாதவளியை உகுப்ப ஆய்த ஓசை பிறக்கும் அங்காத்தலால் அகரமும் உகுத்தலால் குகரமும் முன்னும் முன்னும் பின்னும் இசைக்கும்.

## புறனடை

சூ.58. எடுத்தல் படுத்தல் நலிதல் உழத்தல்
நிலையால் சிறிதவை திரிபுற் றமைமே

பொருள் : சில எழுத்துக்களுக்குப் பிறப்பிலக்கணம் ஒருங்கு கூறியிருப்பினும் ஓங்கியிசைத்தல் தாழ்த்திசைத்தல் நலிந்திசைத்தல் உறழ்ந்திசைத்தல் காரணமாக அவை தம்முள் சிறிது சிறிது வேறுபட்டு அமையுமென்க. அஃதாவது அகரத்திற்கு ஒரு மாத்திரையளவு அண்ணம் மேல் எழும். ஆகாரத்திற்கு இரண்டு மாத்திரையளவு மேலெழும். இஃது எடுத்தல் விகாரம் ககரத்திற்கு அண்ணமும் நாவும் அழுத்தமாகப் பொருந்தும் ஙகரத்திற்குச் சிறிது மென்மையாகப் பொருந்தும். இஃது நலிதல் விகாரம் பிறவற்றையும் இவ்வாறே இசைத்தும் ஒலித்தும் கண்டுகொள்க.

## உயிர்மெய் பிறப்பியல்பு

சூ.59. ஒலிப்பிலா மெய்பிறப் பிடத்துயிர் பொருந்தி
உரத்தொடு குரல் வளை மூக்கு வளியுந்த
ஒற்றொலி முன்னும் உயிர்ப்பிசை பின்னுமாய்
உயிர்மாத் திரைபெற் றுயிர்மெய் தோன்றும்.

பொருள் : ஒலிப்பின்றி வாயுறுப்புக்களால் வடிவுற்று நிற்கும் மெய்யின் பிறப்பிடத்தில் உயிர்ப்பிசை பொருந்தி நெஞ்சுவளி மிடற்றுவளி மூக்கு வளிகள் அவ்வம் மெய்களுக்கு ஏற்ப உந்துதலான் ஒற்றொலி முன்னும் உயிர்ப்பிசைபின்னுமாக உயிர்ப்பிசையின் மாத்திரையே மாத்திரையளவாய்க் கொண்டு உயிர் மெய் எழுத்துக்கள் தோன்றும் - இவை நிலை மொழியீறாக நிற்குமிடத்து உயிரீறாகவும் வருமொழி முதலாக நிற்குமிடத்து மெய் முதலாகவும் அமைந்துபுணரும் - சொல்லமைப்பில் ஓரெழுத்தாகக் கொள்ளப்படும். (உயிர்மெய் என்பது வினைத்தொகை என்பதும் மெய்யின் வகை என்பதும் மேற்கூறினாம்.)

## மாத்திரையாவது இதுவெனல்

**சூ.60. கண்ணிமை கைந்நொடிக் காலமோர் மாத்திரை.**

பொருள் : கண்ணிமைகள் இமைக்கும் கால அளவும் கைவிரல் நொடிக்கும் கால அளவும் ஒரு மாத்திரைக் கால அளவாகும் - ஒன்றின் உட்பிரிவை நன்குணர்தற்காக கைந்நொடியளவு கூறப்பட்டது. "உன்னல் கா.வே ஊன்றல் அரையே முறுக்கல் முக்கால் விடுத்தல் ஒன்றே" என்ப.

## எழுத்துக்களின் மாத்திரை

**சூ.61 புள்ளிமெய் சார்பெழுத் தரைமாத் திரை உயிர்க்**
**குறிலொற்றளபெடை ஐஔக் குறுக்கம்**
**ஒன்று நெடிலிரண்டுயிரளபதன் அளவே.**

பொருள் : மொழியிடையிலும் ஈற்றிலும் ஒலிப்புற்று வரும் புள்ளிமெய் பதினெட்டும் குற்றியலிகரம் முதலிய சார்பெழுத்து மூன்றும் அரைமாத்திரை பெறும் உயிர்க்குறிலும் ஒற்றளபெடைகளும் ஐகாரஔகாரக் குறுக்கங்களும் ஒரு மாத்திரை பெறும் (ஐகார ஔகாரக் குறுக்கம் முதற்கண் வருமிடத்து ஒன்றரை மாத்திரையும் பெறும்) நெடில் உயிர்கள் இரண்டு மாத்திரை பெறும். உயிரளபெடை அளபெடுத்த ஓசைக்கேற்ப மூன்று மாத்திரையும் நான்கு மாத்திரையும் பெறும் மகரமெய் குறுகியவிடத்துக் கால் மாத்திரை பெறுமென்றுகொள்வது மரபு.

## மாத்திரைக்குப் புறனடை

**சூ.62. பண்டமாற் றிசை விளி நாவலில், உயிரும்**
**ஒற்றும் அளபிறந் திசைத்தலும் மரபே**

பொருள் : விலை கூவி விற்கும் பண்டமாற்றின் கண்ணும் இசைப்பாவின் கண்ணும், விளித்தற்கண்ணும், சிலர் கூடிப் புரியும் தொழில் நிலையில் எழுப்பும் ஓசையின் கண்ணும் உயிரும் ஒற்றும் அளவிறந்து இசைத்தலும் மரபாகும்.

எ.டு : கொட்டிக் கிழங்கோஒஒஒ கிழங்கு' உப்போஒஒ உப்பு - இவை பண்டமாற்று. வாழ்கஅஅஅ வாழ்கவேஎ,' கண்ணேஎஎஎ என் கண்மணியேஎஎஎ கண்ணுறங்கு இவை இசை. கண்ணாஅஅஅ! தோழீஇஇஇ! இவை விளி. நாற்று நடவு - வண்டியில் பாரம் ஏற்றல் - தேர்வடம் பிடித்திழுத்தல் முதலிய செயல்களில் நாவலோசை வரும். ஒன்றை அளந்து தருமிடத்து ஒரோஒஒஒ ன் ஒன்று ஈரோஒஒஒ ன் ரெண்டு என நாவலேலோசை வரும்.

## எழுத்துச்சாரியைகள்

சூ.68. அவ்வொடு கரம்கான் காரம் எழுத்துச்
சாரியை னாவன் னாவும் நடைபெறும்.

பொருள் : தனி ஒரு எழுத்தைச் சுட்டிக் கூறச்சார்பாக வரும் இடைச் சொல் எழுத்துச் சாரியை எனப்படும் இலக்கணத்தில் அகரம், கரம், கான், காரம் என்பவை சாரியையாக வரும் வழக்கில் னா அன்ன என்பவை வரும்.

எ.டு : வல்லினம் என்ப கசடதபற. கசடதபற என்பவை புள்ளிமையை உணர்த்துமிடத்து அவை 'அ' என்பதைச் சாரியையாகப் பெற்றனவாகும். உயிர் உயிர் மெய் குறில் நெடில்களைச் சுட்ட அகரம் ககரம் அஃகான் மஃகான் அகாரம் மகாரம் எனவும் ஆகாரம் ஐகாரம் எனவும் ஐகான் ஔகான் எனவும் வரும் வழக்கில் ஆனா கானா ஆவன்னா காவன்னா என வரும். இவை அன்ன என்னும் உருபின் விகாரங்களாகும் ஆய்த எழுத்தை அஃகேனம் எனக் கூறுதல் மரபு. அது என்ன என்னும் உருபின் விகாரமாம் இவ்வை பெரும்பான்மையும் வரிவடிவ எழுத்தைச் சுட்டுமிடத்து வரும். உயிர்மெய் நெட்டெழுத்துக காரம்காரம் இவற்றைப் பெறா வன்னா என்பதை மட்டும் வழக்கில் பெறும்.

## போலி அல்லது மாற்றெழுத்து

சூ.64. ஐஔவிற்கு அய் அவ் போலியாய்க் குறுகும்.

பொருள் : ஐகார ஔகார உயிர் எழுத்துக்களுக்கு முறையே அய் என்பதும் அவ் என்பதும் போலியாக வரும். போலியாக வருமிடத்து மாத்திரை குறுகும்.

எ.டு : ஐயன் - அய்யன், மையல் - மய்யல் - வலையன் - வலயன் - காலை - காலய் எனவும் ஔவை - அவ்வை, மௌவல் - மவ்வல் எனவும் வரும். இவை மொழி முதற்கண் ஒன்றரை மாத்திரையும் இடையில் பின் உயிர் வருமிடத்து ஒரு மாத்திரையும் பெறும். ஔகாரம் மொழி முதற்கண் மட்டும் வரும்.

சூ.65. அஐ முதலிடை சஞயமுன் போலியாம்

பொருள் : அகரமும் ஐகாரமும் மொழி முதலிலும் இடையிலும் ச ஞ ய என்னும் எழுத்துக்களுள் ஒன்றற்கொன்று போலியாக வரும்.

எ.டு : பசாசம் - பைசாசம், மஞ்சு - மைஞ்சு, மயல் - மையல் எனவும் அமைச்சு - அமச்சு, இலஞ்சி - இலைஞ்சி அரையர் - அரயர் எனவும் வரும்.

சூ.66. ரவ்விற்குலகரமும் ஞவ்விற்கு நகரமும்
யவ்விற்குச் சகரமும் மவ்விற்கு னகரமும்
றவ்விற்கு டகரமும் சில சொலிற் போலியாம்

பொருள் : இருவகை வழக்கிலும் பொருள் திரியாமல் ரகரத்திற்கு லகரமும் ஞகரத்திற்கு நகரமும் யகரத்திற்குச் சகரமும் மகரத்திற்கு னகரமும் றகரத்திற்கு டகரமும் சில சொற்களில் மாற்றெழுத்தாகும். போலியாக வரும்.

எ.டு : பந்தர் - பந்தல், சாம்பல் - சாம்பர் எனவும் ஞாயிறு - நாயிறு, ஐந்நூறு மைந்தர் - மஞ்சர் எனவும் நேயம் நேசம், பசலை பயலை, வசம் வயம் எனவும் மனம், மனன், நலம் நலன், புலம் புலன் எனவும் சிற்றுக்குருவி சிட்டுக்குருவி குற்றம் சாற்றினர் குற்றம் சாட்டினார் எனவும் வரும்.

## 2
## தனிமொழியாக்கம் அல்லது பதவியல்

சூ.67 ஓரெழுத்து மொழியிரண் டெழுத்துமொழி அவற்றுமேல்
தொடர்மொழி எனமுத் திறமா வரும் பதம்
பகாப்பதம் பகுபதம் என இரு வகைப்படும்.

பொருள் : உயிர், உயிர்மெய், புள்ளிமெய் ஆகிய எழுத்துக்கள் யாதானுமொரு பொருளைச் சுட்டி ஓரெழுத்தொருமொழி ஈரெழுத்தொருமொழி இரண்டற்கும்

மேல் தொடர்ந்த தொடர் மொழி என முத்திறமாக ஆக்கம் பெற்று வரும் மொழிகள் பதம் எனப்படும். அப்பதங்கள் பகாப்பதம் பகுபதம் என இருவகைப்படும்.

எ.டு : ஆ ஈ கா கை, வர போ வெள நொது இவை ஓரெழுத்தொரு மொழி ஆதி, நீதி, இரா, புறா, கூனி, காணி, அல், கல், ஆல், கால், பண், பாண் இவை ஈரெழுத்தொருமொழி. அமுது, இரவு, அமைதி, அறம், அன்பு, பளிங்கு, அமிழ்தம், கடவுள், பாண்டியன், கார்த்திகை உத்திராடம், உத்திரட்டாதி என வருவன இரண்டிறந்திசைக்கும் தொடர்மொழி - வினைமுற்றும் வினையாலணையும் பெயர்களும் இங்ஙனம் பல எழுத்துக்களால் அமைந்து வரும்.

## பகாப்பதம்

சூ.68. *பெயர்வினை இடையுரி பொதுப்பட முதனிலைப்*
*பகுதி யளவாய் நிற்பன பகாப்பதம்.*

பொருள் : விகுதி முதலிய உறுப்புக்களைப் பெறாதவிடத்துப் பெயர் வினை இடை உரி ஆகிய சொற்களுக்குப் பொதுப்படப் பகுபதத்திற்கு முதனிலைப் பகுதியளவாக ஒரு பொருள் தந்து நிற்பவை பகாப்பதம் எனப்படும்.

எ.டு : கட, சேர், உருள், கொல், கடி என்றாற்போல வரும். கட என்பது கடம், கடன், கடப்பு, கடந்தான், கடகட என ஒலித்தது எனவும். சேரி, சேர்ப்பன் சேர்ந்தான், சேர்கட்டினான் எனவும் - கொல், கொலை, கொல்லை, கொல்லம், கொன்றான். என்கொல் எனவும் கடி - கடிகை, கடிந்தான், கடிமலர் எனவும் பெயர்வினை இடை உரிகளுக்குப் பொதுவாய் விகுதி முதலிய பெற்றவழி ஒன்றற்குரியதாய் நிற்குமாறு காண்க.

## பகுபதம்

சூ.69. *பகுதியொடு இடைநிலை சாரியை விகுதி*
*ஏற்றுப் பெயர் வினை யாய்வரும் பகுபதம்*

பொருள் : பகாப்பதமாகிய பகுதியொடு இடைநிலை சாரியை விகுதி ஆகிய உறுப்புக்களை ஏற்றபெற்றி ஏற்றுப் பெயர்ச் சொல்லாகவும் வினைச் சொல்லாகவும் வருவன பகுபதம் எனப்படும்.

எ.டு : ஆயன், ஆய்ச்சி, குறவன், குறத்தி, நாடன், ஊரன், சேர்ப்பன், மலையன், மலைச்சி, அகத்தன், புறத்தன், ஆதிரையான், பரணன், கண்ணன், செவியன், கரியன், வெளியன், பாணர், பாடினி, கூத்தன் எனப் பெயர்ப் பகுபதங்களும் உண்டான் உண்கிறான், உண்பான், உண்ணான், உண்ட, உண்டு உண்கும் என வினைப்பகுபதங்களும் வரும்.

கூனன், கூனி - பகுதி விகுதி என்னும் இரண்டுறுப்புக்களால் வந்த பகுபதம் அறிஞன், உண்டான் - பகுதி இடைநிலை விகுதி என மூன்றுறுப்புக்கள் வந்த பகுபதம் மன்னவன், உண்டனன் - பகுதி இடைநிலை சாரியை விகுதி என்னும் நான்குறுப்புக்ளான் வந்த பகுபதம். சாரியை விகுதியை ஏற்பதற்காக வரும். சிறுபான்மை இடைநிலைக்குத் துணையாகவும் வரும்.

வண்ணத்தன் - வண்ணத்தி அத்துச்சாரியை உண்டனன் - அன்சாரியை செட்டிச்சி - ச் சாரியை உண்குவான் குசாரியை.

இனி இடைநிலை புணர்ச்சி நிலையான் எய்தும் நிலையில் சந்தி என்றும் பிறவாறு எய்தும் நிலையை விகாரம் என்றும் கூறி அவற்றையும் பகுபத உறுப்பாகக் கூறுவார் நன்னூலாசிரியர். புணர்ச்சி விகாரங்களும் செய்யுள் விகாரங்களும் புணரியல் நிலையால் தோன்றுவன. ஆதலின் அவற்றை உறுப்பாக எண்ணுதல் பிழையாகும். இனி அவ்விகாரங்கள் வருமாறு.

நட த் அன் அன் என்பவை நடந்தனன் எனவரும். நட என்பதன் முன் த் இடைநிலை மிக்குப்பின் அது நகரமாகத் திரிந்ததைச் சந்தி - விகாரம் என்பார் அவர். வா+த்+ஆன் - என்பவை வந்தான் என வருதலும் அவ்வாறு அமைந்ததேயாகும் வா என்பது வ எனத் திரிந்தது செய்யுள் விகாரமாகும்.

பகுதிகள் யாவும் பொருள் உணர்த்தும் பெயரிடை நிலை மதிப்புணர்த்தும் வினையிடைநிலை காலமுணர்த்தும். விகுதிகள் திணைபாலிடம் உணர்த்தும். வினைவிகுதிகள் எச்சநிலையும், காலமும் உணர்த்தும். இம்முறையில் பகுபதங்களை ஓர்ந்துணர்தல் மாணாக்கர் கடனாகும்.

## பகுபதங்களில் நிகழும் சந்தியும் விகாரமும்

சூ.70. பகுதியொடு இடைநிலை புணருங்காலை
இருவகை விகாரமும் நிகழுதல் மரபே.

பொருள் : பகுபதங்களில் பகுதியொடு இடைநிலை புணருமிடத்துப் புணர்ச்சி விகாரம் செய்யுள் விகாரம் ஆகிய இருவகை விகாரங்களும் நிகழ்தல் மரபாகும்.

எ.டு : அறிந்தான் - (அறி+ந்+த்+ஆன்) கற்றான் (கல்+த்+ஆன்) கொணர்ந்தான். கொணா+த்+ஆன் (கொணர்+ந்+த்+ஆன்) தந்தான் - (தா+த்+த்+ஆன்) புணர்ச்சி விகாரம் - செய்யுள் விகாரம் பற்றிய விளக்கத்தைப் புணரியலுள் கண்டு கொள்க.

## பெயரிடைநிலை

சூ.71. பெயரிடை நிலையே சஞுதந மவவாம்.

பொருள் : பெயரிடை நிலைகள் சஞுதநமவ என்பனவாம்.

எ.டு : இடைச்சி, அறிஞன், கிழத்தி இயக்குநர், பதின்மர், ஒதுவான் எனவரும்.

## வினைஇடைநிலைஇயல்பு

சூ.72. வினையிடை நிலைகள்முக் காலங்காட்டும்

பொருள் : வினைச்சொல் இடைநிலைகள் 3 காலங்களையும் காட்டி வரும்.

எ.டு : நடந்தான், நடக்கின்றான், நடப்பான் எனவரும்.

## காலங் காட்டும் இடைநிலைகள்

சூ.73. தடற ஒற்றின்னிவை இறந்த காலமும்
ஆநின்று கின்று கிறு நிகழ்வும் பவக
எதிர்வும் காட்டுமிடை நிலைகளாகும்

பொருள் : தறட ஒற்றுக்களும் இன் என்னும் அசையும் இறந்த காலங்காட்டும். ஆநின்று கின்று கிறு என்னும் இடைச் சொற்கள் நிகழ்காலங்காட்டும். பவ என்னும் ஒற்றும் ககர உயிர்மெய்யும் எதிர் காலங் காட்டும்.

எ.டு : கொடுத்தான், கொண்டான், சென்றான், போயினான் எனவும் கொடா நின்றான், கொடுக்கின்றான், கொடுக்கிறான் எனவும். கொடுப்பான், கொள்வான், வருகம் செல்கம் எனவும் வரும். இன் இடைநிலை ஒரோவிடத்து முதல் குறைந்தும் இறுதிகெட்டும் வரும். போனது இகரம் கெட்டது கூவியது னகரங் கெட்டது எதிர்காலம் காட்டும் ககர இடை நிலை தன்மைப் பன்மையில் மட்டும் வரும். ஏனையவை ஐம்பால் மூவிடத்தும் வரும்.

## இடைநிலை சாரியை பெறுதலும் எதிர்மறை இடைநிலைகளும்

சூ.74. உகரமும் குகரமும் சாரியை யாவரும்
இல்லலா எதிர்மறை இடைநிலை யாகும்

பொருள் : உகரமும் குகரமும் இடைநிலைகட்கு முன் சில சொற்களில் சாரியையாக வரும். இல் அல் ஆ என்பவை எதிர்மறை இடைநிலைகளாக வரும்.

எ.டு : உண்ணுகின்றான், உண்ணுவான், உண்குவான், உண்டிலன், உண்டில, உண்ணலன், வாரலன், உண்ணான் எனவரும். உண்ணான் என்பதில் இடைநிலை ஆகாரம் புணர்ந்து கெட்டது என்பது மரபு. விகுதி ஆகாரம் கெட்டது எனல்தகும்.

## வினைச்சொல்லின் பகுதிகள்

சூ.75. நடயா பணிசீ எழு தூ மேவை
நொப் போ வெள உரிஞ் உண்பொருந் திரும்தின்
தேய்பார் செல் வாழ் கேள் பருகு என்றெழுத்து
ஈற்றுவகையாற் பகுதி இருபத்திரண்டாம்.

பொருள் : நட முதலாகப் பருகு ஈறாக வரும் ஈற்று வகையான் அமையும் இருபத்திரண்டு வாய்பாடுகளும் வினைச்சொற்களின் பகுதியாக வரும்.

எ.டு : நடந்தான், யாத்தான், பணிந்தான், சீத்தான், எழுந்தான், தூவினான், மேவினான், வைத்தான், நொந்தான், போனான், வௌவினான், உரிஞினான் உண்டான், பொருநினான், திருமினான் (திரும்பினான்) தின்றான் -

தேய்ந்தான், பார்த்தான், சென்றான், வாழ்ந்தான், கேட்டான், பருகினான் எனவரும். பிற காலங்களோடும் இவ்வாறே வரும்.

இப்பகுதிகளை எடுத்தோலாசையரற் கூறுமிடத்து முன்னிலை ஒருமை ஏவல் வினையாக வரும். அங்ஙனம் வருமிடத்து கூ, மே, ஔ, உரிஞ், பொருந்திரும் என்றாற் போல்வன ஓர் உகரத்தைச் சாரியையாகப் பெற்று கூவு, மேவு, வெளவு, உரிஞு, பொருநு, திருமு எனவரும். கால இடை நிலைகளை ஏற்குமிடத்துச் சாரியை நீங்கும். எகரக்குறில் மெய்யொடு ஈறாகாமையின் எகர ஈற்றில் வினைப்பகுதி ஆக்கம் பெறவில்லை. வகரஈறு வினைச் சொல்லீறாக வருதலில்லை. கெள-வெள என்பவற்றின் போலியாய் கவ்வவ் எனவரும்.

## பிறவினையும் அவற்றின் விகுதிகளும்

**சூ.76. *விப்பியொடு கூடினவை பிற வினைப்பகுதியாம்.***

பொருள் : மேற்கூறப் பெற்ற நடயா முதலிய வினைப்பகுதிகள் வி-பி - என்னும் பிறவினை விகுதிகளைப் பெறும். பெறுமிடத்து அவற்றொடு கூடிப் பிறவினைப் பகுதியாக நின்று கால இடைநிலைகளை ஏற்கும்.

எ.டு : நடப்பித்தான், நடவித்தான், யாப்பித்தான், உண்பித்தான், உண்ணுவித்தான், கூவுவித்தான் எனவும் இவை இணைந்து ஏவல்மேல் ஏவலாய் நடப்பிப்பித்தான் செல்விப்பித்தான் எனவும் வரும். பகுதி ஒற்றிரட்டிப் பிறவினை யாதலை வினையியலுள் கண்டு கொள்க.

## பகுதி அடையடுத்தும் துணைவினை பெற்றும் வருதலும் பெயர்ச்சொற்கள் வினைநிலை எய்தலும்

**சூ.77. *அடையொடு வரல்துணை பெறல்செயப்பாடுறல்***
***பெயர், வினை நிலையுறல் பிறவுமாங் கியல்பே.***

பொருள் : மேற்கூறப்பெற்ற நடயா முதலிய வினைப்பகுதிகள் அடையொடு கூடி ஏவலாய் வருதலும் துணைவினைகளைப் பெற்று வருதலும். செயப்பாட்டுவினை நிலையுறுதலும் - பெயர்ச்சொல் வினைநிலை எய்தி வருதலும். பகுதியின் இலக்கணமாகும்.

எ.டு : உண்டு வா, எழுந்துசெல், வந்துசொல், கண்டுபோ, நின்றுகேள் இவை அடையொடு வந்த ஏவல் வினை. பெரும்பான்மையும் செய்தென்னெச்சங்களே அடையாக வரும்.

உண்டுவிடு, பார்த்திடு, காட்டிடு, எழுந்திரு, அறிந்துகொள் தெரிந்துகொள். இவை துணைவினை பெற்றன. பெரும்பான்மையும், இடு இரு, கொள் என்பவை துணை வினையாக வரும். காணப்பட்டான், சேர்க்கப்பட்டான் தள்ளப்பட்டான் - இவற்றின் பகுதிகள் காணப்படு, சேர்க்கப்படு, தள்ளப்படு என்பவையாகும். இவை செயப்பாட்டு வினைவிகுதிபடுஎனப்படும். சித்திரித்தான், கடைக்கணித்தான், மந்திரித்தான் - இவற்றுள் பெயர்ச் சொற்கள் வினை உரிச்சொற்களுள் சில வினை நிலை எய்திப் பகுதியாக அமையும்.

## சிலபகுதிகள் விகாரமடைதல்

நூ.78. வாதா கொணாவே குறுகலும் நோகாண்
சாயிவை இறப்பில் திரிதலும் மரபே.

பொருள் : வா, தா கொணா, வே என்னும் பகுதிகள் கால இடைநிலைகளை ஏற்குமிடத்து முக்காலத்திலும் குறுகலும், நோ, காண், சா என்பவை இறந்தகால இடைநிலைகளை ஏற்குமிடத்துத் திரிதலும் வழக்கியல் மரபாகும். வாதாகுறுகுமிடத்து இடையே ருகரம் விரியும் கொணா என்பதன் ஆகாரம் அர் எனத் திரியும்.

எ.டு : வா - வந்தான், வருகிறான், வருவான், தா. தந்தான் தருகிறான், தருவான், கொணர்ந்தான் கொணர்கிறான் கொணர்வான் வெந்தான் வேகிறான் வேகுவான் எனவும் நொ - நொந்தான் நோகிறான் நோவான் - காண் கண்டான் கான்கிறான் காண்பான் சா - செத்தான். சாகிறான் சாவான் எனவும் வரும்.

## ஓரீற்றுவினைப்பகுதிகள் வேறுபடும் மரபு

நூ.79 செய்தென் எனச்சத் திரிபிற் கேற்ப
ஓரீற்றுப்பகுதிகள் திரிதலும் இறப்பெதிர்வு
இடைநிலை பெறுதலும் வழக்கியல் மரபே.

பொருள் : செய்து என்னும் வினைஎச்சம் எய்தும் திரிபுகளுக்கு ஏற்ப ஒரே ஈறுகளையுடைய வினைப் பகுதிகள் திரிதலும் அத்திரிபிற்கேற்ப இறந்தகால எதிர்கால இடை நிலைகளைப் பெறுதலும் தொன்று தொட்டு வழங்கும் இலக்கண மரபுகளாகும்.

எ.டு : பகுதி செய்தென்எச்சம்

செய் - செய்து - செய்தான் - த் - செய்வான் - வ்
உய் - உய்ந்து - உய்ந்தான் - ந்த் - உய்வான் - வ்
துய் - துய்த்து - துய்த்தான் த்த் - துய்ப்பான் - ப்
தேர் - தேர்ந்து - தேர்ந்தான் - ந்த் - தேர்வான் - வ்
பரர் - பார்த்து - பார்த்தான் - த் - பார்ப்பான் - ப்
விழு - விழுந்து - விழுந்தான் - ந் - விழுவான் - வ்
தொழு - தொழுது - தொழுதான் - த் - தொழுவான் - வ்
நடு - நட்டு - நட்டான் - ட் - நடுவான் - வ்
தடு - தடுத்து - தடுத்தான் - த்த் - தடுப்பான் - ப்
தள் - தள்ளி - தள்ளினான் - இன் - தள்ளுவான் உவ்
கொள் - கொண்டு - கொண்டான் - ட் கொள்வான் - வ்
சொல் - சொல்லி - சொல்லினான் - இன் - சொல்வான் - வ்
நில் - நின்று - நின்றான் - ற் - நிற்பான் - ப்
தின் - தின்று - தின்றான் - ற் - தின்பான் - ப்
பன் - பன்னி - பன்னினான் - இன் - பன்னுவான் - உவ்
உரை - உரைத்து - உரைத்தான் - த்த - உரைப்பான் - ப்
வரை - வரைந்து - வரைந்தான் - ந்த் - வரைவான் - வ்
புரி - புரிந்து - புரிந்தான் - ந்த் - புரிவான் - வ்
சிரி - சிரித்து - சிரித்தான் - த்த் - சிரிப்பான் - ப்
போ - போய் - போயினான் - இன் - போவான் - வ்
கோ - கோத்து - கோத்தான் - த்த் - கோப்பான் - ப்
மாண் - மாண்டு - மாண்டான் - ட் - மாணுவான் - உவ்
காண் - கண்டு - கண்டான் - ட் - காண்பான் - ப்

இங்ஙனம் வேறுபடக் காரணம் ஒத்த இடைநிலை பொருள் திரிதல் நோக்கியே யாம். கொள் என்பது கொண்டான் என வருதல் போலத் தள் என்பது தண்டான் எனக் கூறின் பொருள் திரியும் தண்டு பகுதியாகி விடும். இவ்வேறுபாடு காரணமாகவே இறந்த காலத்திற்கு த்ட்ற் இன் என நான்கு இடைநிலைகளும் எதிர்காலத்திற்கு ப்வ் என இரண்டு இடை நிலைகளும் அமைவனவாயின.

## முதனிலைத் தொழிற் பெயரின் ஓரியல்பு

**சூ.80. வினைமுதனிலை திரிந் தொரு சில பெயராம்**

**பொருள் :** முதனிலை வினைச் சொற்களில் சில திரிந்து பெயர் நிலைமை பெறும்.

எ.டு : கொள் - கோள், வெல் - வேல், தின் - தீன் (தீனி) உண் - ஊண், கொல் - கோல் எனவரும். இவை குறில் நெடிலாய்ப் பெயராயின. நுவல், நூல், உயர் - ஊர் - நிகர் - நேர் எனவரும். இவை நிரையசை நேரசையாயின. விகுதி பெற்ற சில தொழிற் சொற்களும் இவ்வாறு வரும். பகல் - பால், அகல் - ஆல், வரல் - வால் எனவரும். பெயர்களுள் சிலபொருள் வேறுபாடு செய்யாமல் திரிந்துவரும் - துகள் - தூள், மயல் - மால், மகன் - மான் (பெருமான்) பெயர் - பேர் எனவரும்.

## பண்புப்பெயர் முதனிலைகள் சில திரிந்துவருதல்

சூ.81. பண்படிச்சொற்சில விகுதியொடும் பிறவொடும்
புணர்வழித் திரிபொடு வினைநிலை எய்தும்

பொருள் : பண்புணர்த்தும் பெயர்களுள் சில பல்வேறு வகுதிகளோடும் பிற பெயர்களோடும் புணருமிடத்துத் திரியும் சில சொற்கள் வினை நிலை எய்தும்.

எ.டு : நல் - நன்மை, நலம், நன்கு, நல்லன், நன்று.

புது : புதுமை, புதியர், புத்தாடை, புத்தம்புதிது, முது: முதுமை, முதியர், மூதூர், முதுவர்

வெள் : வெண்மை, வெள்ளை, வெளிர், விளர்ப்பு, வெளியன், வெள்ளி.

சிறு : சிறுமை, சிறியன், சிற்றூர், சீறூர், சிறார். பெரு - பெருமை, பெரியன், பெருக்கம், பெரியர், பேரூர், திண் : திண்மை திண்ணியன் - திண்ணம்.

நுண் : நுண்மை, நுண்ணிது, நுணுக்கம், நுட்பம், நுணங்கல், கொழு: கொழுமை, கொழுப்பு, கோழ் - கோழிணர், முழு - முழுமை முழுது.

மேல் : மேன்மை, மேலோர், மேம்பாடு, மேக்கு - கீழ்: கீழ்மை, கிழக்கிடல் பச்: பசுமை, பசு, பாசம், பாசடை, பச்சை, பசப்பு - பைம்புதல், பசலை, பாசி, இள: இளமை, இளைது, இளைஞர்: நொய் : நொய்ம்மை, நொய்து, நொசி, நொசித்தல் தீ: தீமை, தீங்கு, தீது : சேய் : சேய்மை, சேண், மென்: மென்மை, மெலிவு, மெல்லம் பொன்: பொன்மை, பொலிவு, பொலம், நீல்: நீலம், செம்: செம்மை, சிவப்பு, சேப்பு, சேதரம்பல், செந்தூரம், செந்தில் - செக்கச்செவேல் வெம்: வெம்மை, வெப்பம், வெப்பு, வெதுப்பு, வெக்கை,

வெந்துப்பு. இன்: இனிமை, இன்பு, இனிது, இனிப்பு, இன்னல் (இன் + அல்) இன்னா (இன் + ஆ) இன்சொல் கர்: கருமை, கரி, கருப்பு, கார், கருக்கல், காரி, கரிசல், கருங்கை. மாண்: மாண்பு, மாட்சிமை, மாண்டல், மாணா.

நிரம்பியும் நிரம்பாதும் உருவாகும் பண்படிச் சொற்களுள் பெரும்பாலும் வண்ணம் குறித்து வரும் பண்புப் பெயர்களுக்கு மை விகுதி கொடுத்து அவற்றைப் பண்பிற் பகாநிலைப்பதம் என்று கூறி நன்னூலார் கூறும் இலக்கணம் மொழியறிவியலுக்கு ஏற்புடைத்தாகாது என்க.

## பண்புப்பெயர் விகுதிகள்

சூ.82. மைஐ உசிபு குறிறு அம்நர்
கைம் முதலாயவை பண்புப்பெயர் விகுதியாம்

பொருள் : மை முதலாய பதினொன்றும் பண்புப் பெயர் விகுதிகளாக வரும்.

எ.டு : நன்மை, தொல்லை, மடிவு, மாட்சி, மாண்பு, நன்கு நன்றி, நன்று, நலம், நன்னர், வெக்கை எனவரும்.

## இயற்பெயர் விகுதிகளின் இயல்பு

சூ.83. இடுபெய ரல்லா அஃறிணை இயற்பெயர்
யாவும் விரவுப்பெயராமவை விகுதியொடு
பொருந்திக் கிழமையொடு பாலிடங்காட்டும்.

பொருள் : சுட்டி வழங்குதற் பயத்தவாக இடப்படும் இடுபெயரல்லாமல் பொருள் இடம் காலம் சினை குணம் தொழில் பற்றி வரும் பெயர்கள் யாவும் இருதிணைக்கும் பொதுவாய விரவுப்பெயராம் அவை விகுதியொடு பொருந்திக் கிழமையும் திணை பாலிடங்களையும் காட்டிவரும்.

எ.டு : மாடன், வேங்கையான், புலியான், மீனவன், யானையான், தேவன், தூதன், நரகன், மலையன், சேரன், செல்வன், கழுகன் மயிலி, குயிலி, வலைச்சி, குறத்தி செல்வி எனவும் நாடன், ஊரன், கடலன், மருதன், நாட்டவன், ஊரவன், கடலி, மருதி எனவும், பரணன், மூலன், பரணியாள் மூலத்தான் எனவும், கண்ணன், செவியன், பெருவயிறன், கண்ணாள், செவியள், பெரு வயிறி எனவும், மேலோன், கீழோன் கரியன், வெளியன்,

நல்லன், கரிச்சி, வெளுப்பி, நல்லள் எனவும், பாணன், கூத்தன், நடையன், பாடினி, கூத்தி நடைச்சி எனவும் வரும். கிழமைப்பொருள்: மலையன் - மலை நாட்டையுடையவன், செல்வன், செல்வத்தையுடையவன் எனவும் ஒப்புப்பொருள் புலியன் - புலிபோன்றவன், மயிலி - மயில் போன்ற சாயலள் எனவும் விரியும். அன், ஆன், அள், ஆள், இ விகுதிகள் பால்காட்டின. இவை விரவுப் பெயராமாறு இவன் அரசன், இது மாடன் எனவும் மாடன் வந்தான், மாடன் வந்தது எனவும் அமைந்து பொதுப் பெயராயின. பொருட்பெயருள் உறவுப் பெயர் முறைப்பெயர்களும் அடங்கும் நம்பி, நங்கை, நமர், தமர், எம்பின் நும்பின், தாய், தந்தை, மகன், மகள் எனவரும்.

## சாரியைகள்

சூ.84. பெயரொடு விகுதியும் வேற்றுமை உருபும்
பதமும் புணர்வழி சாரியை வருமவை
அத்து அற்று அக்கு அன் ஆம் ஐ
தம் நம் நும் ஏ அ உ கு அன்ன பிறவும்
சாரியை ஆம் சில பொருண்மையும் சுட்டும்

பொருள் : பெயர்ச் சொல்லொடு விகுதியும் வேற்றுமை உருபுகளும் பதங்களும் புணருமிடத்து அவற்றை இயைக்கச் சார்ந்து வரும் இடைச் சொற்கள் சாரியை (சார்ந்து இயைப்பது) எனப்படும் அவை அத்து முதலியவும் அன்ன பிறவுமாம் சில சாரியைகள் பொருள் வேறுபாடு சுட்டியும் நிற்கும்.

எ.டு : அகத்தான், மரத்தை வெட்டினான், மரத்திலை, பலவற்றை, பலவற்றுக்கோடு தாழக்கோல், ஒன்றன் கூட்டம், புற்றாஞ்சோறு, பதின்கலம், புத்தம் புதிது, ஏற்றைப்பனை அவர்தம்மை எல்லா நம்மையும் எல்லா நும்மையும் கலனே தூணி. எனக்கு அவனுக்கு உய்குவை போலும் என வரும். அன்னபிற என்றதனான் ஆடிக்குக் கொண்டான் என வரும் இக்குச் சாரியையும், அவன் தன் பொருள் எனவரும் தன் சாரியையும் இல்லாப் பொருள் என வரும். ஆ சாரியையும் பிறவும் கொள்க. எல்லாவற்றையும் என்னுமிடத்து வற்றுச் சாரியை எல்லாம் என்னும் பொதுப் பெயரை அஃறிணை எனச் சுட்டியும் எல்லா நம்மையும் என்னுமிடத்து நம்முச் சாரியை எல்லாம் என்னும் பொதுப் பெயரை உயர்திணை எனச் சுட்டியும் வந்தன. வினைப்பகுபதத்தின்கண் அன் கு உ என்பவை சாரியையாக வருதல் மேற்கூறப்பட்டது. நன்னூலார் னகரம் ஆன், மான் எனச் சாரியையாக வரும் என்பார். அது இன் சாரியையின் முதற் குறை எனலே நேரிதென்க.

# விகுதி இடைச் சொற்கள்

சூ.85. அன் ஆன் அள் ஆள் அர் ஆர் பம்மார்
அஆ குடுதுறு என்ஏன் அல்ஆல்
அம் ஆம் எம் ஏம் கும் டும் தும் றும்
இஐ ஆய்மின் இர்ஈர் ஈயர்வ
இயர் கய விப்பி விகுதி பிறஇடைச் சொல்
வினைச்சொலில் திணைபால் இடங்காட்டும் சில
காலமும் தரும்சில குறிப்பு வினையினும்
பெயரினும் ஒருசொல் லாக்கத் தினும் வரும்

பொருள் : அன் முதலாக பிஇறுதியாகக் கூறப் பெற்ற விகுதி பிற இடைச்சொற்கள் வினைச் சொற்களில் திணை பாலிடங்களைக் காட்டி வரும். இவற்றுள் சில காலமும் காட்டும் சில குறிப்பு வினைகட்கும், இருதிணைப் பெயர்கட்கும் ஒருசொல்லாக்கத்திற்கும் விகுதியாக வரும்.

எ.டு : வினை

| | | |
|---|---|---|
| உண்டனன் | உண்டேன் | |
| உண்டான் | செய்வல் | உண்டீர் |
| உண்டனள் | கொளால் | உணீயர் |
| உண்டாள் | உண்டனம் | வருவ |
| உண்டனர் | உண்டாம் | வாழியர் |
| உண்டார் | உண்டனெம் | வாழ்க |
| உண்ப | உண்டேம் | வாழிய |
| உண்மார் | உண்கும் | உண்பி |
| வந்த | உண்டும் | வருவி |
| வந்தன | வருதும் | |
| வாரா | சேறும் | இவற்றுள் கும்டும் |
| உண்கு | வருதி | தும்றும் |
| உண்டு | வந்தனை | குடுதுறு |
| வருது | வந்தாய் | இ.மின் |
| சேறு | உண்மின் | காலம் |
| உண்டனென் | உண்டனிர் | காட்டும் |

பிற விகுதி இடைச்சொற்களாவன பெயரெச்ச வினையெச்சங்களிலும் பெயர்களிலும் பண்புப் பெயர் தொழிற் பெயர்கண்ணும் ஒரு சொல்லாக்கத்தின் கண்ணும் வருவனவாம். இவற்றைப் பின்வரும் எடுத்துக்காட்டுக்களிற் கண்டு கொள்க.

## குறிப்பு வினை விகுதிகள்

கரியன்
கரியான்
கரியள்
கரியாள்
கரியர்
கரியார்
கரியன
முக்கட்டு
கரிது
குழையிற்று
கரியென்
கரியேன்
கரியம்
கரியாம்
கரியெம்
கரியேம்
கரியை
கரியாய்
வில்லி
கரியிர்
கரியீர்

## பெயரெச்ச விகுதிகள்

செய்த - அ
செயகின்ற - அ
செய்யும் - உம்

## வினையெச்ச விகுதிகள்

நடந்து
ஓடி
போய்
உண்குபு
உண்ணா
உண்ணூ
உண்டென
உண்ண
உண்ணின்
உண்டால்

## பெயர் விகுதிகள்

கண்ணன்
கண்ணாள்
தேவர்
வானத்தார்
தேவிமார்
குழையன
யாது
பொன்னி
புத்தேளிர்
வடமன்
கோமான்
கோக்கள்
அவை
எந்தை
எங்கை
எம்பின்
எம்முன்
அண்ணல்
பிறன்
பிறள்
பிறர்

## தொழிற்பெயர் விகுதிகள்

நடத்தல் - தல்
ஆடல் - அல்
கொலை - ஐ
நடக்கை - கை
பார்வை - வை
போக்கு - கு
நடப்பு - பு
வரவு - வு
மறதி - தி
புணர்ச்சி - சி
புல்வி - வி

விக்குள் - உள்

உண்டக்கால்
உண்டானேல்
உண்டானெனின்
உண்டானாயின்
உண்டானேனும்
உணற்கு
உண்ணிய
உண்ணியர்
தருவான் (வந்தான்)
காண்பான் (,,)
உண்பாக்கு
செய்தக்கடை
செய்தவழி
செய்தவிடத்து
காண்டலும்
உண்ணாமல்
உண்ணாமே
உண்ணாமை

சாக்காடு - காடு
கோட்பாடு - பாடு
தோற்றரவு - அரவு
வாரானை - ஆனை
நடவாமை - மை
பாய்த்து - து

**பண்புப் பெயர் விகுதிகள்**

நன்மை - மை
தொல்லை - ஐ
மாட்சி - சி
மாண்பு - பு
மழவு - வு
நன்கு - கு
நன்றி - றி
நன்று - று
நலம் - அம்
நன்னர் - அர்

**பிறவினை விகுதிகள்**

செய்வி - வி
காண்பி - பி
போக்கு - கு
பாய்ச்சு - சு
உருட்டு - டு
நடத்து - து
எழுப்பு - பு
துயிற்று - று

**வினை முதற்பொருள் - செயப்படுபொருள் கருவிப்பொருள் விகுதிகள்**

இ - அலரி - ஊருணி மண்வெட்டி
ஐ - பறவை - தொடை பார்வை
அம். எச்சம் தொல்காப்பியம் நோக்கம்

## பெயராக்கவிகுதிகள்

நூ.86. பொருளிடம் காலம் சினை குணம் தொழிலை
உணர்த்தும் முதனிலைச் சொற்கள் அன், ஆன்
அள் ஆள் அர் ஆர் அல் அம் இ உ ஐ
விகுதியொடு கூடிப் பெயர் நிலை எய்தும்

பொருள் : பொருள் இடம் காலம் சினை குணம் தொழில் உணர்த்தும் முதனிலைச் சொற்கள் அன் ஆன் அள் ஆள் அர் ஆர் அல் அம் இ உ ஐ என்னும் விகுதிகளோடு கூடிப் பெயர்நிலை எய்தும்.

எ.டு : பொன், பொன்னன், பொன்னி, பொன்னர் மலை: மலையன், மலையாட்டி - மலையார், மலைச்சி. இவை பொருட் பெயரடியாகப் பிறந்தவை. அகத்தன், அகத்தான் அகத்தார், இல்லாள், மனைவி, காடன், விண்ணன் இவை இடப்பெயரடியாகப் பிறந்த பெயர்கள் (அத்துச்சாரியை) வேனில்: வேனிலான், வேனிலாள், வேனிலார் - பரணி: பரணியான், பரணியாள், பரணியார். இவை காலப்பெயரடியாகப் பிறந்த பெயர்கள். செவி: செவியன், செவியள் செவியர், மூக்கு - மூக்கன் மூக்கி, மூக்கர் இவை சினைப் பெயரடியாகப் பிறந்த பெயர்கள். கருமை: கரியன், கரிச்சி, கரியர், அன்பு, அன்பன், அன்பி - அன்பர் இவை குணப் பெயரடியாகப் பிறந்த பெயர்கள். கூத்தன், கூத்தி, கூத்தர், நடையன், நடைச்சி, நடையர் இவை தொழிற்பெயரடியாகப் பிறந்த பெயர்கள். அல்: கடல், வயல், விரல், அம்: நிலம், குளம், புலம், இ: தலைவி, பொன்னி, கூனி, வில்லி, உ: உறவு - உழவு, முடிவு. ஐ: ஓடை, கூடை, உடை, நடை, கொடை, குட்டை, நெட்டை எனவரும். இடைச்சொல் உரிச்சொல்லடியாக நின்று இவ்விகுதிகளோடு கூடியும் பெயர் நிலை எய்தும். பிறன், பிறள், பிறர், போன்றான் போல்வான் போலி சான்றான், தெவ்வர் எனவரும்.

## வழக்குச் சொல் விகுதிகள்

*சூ.87. காரன் காரி காரர் ஆட்டியொடு*
*அத்தி ஆத்தி அச்சி இச்சியும்*
*பிறவும் வழக்கிற் பெயர் விகுதி யாவரும்.*

பொருள் : காரன் முதலிய எட்டும் பிறவும் வழக்கினுள் பெயர் விகுதிகளாக வரும்.

எ.டு : காவற்காரன், வேலைக்காரி, பணக்காரர், திருவாட்டி, கிழத்தி, தட்டாத்தி, தொம்பச்சி, தச்சிச்சி எனவரும்.

பிற என்றதனான், நாச்சி, ஆச்சி, அண்ணாவி, பொன்னாயி முதலியன கொள்க.

## காலங்காட்டும் விகுதிகள்

சூ.88. குக்கும் எதிர்வும் டுட்டும் கழிவும்
துறுவொடு தும்றும் இறப்போ டெதிர்வும்
ஏவல் மின் வியங்கோள் இம்மார் எதிர்வும்
பகரமும் உம்மும் நிகழ்வோ டெதிர்வும்
உணர்த்தும்மன் எதிர்மறை மும்மையும் ஏற்கும்.

பொருள் : கு, கும் இவை எதிர்காலமும், டு, டும் இவை இறந்த காலமும் துதும் றுறும் இவை இறந்த காலமும் எதிர் காலமும். ஏவலாக வரும் மின் ஈறும் வியங்கோளாக வரும். இகர ஈறும் பன்மைப் படர்க்கையாக வரும் மார் ஈறும் எதிர் காலமும் பகரமும் உம்மும் நிகழ்காலத்தொடு எதிர்காலமும் பற்றிப் பெரும்பான்மையும் வரும். எதிர்மறை ஆகார ஈறு மூன்று காலத்தையும் ஏற்றுவரும்.

எ.டு : உண்கு (உண்பேன்) உண்கும் (உண்பேம்) உண்டு (உண்டேன்) உண்டும் (உண்டேம்) வந்து (வந்தேன்) வந்தும் (வந்தேம்) வருது (வருவேன்) வருதும் (வருவோம்) சென்று (சென்றேன்) சென்றும் (சென்றேம்) சேறு (செல்வேன்) சேறும் (செல்வேம்) உண்மின் (உண்பீராக) வாழ்க (வாழ்வீராக) உண்ப (உண்கின்றனர் - உண்பர்) உண்ணும் (உண்கின்றன, இனி உண்ணும்) உண்ணா (நேற்றும் இன்றும் நாளையும்).

முன்னிலை விகுதிகளுள் ஏவலின்கண் ஆய் எதிர்காலமுணர்த்தும் வியங்கோளீறாகிய இய இயர் என்பவை வினை எச்சமாகாமல் வியங்கோள் பொருளில் வருமிடத்து எதிர்காலம் உணர்த்தும். வாழிய, வாழியர் எனவரும். வியங்கோளில் வரும் அல்ஈறு, வாரல், செல்லல் என எதிர்காலமுணர்த்தும் இ: வருதி - உண்ணுதி - காண்டி என எதிர்காலமுணர்த்தும். மார் - உண்மார் வந்தார், காண்மார் வந்தார் என எதிர்காலமுணர்த்தும். ப: உண்ப, காண்ப, வருப, கூறுப எனவும் உண்ணும் பசு, காணும் கண், சாத்தன் உண்ணும், கண்காணும் எனவும் நிகழ்வும் எதிர்வும் உணர்த்தும் எதிர்மறை உண்ணா தின்னா வாரா எனவரும் நேற்றும் உண்ணா இன்றும் உண்ணா நாளையும் உண்ணா என மூன்றுகாலத்தையும் நிலைமைக்கு ஏற்ப உணர்த்தும்.

## சொல்லாக்க விகுதிகள்

சூ.89. நல் அல் என்னும் உரியடி விகுதிபோல்
விதிஎதிர் மறைகளில் சொல்லாக்கம் செயும்
அல் என்பது ஆகல் என்தன் மரூஉ வாம்.

பொருள் : நல் அல் என்னும் உரியடி விகுதி இடைச் சொற்களைப் போல நின்று விதிப் பொருளும் மறைப் பொருளும் தந்து சொல்லாக்கம் செய்யும். அல் என்பது ஆகல் என்பதன் மரூஉவாகும்.

ஏ.டு : கன்னல் - கன் + நல் = கரும்பு - இனிமை நல்குவது.
புனல் - புல் + நல் = நீர் - புல்லுக்கு நலம் செய்வது.
அனல் - அல் + நல் = நெருப்பு - இருளை நீக்கி நன்மை தருவது.
தணல் - தண் = அல் = நெருப்பு - குளிச்சியல்லாதது.
கனல் - கன் + அல் = நெருப்பு - இனிமை அல்லாதது.
இன்னல் - இன் + அல் = துன்பம் - இனிமையல்லாதது.
தழல் - தழு + அல் = நெருப்பு - தழுவற்கு ஒல்லாதது.
கானல் - கான் + அல் = கடற்கரை - காடல்லாதது.

## இதுவுமது

**சூ.90. இஐ அம் அர் பெயராக்கம் செய்யும்**

பொருள் : இ ஐ அம் அர் என்னும் விகுதிகள் வினைமுதற் பொருள் செயப்படு பொருள் கருவிப் பொருள் உடைமைப் பொருள் தந்து பெயராக்கம் செய்யும்.

ஏ.டு : கன்+ இ = கனி, வில் + இ = வில்லி, பார்+இ=பாரி, கல் + ஐ = கலை, மால் + ஐ = மாலை, கொல் + ஐ = கொலை, முள்+ ஐ = முளை, நில் + அம் = நிலம், வல் + அம் = வலம், பாடு + அம் = பாடம், ஓடு + அம் = ஓடம், கோல் + அம் = கோலம், வை + அம் = வையம், சுடு + அர் = சுடர், கூடு + அர் = குடர், தன் + அர் = தளர், வெள்+அர் = விளர் எனவரும்.

# 3. புணரியல்
## மொழிபுணரியல்பு

**சூ.91. உயிரும் புள்ளியும் ஈறாய் நிற்கும்
இருவகைப் பதமுன் உயிரும் மெய்யும்
முதலாவரும் சொல் அல்வழி வேற்றுமைப்
பொருளிற் பொருந்துதல் புணரியல் பாகும்.**

பொருள் : தனி உயிரீறும் உயிர்மெய் உயிரீறும், புள்ளிமெய்யும் ஈறாக நிற்கும் பகாப்பதம் பகுபதம் என்னும் பதங்களின் முன்னர், உயிர் முதலும் உயிர் மெய் முதலுமாக வரும். நால்வகைச் சொற்கள் அல்வழி வேற்றுமை என்னும் தொடர்பொருள்பட இயைந்து பொருந்தும் நிலை மொழி புணரியல்பு எனப்படும்.

எ.டு : ஆ + இனிது = ஆவினிது, கா + இனிது = காவினிது, ஆல் + இனிது = ஆலினிது, மலை + இனிது = மலையினிது, மலை + கடிது = மலைகடிது, பால் + அறிது = பாலறிது, பால் + கடிது = பால்கடிது என இருவகை ஈறும் இருவகை முதலும் புணரும் அல்வழி - வேற்றுமை பொருள் பற்றி எய்தும் நிலைகளைப் பின்வரும் சிறப்பு விதிகளுள் காண்க.

## உயிர்மெய்யெழுத்தின் நிலை

சூ.92. *உயிர்மெய்*

*பொருள்தரும் நிலையிலோர் எழுத்தாம் புணர்ச்சியுள்*
*மெய்ம் முதல் உயிறீறு என இரு நிலைத்தாம்.*

பொருள் : உயிர்மெய் என்னும் கூட்டெழுத்து சொல்லுறுப்பாக நின்று பொருள் தரும் நிலைமைக்கண் ஓரெழுத்தாகவும் புணர்ச்சியுள் ஒலியிசை காரணமாக மெய்ம் முதல் உயிரீறு என இரு நிலைமைத்தாகவும் நிற்கும்.

விளக்கம் : கொடிச்சி நாலெழுத்து. பெரிய + கொடிச்சி = பெரிய + க்ஒடிச்சி - மலை + கொடிச்சி மலை + க்க்ஒடிச்சி. கொடிச்சி + இவள் கொடிச்ச்இ + இவள் = கொடிச்சியிவள் - கொடிச்சிக்கண் = கொடிச்ச்இ + க்க்அண் - என நின்றுபுணரும்.

## மொழி ஈறு - முதல் - எழுத்துக்கள்

சூ.93. *மொழியீ றாம் எழுத் திருபத்துநான்காம்*
*மொழிமுதல் வருவன இருபத்திரண்டாம்*
*உயிரோடு உயிரும் உயிரொடு மெய்யும்*
*மெய்யொடு மெய்யும் மெய்யொடு உயிருமென்று*
*அவை நால் நிலையிற் புணர்ந்து தொடரும்.*

பொருள் : மொழியீறாக நிற்கும் எழுத்துக்கள் இருபத்து நான்காம் மொழி முதல் வரும் எழுத்துக்கள் இருபத்திரண்டாம். அவை உயிருடன் உயிரும்

உயிருடன் மெய்யும் மெய்யுடன் மெய்யும் மெய்யுடன் உயிரும் என நான்கு நிலையில் புணர்ந்து தொடரும்.

எ.டு : உயிரீறுகள் விள, பலா, கனி தீ கடு தூ மேள தே குதிரை நொ கோ, வெள எஃகு. மெய்யீறுகள் உரிஞ் அரண் வெரிந் மரம் மான் வாய், நீர், புல், தெவ் யாழ் அருள் எனவும் உயிர் முதல். அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ ஔ மெய்ம் முதல் க ச த ப ஞ ந ம ய வ எனவும் வரும் (மெய்ம் முதல் என்பது உயிர்மெய்யைக் குறிக்கும்)

உயிர்முன் உயிர் - பலா + அழகு - கனி + அழகு
மெய்முன் உயிர் - கண் + அழகு - கடல் + இனிது
மெய்ம்முன் மெய் - கண் + பெரிது - கண் + கடை - கண் + நெடிது - கண் + வலை
உயிர்முன்மெய் - பலா + காய் - பலா + நெடிது - பாலா - வலிது
குற்றியலுகரஈறு: எஃகு + அரிது, எஃகு + கடுமை, எஃகு + நெடிது எஃகு + வலிது.

குற்றியலுகரம் வருமொழியில் உயிர்வரின் அரைமாத்திரையாகவும் மெய் வரின் அரை மாத்திரையினும் மிக்கு உயிராகவும் புணரும்.

எ.டு : நோக்கு + இனிது = நோக்கினிது, நோக்கு + பெரிது = நோக்குப் பெரிது எனவரும்.

## பொருள்நிலை - அல்வழித்தொடர்

நூ.94. எழுவாய் விளியீரெச்சமுற்றிடையுரி
பண்புவமை வினைத்தொகை உம்மை அன்மொழித் தொகை
அடுக்கிவை புணர்ச்சியில் அல்வழித் தொடர்களாம்.

பொருள் : எழுவாய்த்தொடர் விளித்தொடர் இருவகைப் பெயரெச்சத் தொடர் இருவகை வினையெச்சத் தொடர் இருவகை வினைமுற்றுத் தொடர். இடைச்சொற்றொடர், உரிச்சொற்றொடர், பண்புத்தொகை உவமத்தொகை, வினைத்தொகை உம்மைத்தொகை அன்மொழித் தொகை மொழிகள் அடுக்குத் தொடர் இவை புணர்ச்சியில் அல்வழித் தொடர்களாகும்.

எ.டு : எழுவாய்த் தொடர் - சாத்தான் உண்டான் சாத்தன் கரியன்
விளித்தொடர் கண்ணாவா, சாத்தாஉண், கொற்றாகேள்
தெரிநிலை வினைப் பெயரெச்சம் - உண்டபசு, காணும்கண்

குறிப்புவினைப் பெயரெச்சம் - நல்லபையன், கரிய குதிரை
தெரிநிலை வினையெச்சம் - உண்டுவந்தான் - உண்ணிய சென்றான்
உண்ணா வந்தான்
குறிப்பு வினை வினையெச்சம் - பொருளின்றி வாழார், மெய்யன்றிக் கூறார்
தெரிநிலை வினைமுற்று - உண்டான் கண்ணன், பாடினார் புலவர்
குறிப்புவினைமுற்று - கரியன் சாத்தன், நெடியன் கொற்றன் - பெரியர் சான்றோர்
இடைச்சொற்றொடர் - பிறநாடுகள் - கொன்னூர், ஓஒ பெரியன்
உரிச்சொற்றொடர் - நனிபேதை - தவப்பெரிது - கழிகண்ணோட்டம்.
பண்புத்தொகைமொழி - செந்தாமரை, கடுஞ்சினம், ஆயன்சாத்தன்
உவமத்தொகைமொழி - மதிமுகம், தேமொழி, பால்நிலவு
வினைத்தொகை - கொல்யானை பெய்வளை பாய்புலி - சுடுசொல்
உம்மைத்தொகை - இராப்பகல், இயலிசைநாடகம், அறம்பொருளின்பம் வீடு
அன்மொழித்தொகை - மணிமேகலை (ஆடினாள்) பொற்றொடி (வந்தாள்) பைந்தொடி (சென்றாள்) அடுக்கு - புலி புலி பாம்பு பாம்பு பாம்பு, தீத்தீத்தீத்தீ கலகலகூஉம் எனவரும்.

## வேற்றுமைப் பொருட்டொடர்

சூ.95. செய்பொருள் கருவி கோடல் எல்லை
உடைமை இடமெனும் ஆறுவேற்றுமையும்
உருபுதொகப் புணர்வழி வேற்றுமைப்புணர்ச்சி
உருபொடு பயனிலை உடன் தொக லுண்டே.

பொருள் : செயப்படுபொருள் கருவிப் பொருள் கோடற்பொருள் எல்லை (அளவை) ப் பொருள் - உடைமைப்பொருள் இடப்பொருள் என்னும் ஆறு வேற்றுமைப் பொருளினவாய் அவற்றின் உருபுதொக்கு நிற்பத்தொடர்ந்து நிற்பவை வேற்றுமைப் பொருட்புணர்ச்சித் தொடர்களாம். வேற்றுமைத் தொகை மொழியுள் சில பயனிலைச் சொல் தொக்கு நிற்றலும் உண்டு. (உருபுவிரியின் அவை உருபுபுணர்ச்சி வேற்றுமைத் தொடராகும். உருபுபுணர்ச்சி விதிகள் தனியே பின்னர்க் கூறப்படும்.)

எ.டு : சாத்தன், கனியுண்டான், சோறுண்டான், பாடம் படித்தான், (இரண்டாம் வேற்றுமை) இவன் வேலெறிந்தான் இது மண்குடம் - கண்காட்சி, (மூன்றாம் வேற்றுமை) இவன் சாத்தன் மகன், இது கரும்பு வேலி - கூலிவேலை, (நான்காம் வேற்றுமை) இது மலையருவி, ஊர் மேற்கு - கட்டிற்கீழ் இருவர் (ஐந்தாம் வேற்றுமை) இது சாத்தன் வீடு, இது யானைக்கை, சொற்பொருள் (ஆறாம் வேற்றுமை) கடல் மீன், வான்பருந்து, குன்றக்கூகை (ஏழாம் வேற்றுமை)

வெளிப்படும். அச்சொற்கள் ஒலிகளின் தொடர்ச்சியாகலின் ஒருபொருளை உணர்த்துதற்குரிய சொல்லுக்கு எத்துணை ஒலிகள் தேவையோ அதுவரை சங்கிலி போலத் தொடர்ந்து நின்று பின் அடுத்தசொல்லைத் தொடரும் அந்நிலையில் ஒருசொல்லைத் தொடங்கி நிறுத்திய அளவில் அது நிறுத்த சொல் அல்லது நிலைமொழி எனப்படும். இவ்விரு சொற்களும் இடையறாது தொடரின் அது புணர்மொழி எனப்படும். இன்றேல் தனித்தனி நின்று விட்டிசைக்கும். விட்டிசைப்பின் திரிபுகள் எவையும் நிகழா.

தன்கருத்தை வெளிப்படுத்த ஒருவன் பேசுங்கால் அடுத்தடுத்துச் சொல்ல வேண்டிய சொற்களை உணர்ந்தே பேசுவான். சொற்கள் இடையறாது தொடர்ந்து வாக்கியமாகும். ஒருவாக்கியம் முடிந்த பின் சிறிது இடைவெளிவிட்டு அடுத்து வாக்கியத்தைத் தொடங்குவான். சொல்லிலோ சொற்றொடர்களிலோ உள்ள எழுத்தொலிகள் இடையறாது தொடரும். உயிர்மெய் எழுத்தில் மெய்யும் உயிரும் எவ்வாறு இடையீடின்றித் தொடருகின்றனவோ அவ்வாறே சொல்லுறுப்பாகிய எழுத்துக்களும் இடையீடின்றித் தொடரும். கா, கால், காலை, காலம், கல், கலி, கலை, கல, கலக்கம், கல்வி, கற்பு இவை. ஒரு சொல்லில் வரும் எழுத்துத் தொடர்ச்சி காலை, காலம், கலி கலக்கம், கல்வி, கற்பு என்பவற்றின் இறுதி விகுதியாக அமைந்து கூடியவை ஆதலின் இவ்வாறு உருப்பெறும் சொற்களை ஒருமொழிப் புணர்ச்சி அல்லது ஒருமொழியாக்கம் என்பர். அவை நிலைமொழி வருமொழிய இரண்டு சொற்கள் எனப்படா. எனினும் இருமொழிப் புபுணர்ச்சிக்குரிய திரிபுகளை எய்தும் அல்லது இயல்பாகும். அஃதாவது கல் என்னும் உரிச்சொல்லில் ஏவல் விகுதி கூட்டின் கல்+அ= கல என்றாம். இடப்பொருள் விகுதி கூடின் கல் + அம் = கலம் என்றாகும். தொழிற்பெயர் விகுதி கூடின் கல் + வி = கல்வி என்றும் கல் + பு = கற்பு என்றும் ஆகும். பிறவினை விகுதி கூடி கல் + அக்கு = கலக்கு என்றாகும். அவை பண்பு விகுதியையொடு கூடிக் கலக்கு + அம் = கலக்கம் என்றாகும்.

இம்முறையிற்றான் இருமொழிப் புணர்ச்சிக்கண் எழுத்துக்கள் இயல்பும் திரிபுமாக நிகழும். நிலா + கதிர் = நிலாக்கதிர். நிலாஅக் கதிர் - நிலவுக்கதிர் எனவும் அகம் + கை = அங்கை அகம் + வழி = அகவழி எனவும் அகம் + செயல் = அகச் செயல் எனவும் அகம் + பெரிது = அகம்பெரிது எனவும் திரிபுகளும் இயல்பாக நிகழும்.

புணர்மொழிகளில் சொற்கள் பொருள் திரியாமல் எழுத்துக்கள் திரிதற்கும் இயல்பாதற்கும் காரணம் அல்வழி வேற்றுமை என்றும் பொருள் நிலையும் எழுத்துக்களின் பிறப்பிட வேற்றுமையுமாகும். கல் + பெரிது = கல் பெரிது அல்வழிப்புணர்ச்சி ஆதலின் கல்பெரிது எனவரும். கல் + பாறை வேற்றுமைப்புணர்ச்சி ஆதலின் கற்பாறை எனவரும். கல் என்பதன்

முன் தகரமோ நகரமோ வரின் அல்வழி வேற்றுமை என்னும் இரு நிலையிலும் கல்தீது = கற்றீது கல் + தீமை = கற்றீமை, கல் + நன்று = கன்னன்று, கல் + நன்மை = கன்னன்மை எனத் திரியும். காரணம் லகரம் தககர நகரங்களோடு மயங்காது காரணம் பிறப்பிட அணுக்கமாகும். இவ்வாறே ஏனையவற்றையும் உணரல் வேண்டும். புணர்நிலைகருதியே இடைநிலை மெய்ம் மயக்கம் வரையறுக்கப்பட்டது என அறிக. பெரும்பாலும் மிகும் எழுத்தொலிகள் க ச த ப வாகும் குன்றுவது மகரமாகும் திரிவன. ணன லள தநம வாகும். இவைபற்றி மேல் வரும் சிறப்பு விதிச் சூத்திர உரையுள் கண்டு கொள்க.

## உயிர் ஈற்றின் முன் உயிர்புணர்தல்

சூ.97. உயிர்முன் உயிர்வரின் யகரவகரம்
உடம்படு மெய்யுருபாக வந்தியைக்கும்

பொருள் : உயிரீற்றுச் சொற்களின் உயிர்முதற்சொற்கள் வரின் இடையே யகர மெய்யும் வகர மெய்யும் உடம்படுத்தும் உருபாக வந்து இயைபுபடுத்தும்.

யகரம் அடியண்ணத்தில் அடிநா விரியச் சிறிது உயிர்ப்பிசையோடு பிறக்கும் வகரம் கீழிதழ் மேல்வாய்ப்பற்களைப் பொருந்தச் சிறிது உயிர்ப்பிசையோடு பிறக்கும். ஆதலின் மொழி நூலார் இவற்றை அரையுயிர் என்ப அவ்வியைப் பற்றி இவை உடம்படுத்தும் உருபாக அமைகின்றன.

பெரும்பான்மையும் இ ஈ ஐ ஈறுகளின் முன் யகரமும் அ ஆ உ ஊ ஒ ஔ ஈறுகளின் முன் வகரமும் ஏகார ஈற்றின் முன் பெரும்பான்மையும் வகரமும் சிறுபான்மையாகரமும் உடம்படுமெய்யாக வரும் ஆகார ஈற்றுள் சில ஓரெழுத்தொரு மொழி முன் யகரமும் உடம்படு மெய்யாக வரும். கோ என்னும் சொல்முன் இரண்டும் வரும் இவ்விதி அல்வழி - வேற்றுமை இரண்டற்கும் ஒக்கும்.

எ.டு : மணி + அழகு = மணியழகு, தீ + அரிது = தீயரிது, கலை + இனிது = கலையினிது. விள + இனிது = விளவினிது, பலா + அரிது = பலாவரிது, மழு + உடைந்தது = மழுவுடைந்தது, பூ + அழகு = பூவழகு, சே + எழுந்தது = சேவெழுந்தது சேயெழுந்தது, சோ + உயர்ந்தது = சோவுயர்ந்தது, கோ + இல் = கோவில் - கோயில் - கௌ + இனிது = கௌவினிது எனவரும். ஒகர ஈறு நொ என்னும் ஒருசொல்லில் மட்டும் வரும் அது குறிலாதலின் வகரம் இரட்டும். நொ + அழகு = நொவ்வழகு எனவரும். ஆ + இடை = ஆயிடை, மா + இருஞாலம் = பாயிருஞாலம்

எனவரும் செய்யுள் வழக்கில் உடம்படுமெய் பெற்றே வருதல் வேண்டும். உரை வழக்கிலும் பேச்சு வழக்கிலும் பெற்றும், பெறாதும் வரும்.

இனிச் சார்வுழிச்சார்ந்தான். செல்வுழிச் சென்றான் என வருமிடத்து நிலைமொழி சார்வு - செல்வு என்பனவாம். இவ் வகரமெய் எழுத்துப் பேறாகும் உடம்படு மெய்யன்று என அறிக.

## சுட்டு, வினா எழுத்துக்கட்குச் சிறப்புவிதி

*சூ.98.* *எகரவினாமுச் சுட்டின்முன் உயிரும்*
*யகரமும் எய்தின் வவ்வரும் பிறவரின்*
*அவையவை மிகும் சுட்டு நீடலும் உண்டே.*

பொருள் : எகரவினா அ இ உ என்னும் மூன்று சுட்டிடைச் சொற்களின் முன் உயிரும் யகரமும்வரின் வகரமும் பிறவரின் வந்த அம்மெய்களும் மிகும் ஓரோவழி சுட்டுக்கள் நீண்டும் வரும்.

எ.டு : எ+உயிர் = எவ்வுயிர், எவ்யானை, அவ்வுயிர், அவ்யாழ், இவ்வுயிர். இவ் யானை உவ்வுயிர் - உவ்யானை எனவும் எக்கடல், எந்நாள், எவ்வழி எனவும் அக்கடல், அந்நாள் - அவ்வழி எனவும் ஆவயின் ஈவயின் ஊவயின் எனவும் வரும்.

## குற்றியலுகரத்தின் முன் உயிரும் யகரமும்

*சூ.99.* *குற்றியலுகரமுன் உயிர்வரின் ஏற்கும்*
*யவ்வரின் இகரமாத் திரிதலுமாகும்*
*வேற்றுமைப் பொருள்வயின் டறவொற்றிரட்டும்.*

பொருள் : ஆறிற்றுக் குற்றுகரச் சொற்களின் முன் உயிர்வரின் அதனை ஏற்று ஒன்றுபட்டு நிற்கும். யகரம் வரின் இகரமாத்திரிதலுமாகும். வேற்றுமைப் பொருட்கண் டற ஒற்றுக்கள் இரட்டும். திரிதலும் என்னும் எதிர்மறையும்மையால் வழக்கின்கண் திரியாமையும் கொள்க.

எ.டு : நாகு + இனிது, நாகினிது - நாகினிமை - எஃகு + உயர்ந்தது எஃகுயர்ந்தது - எஃகெறிந்தான், வரகு + இனிது = வரகினிது - வரகினிமை, முத்து + இனிது = முத்தினிது - முத்தினிமை, நுங்கு + இனிது - நுங்கினிது, நுங்கினிமை, உல்கு + இனிது = உல்கினிது - உல்கினிமை

எனவும். நாகு + யாது = நாகியாது - நாகியாப்பு. அஃது + யாது = அஃதியாது - எஃகியாப்பு சுரும்பி யாது, தெள்கியாது எனவும் உம்மையால் - நாகுயாது - எஃகுயாது, தேக்குயாது, வண்டுயாது உல்குயாது எனவும். காடு + எருது = காட்டெருது, காடு + யானை = காட்டியானை, காட்டுயானை - ஆறு + ஒழுக்கு = ஆற்றெழுக்கு - ஆறு + யாப்பு = ஆற்றியாப்பு - குருடு + கண் = குருட்டுக்கண் கயிறு + கட்டில் = கயிற்றுக்கட்டில் எனவும் வரும். மற்றவற்றையும் இவ்வாறே கண்டு கொள்க.

## சுட்டுப்பெயர் வினாப்பெயர்கள் வேற்றுமையில் புணரும் முறைமை

நூ.100. அவைஇவை உவைஎவை யாவை அவ் இவ்உவ்
எவ் வேற்றுமையில் ஐ கெட்டற்றுப் பெறும்
அதுஇது உதுவெது யாது அன் சாரியை பெறும்

பொருள் : வேற்றுமைப் புணர்ச்சிக்கண் அவை இவை உவை எவை, யாவை, அவ், இவ், உவ், எவ் என்னும் பன்மைச் சுட்டு வினாப் பெயர்களில் ஈற்று ஐகாரம் கெட்டு அற்று என்னும் சாரியை பெறும் அது இது உது எது யாது என்னும் ஒருமைச் சுட்டு வினாப் பெயர்கள் அன் சாரியை பெறும். வையீற்றுச் சுட்டுப் பெயர் சிறுபான்மை ஐ ஈ று கெடாமலும் வரும்.

எ.டு : அவையற்றுக் கோடு - அவற்றுக்கோடு, இவையற்றுக்கோடு, இவற்றுக்கோடு உவையற்றுக் கோடு உவற்றுக்கோடு, எவற்றுக் கோடு, யாவற்றுக் கோடு எனவும் அவற்றுக் கோடு இவற்றுக் கோடு உவற்றுக்கோடு எவற்றுக்கோடு எனவும் - அதன்கோடு இதன் கோடு, உதன்கோடு, எதன்கோடு, யாதன்கோடு எனவும் வரும்.

அவை இவை உவை எவை என்பவை அது இது உது எது என்னும் ஒருமைச் சுட்டு வினாக்களின் இனமாகும். அவ் இவ் உவ் எவ் என்பவை அஃது இஃது உஃது எஃது என்னும் ஒருமை ஆய்தச் சுட்டு வினாக்களின் இனமாகும்.

## வேற்றுமைப் புணர்ப்பில் மூவிடப் பெயர்களின் திரிபு

நூ.101. வேற்றுமைப் புணர்ப்பில், யான் என் எனத் திரியும்
யாம் நாம் எம்நம் ஆகும், முன்னிலை
நீ, நின் உன்ஆம் நீயிர்நீர் நும்உம்மாம்
படர்க்கை தாம் தான் தம் தன் ஆகும்.

பொருள் : வேற்றுமைப் புணர்ப்பின்கண் தன்மைப்பெயர்களாகிய யான் என் எனத் திரியும் யாம் நாம் என்பவை எம் நம் எனத் திரியும் முன்னிலைப் பெயர்களாகிய நீ என்பது நின் உன் எனவும் நீயிர் நீர் என்பவை நும் உம் எனவும் படர்க்கைப் பெயர்களாகிய தான் தாம் என்பவை தன் தம் எனவும் திரியும் தவிர்வழிவந்து வழங்கும் நான் என்னும் தன்மை ஒருமைப் பெயர் யான் என்பதை ஒத்து என் எனத் திரிந்து வழங்கும்.

எ.டு : என்உயிர் - என்னை, எம் உயிர் - எம்மை, நம்வீடு - நம்மை எனவும் நின்பொருள் - நின்னை, உன்பொருள் உன்னை, நும்பொருள் நும்மை உம்பொருள் உம்மை எனவும் தன்பொருள் தன்னை தம்பொருள் தம்மை எனவும் வரும். உலக வழக்கில் பன்மைப் பெயர்கள் கள் விகுதியொடு கூடி எங்கள், உங்கள், தங்கள் எனவரும்.

## வேற்றுமையில் குற்றியலுகர ஈறு சாரியை பெறுதல்

சூ.102. *குற்றியலுகரம் இன்சாரியைபெறும்*
*மரப்பெயராயின் அம்மும் பெறுமே*

பொருள் : வேற்றுமைப் புணர்ப்பின்கண் குற்றியலுகர ஈறு இன் என்னும் சாரியை பெறும் மரப்பெயராயின் அம் என்னும் சாரியையும் பெறும்.

எ.டு : நாகின்கால், எஃகின் கூர்மை, கழுகின் சிறகு குரங்கின்கை, தெள்கின் கால் எனவும், கமுகந்தோட்டம், தெங்கம்பழம், குருந்தங்கண்ணி எனவும் வரும். அம்மும் என்னும் எச்சவும்மையால் புற்றாஞ்சோறு என ஆம் என்றும் சாரியை பெறுதலும் கொள்க.

## அகர ஈற்றின் முன் வல்லினம் மிகா இடங்கள்

சூ.103 *செய்யிய வினையெச் சம்பெய ரெச்சம்முற்று*
*அஃறிணைப் பன்மைப் பெயர்கள் முன் வலிமிகா.*

பொருள் : செய்யிய என்றும் வாய்பாட்டு வினையெச்சம் பல்வகைப் பெயரெச்சங்கள் பல்வகை அகர ஈற்று வினை முற்றுக்கள் அகரவீற்று அஃறிணைப் பன்மைப் பெயர்களின் முன் வல்லெழுத்து மிகாதியல்பாகும்.

எ.டு : (1) உண்ணிய கொண்டான், காணிய சென்றான், கொளீயதந்தான்

(2) உண்ட களிறு - உண்கின்ற களிறு, உண்ணாத களிறு, செந்நாய் தகர் பன்றி எனவும் கடைக் கணித்த பொருள், சித்திரித்த சுவர், வெளுத்தபுறா எனவும் பொன்னன்ன குதிரை, கடல் போன்றதானை, புகழ்சான்ற கவிஞன், மழகளிறு சிறிய கன்றுகள், பெரிய களிறுகள். இவை பல்வகைப் பெயரெச்சங்கள்.

(3) உண்டன பசுக்கள் உண்கின்றன களிறுகள் இவை அன்சாரியை பெறாமல் உண்ட பசுக்கள், உண்கின்ற களிறுகள் எனவும் வரும். உண்ப பறவைகள் காணுப சான்றோர் இவை தெரிநிலை வினைமுற்றுக்கள் - அமர்முகத்தன களிறுகள் அமர்முகத்த களிறுகள் கரியன பன்றிகள் கரியபன்றிகள். இவை குறிப்பு வினை முற்றுக்கள், வாழ்க கொற்றா, வாழிய கொற்றா இவைவியங்கோள் வினை.

(4) பலகுதிரைகள், சில களிறுகள், பல கொடுத்தார், சிலதந்தார் இவை அஃறிணைப் பன்மைப் பெயர்கள்.

இனி ஆறாம் வேற்றுமை உருபு இறுதிகெட்டு அகரம் மட்டும் வருமிடத்து என கைகள்இ தனதாள்கள் என இயல்பாகும் மற்று ‘அம்ம’ என்னும் இடைச் சொல் முன் செய்யுளின்கண் அம்மசாத்தா! என மிகாது வரும் அம்ம என்பது அம்மா என நீண்டும் வரும்.

## பலசில என்னும் பெயர்கள்

சூ.104. பலசில எனுமிவை தம்முன் தாம்வரின்
இயல்பும் மிகலும் இறுதி அகரம்
கெடுதலும் லகரம் றகரமாத லுமாம்

பொருள் : பல சில என்னும் அஃறிணைப் பெயர்கள் தம்முன் தரம் வருமிடத்து இயல்பாதலும் ஒரோ வழி மிகுதலும் லகரத்தின் மேல் உள்ள அகரம் கெடுதலும் அந்த லகர ஒற்று றகரமாகத் திரிதலுமாகும்.

எ.டு : பலபல, பலப்பல, பற்பல, சிலசில - சிலச்சில சிற்சில எனவரும் இவை மாறிச் சில பல, பலசில எனவருமிடத்து இயல்பாகும். இவை பிற வருமொழிகளோடு புணருமிடத்து அகர ஈற்று விதியையும் லகரஈற்று விதியையும் பெறும்.

## ஆகாரஈறு

சூ.105. அல்வழி ஆமா மியா வினா விளி வினை
முற்றிறுதி ஆமுன் வல்லினம் இயல்பாம்.

பொருள் : அல்வழிப் புணர்ப்பின்கண் ஆ, மா என்னும் பெயர்கள் மியா என்றும் அசைச்சொல் ஈற்றாவினா. விளிப்பெயர் வினைமுற்றுக்களின் ஆகார இறுதி முன் வல்லினம் இயல்பாகும்.

எ.டு : ஆகுறிது, சிறிது, தீது, பெரிது, மாகுறிது சிறிது தீது, பெரிது எனவும் கேண்மியா கொற்றா சாத்தா தேவா பூதா எனவும் அவனா கொண்டான், சென்றான், தந்தான் போயினான் எனவும், கண்ணா காண்க, செல்க, தருக, பயில்க எனவும், உண்ணா குதிரைகள், செந்நாய்கள் தகார்கள் பன்றிகள் எனவரும். உண்ணாக் குதிரைகள் என மிகின் அது ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சமாகும். உண்ணாக்கிடந்தான் என மிகின் செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சமாகும்.

## ஆகாரஈறு குறுகலும் குறுகிஉகரம்பெறலும்

106. குறில் வழி ஆ சில குறுகலும் அதனொடு
உகரம் ஏற்றலும் செய்யுள் வழக்காம்.

பொருள் : குறிலையடுத்து வரும் சில ஆகார ஈற்றுப் பெயர்கள் ஈறு குறுகலும் அதனொடு உகர விகுதி பெறுதலும் செய்யுள் வழக்காக நிகழும்.

எ.டு : இரா, கனா, நுணா, விளா, பலா, அரா, சுறா என்றாற் போல வரும் பெயர்கள் இரவு, கனவு, நுணவு, விளவு, பலவு, அரவு, சுறவு என வரும் நிலா என்பது குறுகி நிலவிரிகானல் என உகரம் பெறாதும் வரும். அரவு சுறவு போல்வன மேலும் ஓர் அம் விகுதி பெற்று அரவம், சுறவம் எனவும் வரும். மாா, கடா துலா என்றாற் போல்வன குறுகா. உலா என்னும் வினை உலவு உலவினான் என்று வரும்.

## இகர ஐகார ஈறுகள்

சூ.107. அல்வழி இஐம் முன் வலி இயல்பும்
மிகலொடு விகற்புமும் நீமுன் இயல்புமாம்

பொருள் : அல்வழிப்புணர்ப்பின்கள் இகர ஈற்றின் முன்னும் ஐகார ஈற்றின் முன்னும் வரும் வல்லினம் சில சொற்களில் இயல்பாகும் சிலவற்றின் கண் மிகும் சிலவற்றின்கண் உறழ்ந்து வரும். நீ என்னும் முன்னிலைப் பெயர் முன் இயல்பாயே வரும்.

எ.டு : பருத்திகுறிது, மூர்த்தி பெரிது வண்டி சிறிது நனிபேதை எனவும் காளை சிறிது யானை பெரிது தேரை குறிது எனவும் அடித்திங்கள் பாசிப்பயறு, தாழைப்பனை மேலைத்திசை காவிக்கல், சீலைத்துணி எனவும், கிளிகுறிது இளிக்குறிது, தினை குறிது, தினைக்குறிது எனவும். நீ கரியை சிறியை தனியை பெரியை நீ கண்டாய், செய்தாய், தந்தாய், பெற்றாய் எனவும் வரும். எழுவாய்த் தொடரில் பெரும்பன்மையும் இயல்பாகும். பண்புத்தொகை உவமத் தொகைகளில் மிகும் விகற்பம் வழக்கு நோக்கி அமையும்.

## புளி என்னும் சொற்குச்சிறப்பு விதி

நூ.108. புளிமரக் கிளவி அம்சாரியை பெறும்
சுவையெனின் இனமெல் லெழுத்தும்மிகுமே.

பொருள் : புளி என்னும் சொல் மரப்பெயராகவரின் அம் என்னும் சாரியயை பெறும் சுவைப்பெயராயின் வல்லினமேயன்றி இனமெல்லெழுத்தும் மிகும்.

எ.டு : புளியங்கொம்பு, புளியஞ்செதிள், புளியந்தோப்பு, புளியம்பழம் எனவும் புளிக்குழம்பு, புளிங்கறி, புளிச்சோறு, புளிஞ்சோறு, புளிந்தயிர், புளிம்பாளிதம் எனவும் வரும். வழக்கில் புளியஞ்சாதம் என அம்மும் பெறும்.

## முற்றுகரஈற்றுப்புணர்ச்சி

நூ.109. மூன்றா றுருபு வினைத்தொகை விதியீற்
றெண் சுட்டுப் பெயர்முற்றுகரமுன் வலிமிகா.

பொருள் : ஒடு என்னும் மூன்றாம் வேற்றுமையுருபு அது என்னும் ஆறாம் வேற்றுமை உருபு. வினைத்தொகையின் முதல் நிலைச் சொல் விதியீறாக நிற்கும். ஒரு இரு என்னும் எண்ணுப் பெயர் துவ்வீற்றுச் சுட்டுப் பெயர் (வினாப் பெயர்) முற்றுகர ஈற்றுச் சொல் முன் வரும் வல்லெழுத்துக்கள் மிகாவாம்.

எ.டு : கொடியொடு துவக்குண்டான், தாயொடு குழவி வந்தது எனவும் சாத்தனது கோயில் கொற்றனது தோட்டம் எனவும் அது குறிது இது

சிறிது உதுபெரிது, எது தருவாய், அடுகளிறு, தருபொருள், எழுகதிர் எனவும் ஒருகை, இருசெவி ஒரு தலை, இருபால் எனவும் வரும். மற்றும் பத்து ஆறு என்னும் எண்ணுப் பெயர்கள் குறுகிப்பது அறு என முற்றுகரமாக நிற்குமிடத்து, முப்பது குதிரை ஐம்பது காளைகள் அறுசுடர், அறுபது என இயல்பாக வல்லெழுத்துப் புணரும்.

## பூப்பெயர் முன் வல்லினம்

**நூ.110. பூப்பெயர் முன் மெலி மிகுதலும் உண்டே**

**பொருள் :** பூ என்னும் பெயர் முன் வல்லெழுத்து மிகுதலேயன்றி இனமெல்லெழுத்து மிகுதலும் உண்டு.

**எ.டு :** பூக்கொடி - பூங்கொடி, பூச்செடி பூஞ்செடி - பூத்தலை - பூந்தடம் - பூப்பந்து பூம்பொழில் எனவரும்.

## ஏஓ இடைச்சொல் முன் வல்லெழுத்து இயல்பாதல்

**நூ.111. ஏஓ இடைச்சொல் முன்வலி இயல்பாம்.**

**பொருள் :** ஏழுபொருள்களில் வரும் ஏகாரம், எட்டுப்பொருள்களில் வரும் ஓகாரம் இவற்றின் முன் வரும் வல்லினம் மிகாது இயல்பாகும்.

**எ.டு :** அவனே கொண்டான் தேற்றம், நீயே கொண்டாய்? வினா நிலனே நீரே தியே வளியே வானே பூதங்கள் ஐந்து. அவருள் இவனே நெடியன் பிரிநிலை ஏஎ இவளொருத்தி பேடியோ என்றான் இசைநிறை. கடல் போல் தோன்றலகாடிறந்தோரே காதலர், ஈற்றசை என்பிலதனை வெயில் போலக் காயுமே காண். யானே கொள்வேன் எதிர்மறை. அவனே கொண்டான் பிரிநிலை. தனக்கோ பெற்றான்ஒழியிசை ஆண்டுத்தோன்றும் உருபு மகனோ குற்றியோ ஓஒ பெரியன் உயர்வு சிறப்பு ஓஒ கொடியன் இழிவு சிறப்பு அவனோ கொள்வான்? எதிர்மறை. கண்ணனோ முருகனோ தேவனோ பார்ப்போம் தெரிநிலை. இவருக்கு உண்மை தெரியாதோ கண்ணா கழிவிரக்கம். அவனோ காணவில்லை என் செய்வது அசை.

## ஐகார ஈற்றுப் பெயர் சில சாரியை பெறுதல்

சூ.112. ஐயீற்றுப் பெயர் சில அம்மும் பெறுமே.

பொருள் : ஐகார ஈற்றுப் பெயர்களுள் சில அம்முச் சாரியையும் பெற்றுவரும்.

எ.டு : வழுதுணங்காய், தாழம்பூ, ஆவிரம்பூ, தென்னங்கன்று பனந்திரள் பனம்பழம் இவை ஈறு கெட்டு அம்முப் பெற்றன. புன்னையங்கானல் கொல்லையஞ்சாரல் இவை ஈறு கெடாமல் அம்சாரியை பெற்றன. சாரியை பெறாமல் பனைக்கொடி (சேரன்கொடி) பனைத்திரள் எனவும் வரும். பனை அட்டு என்பது பனாஅட்டு எனத் திரிந்தும் வரும்.

## வல்லெழுத்துமிகுமிடங்கள்

சூ.113. வினாச்சுட் டிடைச் சொல் செய வென் னெச்சம்
செய்தென் எச்சத் திரிபு ஐ குவ்வுருபு
அத்தற்றுச் சாரியை வன்றொடர் மென்றொடர்க்
குற்றுகரம் மகரங்கெடும் வீதியீறு
ஏவல் வினை எதிர் மறைப் பெயரெச்சம்
அளபெடைப் பெயர்முன் வலிமிகும் மன்னே.

பொருள் : எ யா வினா அ இ உ சுட்டிடைச் சொற்கள். செய என்னும் வாய்பாட்டு வினையெச்சம் செய்து என்னும் வாய்பாட்டு யகர இகர த்திரிபாகிய வினையெச்சம் ஐயுருபு குவ்வுருபு அத்து அற்று என்னும் சாரியைகள் வன்றொடர் குற்றுகரம் மென்றொடர்க் குற்றுகரம் மகர ஈறு கெட்டு நிற்கும் விதி உயிரீறு உயிரீற்று முதனிலை ஏவல் வினை ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் அளபெடை விகாரமாக வரும் பெயர். இவ்வுயிரீறுகளின் முன் கசதப என்னும் வல்லெழுத்துக்கள் பெரும்பான்மை மிகும்.

எ.டு : (1) எக்கடல், எச்சுரம், எத்தோட்டம், எப்பொருள், அக்கடல், இக்கடல், உக்கடல், சுடர், தலை, பொழுது எனவரும். சுட்டிடைச் சொற்கள் அந்த இந்த உந்த, அப்படி இப்படி எனவருமிடத்தும் ஆங்கு ஈங்கு ஊங்கு என நீண்டு இடஞ்சுட்டி வருமிடத்தும் மிகும். அந்தக்காடு அப்படிச் செய்தான் ஆங்குக் கண்டான் எனவரும்.

(2) காணச் சென்றான் வரக்கண்டான் உண்ணப் போனான் காணப் பெற்றான் எனச் செயவென் எச்சத்தின் முன் மிகும்.

(3) போய்க்கண்டான், தாய்ச் (தாவி) சென்றான் - தேடிக் கண்டான் கொட்டிக் கொடுத்தான், கூறித்தந்தான், பேசிப்பார்த்தான்.

(4) விளவைக் கண்டான் ஆவைப் பார்த்தான் - சோற்றைப் பிசைந்தான்.

(5) ஊர்க்குச் சென்றான். கூழுக்குக் குற்றே வல் செய்தான் - கடைக்குச் சென்றான்.

(6) மரத்துக்கிளை, அவற்றுச்செவி - பதிற்றுப்பத்து

(7) பாக்குச் சிறிது, மச்சுப்பெரிது, தெற்குத்திசை, பார்ப்புச் சிறிது.

(8) குண்டுக்கல், கன்றுக்குட்டி, தாம்புக்கயிறு குஞ்சுப்பறவை.

(9) மரக்கிளை, குளக்கரை, அகப்பொருள், வட்டப்பலகை, அறச்செயல்.

(10) நடக்கொற்றா, படிச்சாத்தா, வைக்கொற்றா, நொக்கொற்றா 'மன்னே' என்பதனால் இவை நடகொற்றா, படிசாத்தா, வை சாத்தா என்று இயல்பாகவும் வரும்.

(11) ஓடாக்குதிரை, ஓயாச்சுடர், வேகாத்தலை, போகாப்புனல்.

(12) குரீஇச் சிறகு ஆடூஉக் குறியன் மகடூஉச்சிறியள் குழூஉக்குறி பழூஉப்பல் எனவரும்.

## உயிரீற்றின்முன் மென்கணம் இடைக்கணம்

சூ.114. உயிரீற்றின்முன் மெலி இடை இயல்பே.

பொருள் : விளஞான்றது, விளநீட்சி, விளமரம், விளயாப்பு, விளவலிது, பலாஞான்றது, பலாநன்று, பலாமுள், பலாயாப்பு பலா வலிது ஏனைய உயிரீறுகளின் முன்னும் குற்றுகர ஈற்றின் முன்னும் ஞான்றது, நீண்டது, மாண்டது யாது வலிது என்பவற்றைக் கூட்டி இயல்மாபாறு கண்டு கொள்க.

## ஒற்றீறுகளின் முன் உயிர் எழுத்து வந்து புணர்தல்

சூ.115. ஒற்றீற்றின் முன்உயிர் ஏறி உயிர்மெய்யாம்
தனிக்குறில் ஒற்றுமுன் உயிர்வர இரட்டும்.

**பொருள் :** பதினொரு ஒற்றீறுகளின் முன் இருவழியும் உயிர் எழுத்து வந்து புணருமிடத்து ஒற்றின்கண் உயிர் எறி உயிர் மெய்யாகும் தனிக் குறிலை அடுத்த ஒற்றிறாயின் அவ்வொற்று இரட்டும் இரட்டிய ஒற்றின்கண் உயிர் எறி உயிர் மெய்யாம்.

**எ.டு :** உரிஞ் அழகிது = உரிஞ்சழகிது, அரணுயர்ந்தது பொருளினிது, பழமினிது அவனழகன் தாயன்பு சுவரோவியம் - கடலலை, புகழினிது - அருளுடைமை - கண் - கண்ணழகு - எம்மூர், பொன்னொளி மெய்யினிது சொல்லாட்சி, தெவ்வரிது உள்ளொளி எனவரும்.

## ணகரனகர ஈற்றுப்புணர்ச்சி

**நூ.116.** ணனவென் இறுதி வேற்றுமைப் புணர்ப்பில்
வலிவரின் டறவாம் அல்வழி இயல்பாம்
மெல்லினம் இடையினம் இயல்பாகும்மே

**பொருள் :** வேற்றுமைப் புணர்ப்பின்கண் ணகரனகர ஈறுகள் வல்லினம் வரின் முறையே டகரறகரங்களாம் அல்வழிப்புணர்ப்பில் இயல்பாகும். மெல்லின இடையினமெய்கள் வரின் இருவழியும் இயல்பாகும். (வருமொழி தகரம் திரியும்)

**எ.டு :** மண் - மட்கலம், மட்சிறை, மட்டாழி, மட்புதர், சிறுகட்களிறு செந்நாய் தகர் பன்றி எனக் கூட்டிக் காண்க - பொன் - பொற்கலம், பொற்சரடு, பொற்றகடு, பொற்பாவை இவை வேற்றுமைப்பொருள் மண்கரிது சிறிது, தீது, பெரிது (மண்+தீது = மண்டீது எனத் தகரந் திரிதல் மேற் கூறப்பெறும்) பொன் குழையும், பொன்சிறிது, பொன்றூயது, பொன் பெரிது எனவரும். அல்வழியில் சிறுபான்மை எண் (எள்) சாண் என்பவை எட்சிறிது சாட்கோல் எனவும் மண்ஞாலம், மண்ணிலம், மண்மாண்டது, மண்யாப்பு, மண்வலிது. பொன்ஞாயிறு, பொன்னீட்சி, பொன்யாப்பு பொன்வளை எனவும் வரும்.

## ணனலள ஈற்றுமுன் தகர நகரம் வந்துபுணர்தல்

**நூ.117.** ணளமுன் தநவரின் இருவழிக் கண்ணும்
முறையே டணவாம் னலமுன்றனவாம்
விட்டிசைப்பின் அவை இயற்கையாகும்
லளக்கள் ஆய்தமாதலும் உண்டே.

பொருள் : ணள முன் தகரமும் நகரமும் வரின் இருவழிக்கண்ணும் முறையே தகரம் டகரமாகும். நகரம் ணகரமாகும் னலக்களின் முன் தகர நகரங்கள் வரின் முறையே தகரம் றகரமாகும். நகரம் னகரமாகும். இவற்றை ஒருங்குபுணர்த்துக் கூறாமல் விட்டிசைத்துக் கூறுமிடத்து இயற்கையாக நிற்கும் (செய்யுள் வழக்கில் விட்டிகையாமலும் உலக வழக்கில் விட்டிசையாகவும் கூறுதல் மரபாகும்) லகரளகரங்கள் ஆய்தமாகத் திரிதலும் உண்டு.

எ.டு : மண் + தலம் = மண்டலம் மண் + தீமை = மட்டீமை மண்ணன்று - பொன் + தகடு = பொற்றகடு - பொன் + தீது = பொன்றீது. பொன் + நன்று = பொன்னன்று. தன் + நலம் = தன்னலம் எனவும் முள் + தீது = முஃடீது - கல் + தீது = கஃறீது எனவும் வரும்.

## மேலனவற்றிற்குச் சிறப்பு விதி

சூ.118. குறில்வழி யல்லா ணள னல கெடுதலும்
அவ்வம் சாரியை பெறுதலும் உண்டே

பொருள் : குற்றெழுத்தைச் சாராமல் நெடிலையும் தொடர் மொழியையும் சார்ந்து நிற்கும் ணளனல ஈறுகள் ஓரோவழிக் கெடுதலும் அகரச் சாரியை பெறுதலும் அம்சாரியை பெறுதலும் உண்டு.

எ.டு : பாண் + நன்று = பாணன்று - வேள் + தீயன் = வேடீயன் வான் + நிலவு = வானிலவு பால் + நிலவு = பானிலவு வேள் + நல்லன் = வேணல்லன் பாண் + சேரி = பாணச்சேரி, எயின் + குடி = எயினக்குடி - விண்ணந்தாயன், கன்னந்தட்டு - புள்ளம்பாடி - கொல்லச்சேரி எனவரும். விண்ணத்துக் கொட்கும் என்னுமிடத்து அத்து என்பது அகத்து என்பதன் மரூஉ இது விண்வத்துக் கொட்கும் என மருவியும் வரும்.

## தேன் என்னும் சொற்குச் சிறப்புவிதி

சூ.119. தேன்மொழி முன்னிரு வழியும் வலிமெலி
இடையினம் வரஇயல்பாம் மெலி முன்னர்க்
கெடுதலும் வன்மை மென்மையோ டுறழ்தலும்
இறால்வரின் அத்தும் பெறுதலும் மரபே.

பொருள் : தேன் என்னும் சொல்லின் முன் அல்வழி வேற்றுமையாகிய இருவழிக் கண்ணும் வல்லின மெல்லின இடையின மெய்கள் வரின் னகரம் இயல்பாகும். மற்றும் மெல்லெழுத்தின் முன்னர்க்கெடும் வல்லெழுத்தின் முன் வல்லெழுத்தும் மெல்லெழுத்தும் உறழ்ந்து வரும். இறால் என்னும் சொல்வரின் அத்துச் சாரியை பெறுதலும் இயல்பாதலும் மரபாகும்.

எ.டு : தேன்கசிந்தது, தேன்கசிவு, தேன்ஞான்றது தேன்ஞாற்சி - தேன்யாது தேன் வலிமை எனவும், தேமொழி தேமலர் எனவும் தேக்குடம் தேங்குடம் எனவும் தேத்திறால், தேனிறால் எனவும் வரும். அத்தும் என்னும் உம்மையால் தேனின் கசிவு, தேனின் வலிமை என இன்சாரியை பெறுதலும் கொள்க.

## மகர ஈறு

நூ.120. நாற்கணத் தின்முனும் மவ்வீறழியும்
அல்வழி உயிர் இடையினமுன்நிலையும்
வலிவரின் இனமெல்லெழுத்தாய்த் திரியும்.

பொருள் : மகர ஈறு உயிர்வலி மெலிஇடை என்னும் நாற்கணங்களின் முன் வேற்றுமையிற் கெடும் அவ்வழிக்கண் உயிர் முன்னும் இடையினத்தின் முன்னும் கெடாது இயல்பாகும். ஈறுகெட்ட வழி விதி உயிரீறாக நின்று உயிரீற்றுவிதிகளைப் பெறும். வலிவரின் இனமெல்லொழுத்தாய்த் திரியும்.

எ.டு : மரம் + அடி = மரவடி, மரக்கிளை, மரநார், மரவேர் எனவும் மரமுயர்ந்தது. மரம் வளர்ந்தது. மரங்குறிது, மரஞ்சிறிது, மரந்திண்ணிது, மரம்பெரிது எனவரும். வேற்றுமைக்கண் மரத்திலை, மரத்துக்கிளை மரத்துநீட்சி, மரத்துவேர் என அத்துச்சாரியை பெற்றும் வரும்.

## யரழ ஈறு

நூ.121. அல்வழி யரழ முன் வல்லெழுத்துறழ்தலும்
வேற்றுமைக்கண்வலி மென்மையொடுறழ்தலும்
மென்மை இடைமை தாம் இயல்பாதலுமாம்.

பொருள் : அழல்வழிப்புணர்ப்பின்கண் யரழ ஈறுகளின் முன் வரும் வல்லெழுத்து மிக்கும் இயல்பாயும் வருதலும் வேற்றுமைப் புணர்ப்பின்கண் வல்லெழுத்து மெல்லெழுத்தோடு உறழ்தலும் மெல்லினமும் இடையினமும் இயல்பாதலுமாம்.

எ.டு : வேய்குறிது சிறிது தீது பெரிது வேர்குறிது சிறிது தீதி பெரிது யாழ் சிறிது தீது பெரிது எனவும் மெய்க்கீர்த்தி, கார்ப்பருவம், பூழ்ப்பறவை எனவும் நாய்க்கால் தேர்த்தலை, யாழ்ப்பத்தர், வேய்ங்குழல் ஆர்ங்கோடு பாழ்ங்கிணறு எனவும் பாய்ஞமலி, பார்மகள், பாழ்வயல், வேய்யாது வேர்யாது வீழ் யாது எனவும் வரும் வேய்குறிது வேய்க்குறிது என ஒரு சொற்கண்ணும் உறழ்ந்து வரும்.

## ழகரஈறு ளகரத்தொடு ஒத்தல்

சூ.122. ழகரம் ஒரோ வழி ளகரமொடு ஒத்து
டகர ணகரமாத் திரிதலும் மரபே

பொருள் : ழகர மெய் ஒரோ வழி ளகர மெய்யோடு ஒத்து டகரமாகவும் ணகரமாகவும் திரிதல் மருவிய வழக்காகும்.

எ.டு : திகழ் + தசக்கரம் = திகடச்சக்கரம், இருள்வாழ்ச்சி = இருவாட்சி எனவும், வாழ்நாள் - வாணான், மகிழ்நன் - மகிணன். அம்பல வாழ்நன் - அம்பலவாணன், யாழ்நரம்பு - யாணரம்பு எனவும் வரும்.

## லகரளகர ஈறு

சூ.123. லளவேற் றுமையில் வலிவரின்றட வாம்
அல்வழி உறழும் மெலிவரின் னணவாம்
இடைவரின் இயல்பாம் இருவழியும்மே.

பொருள் : லகரமும் ளகரமும் வேற்றுமைப்புணர்ப்பில் வல்லெழுத்துவரின் லகரம் றகரமாம் ளகரம் டகரமாம். அல்வழிப்புணர்ப்பில் அவை உறழ்ந்து வரும். இருவழியும் மெல்லெழுத்துவரின் லகரம் னகரமாம் ளகரம் ணகரமாம் இடையெழுத்துவரின் இயல்பாகும்.

எ.டு : கற்குறை, கற்சிறை, கற்றடம் கற்பலகை முட்குறை முட்செடி முட்டாழை, முட்புதர் எனவும் கல்சிறிது, கற்சிறிது, முள்சிறிது முட்சிறிது எனவும் கல் + மலை = கன்மலை, வெள்+மணி = வெண்மணி எனவும், கல்வலிது முள்வலிது எனவும் வரும். (தகரம் வரும் வழித் திரிந்தே வரும்) கல்லு, புள்ளு எனச் சாரியை பெற்ற வழி முற்றுகர ஈற்றுவிதி பெறும். கல்க்கறை முள்க்குறை என வழங்குதல் பிழையாகும்.

## அம்சாரியை பெறுதல்

**சூ.124. ஆல்வேல் மரப்பெயர் அம்முச்சாரியை பெறும்.**

**பொருள் :** ஆல், வேல் என்னும் மரப்பெயர்கள் அம் என்னும் சாரியை பெறும்.

**எ.டு :** ஆலங்காடு, ஆலமரம், அலவிழுது, வேலங்கிளை, வேலமுள், வேலம் விறகு எனவரும். உயிர்வரின் சிறுபான்மை ஆலிலை என இயல்பாயும் வரும்.

## குற்றியலுகரப் புணரியல் குற்றியலுகரத் தொடர்

**சூ.125. தனிநெடிற் பின் உயிர் ஆய்தம் வலிமெலி**
**இடையெழுத் துத் தொடர்ப் பின்வரும் முறையாற்**
**குற்றுகரத் தொடர் அறுவகைப்படுமே.**

**பொருள் :** உயிராகவும் உயிர்மெய்யாகவும் நிற்கும் தனிநெட்டெழுத்தின் பின்னும் மெய்யினை ஊர்ந்து பிறஎழுத்துக்களோடு தொடர்ந்து நிற்கும் உயிர் மெய்ப்பின்னும் ஆய்தம் வல்லொற்று மெல்லொற்று இடையொற்றுக்கள் பிறவற்றொடு தொடர்ந்து நிற்கும் தொடர்களின் பின்னும் அமைந்து நிற்கும் முறைமையாற்குற்றியலுகரத் தொடர் அறுவகைப்படும்.

சார்பெழுத்தாகிய குற்றியலுகரம் ஒன்றே எனினும் தன்னைத் தொடர்ந்து மேல் நிற்கும் எழுத்து வகையால் அறுவகைப்படும். காரணம் தொடர்ந்து நிற்கும் எழுத்துக்கள் காரணமாகப் புணர்ச்சி விதிகள் வேறுபடுதலின் அறுவகைத் தொடர்களாகப் பிரித்துக் கொள்ளப்பட்டது.

**எ.டு :** ஆடு, காடு - முரசு, பலாசு, எஃகு, கொக்கு, குரங்கு, தெள்கு என நிற்கும்.

## நெடிற்றொடர் முன் மூவினமும் புணர்தல்

**சூ.126. நெடிற்றொடர் முன்னியல்பு இரட்டின்வலிமிகும்**

**பொருள் :** நெடிற்றொடர்க் குற்றுகரத்தின் முன் மூவினமும் இயல்பாகப் புணரும். நெடிற்றொடர் ஒற்று இரட்டுமிடத்து வரும் வல்லினம் மிகும்

ஏனைய இயல்பாகும். பெரும்பான்மையும் டகர றகர ஒற்றுக்களே வேற்றுமைப் புணர்ப்பின்கண் இரட்டும்.

எ.டு : நாகு சிறிது காசு குறிது, நாடு பெரிது போது புலர்ந்தது, ஆறு தணிந்தது, நாடுநெடிது, நாடு வலிது எனவும் ஆட்டுக்குட்டி, காட்டுப்பசு, ஆற்றுக்கரை நாற்றுக்கட்டு எனவும் வரும். ஏனையவற்றொடும் இவ்வாறே கூட்டிக் கண்டு கொள்க.

## வண்றொடர், மென்றொடர் ஆய்தத்தொடர் உயிர்த்தொடர் இடைத்தொடர்

சூ.127. வலிமெலித் தொடர்முன் வலிமிகும் மன்உயிர்
இடைத்தொடர் ஆய்தமுன் யாவும் இயல்பாம்
மென்றொடர் வலிப்பினும் உயிர்த்தொடர் இரட்டினும்
வேற்றுமைப் பொருள்வயின் வல்லெழுத்து மிகுமே.

பொருள் : வன்றொடர் மென்றொடர்க்குற்றியலுகரத்தின்முன் வரும் வல்லெழுத்து பெரும்பாலும் மிகும் சிறுபான்மை அல்வழியில் மிகா. உயிர்த்தொடர் இடைத்தொடர் ஆய்தத் தொடர்களின் முன் மூவினமும் இயல்பாகும். மென்றொடர் மொழி வன்றொடராகத் திரியுமிடத்தும் உயிர்த்தொடர்மொழி ஒற்று இரட்டுமிடத்தும் வேற்றுமைப் பொருள் வயின் வல்லெழுத்துமிகும்.

எ.டு : பாக்குக் கடிது, பாக்குக் கடுமை, கச்சுச்சிறிது, கச்சுச்சிறுமை - தெங்குச் சிறிது அன்புக்குணம், நுங்குச்சுளை பஞ்சுப்பொதி, சிந்துப்பாட்டு எனவும் கோங்குபூத்தது, அன்பு பெரிது மஞ்சு பரந்தது எனவும், பரிசு பெரிது மருது குறிது, பொழுது புலர்ந்தது எனவும் வரும். மன் என்றமையால் சிறுபான்மை வேற்றுமையில் மிளகுச் செடி மெழுகுத்திரி என வல்லெழுத்து மிகும். தெள்குசிறிது தெள்குசிறுமை, எஃகு கடிது, எஃகு கடுமை எனவும் அன்பு + தளை = அற்புத்தளை - செம்பு + தவலை = செப்புத்தவலை - நஞ்சு + கொடி = நச்சுக்கொடி எனவும், குருடு + கண் = குருட்டுக்கண் கயிறு + கட்டில் = கயிற்றுக்கட்டில் எனவும் வரும்.

## மென்றொடர் வன்றொடராதலும் சாரியை பெறுதலும்

சூ.129 மென்றொடர் சிலவன் றொடாரம் ஏற்புழி
ஐஅம்இன் சாரியை பெறுதலும் வழக்கே

பொருள் : மென்றொடர்க் குற்றுகர மொழிகள் சில வன்றொடராதலும் ஏற்குமிடத்து ஆறீற்றுக் குற்றுகர மொழிகளும் ஐ அம் இன் என்னும் சாரியை பெறுதலும் வழக்காகும்.

எ.டு : சுரும்பு + நாண் = சுருப்புநாண் - மருந்து + பை = மருத்துப்பை குரங்கு + வலி = குரக்குவலி என்பு + உடம்பு = ஏற்புடம்பு எனவும், பண்டு + நாள் = பண்டைநாள் நேற்று + பொழுது நேற்றைப்பொழுது - கரும்பு + சாறு = கருப்பஞ்சாறு, பிரம்பு + கூடை = பிரப்பங்கூடை - உழுந்து + மா = உழுத்தமா எனவும் நாகின் செவி கழுகின்கண் எஃகின்நுனி பாட்டின்பொருள் வண்டின்சிறகு தெள்கின்கால் எனவும்வரும்.

## தெங்கு என்னும் சொற்குச் சிறப்புவிதி

நூ.129. காய்வரின் தெங்குநீண்டிறுதிகே டுறலுமாம்.

பொருள் : தெங்கு என்னும் மரப்பெயர்காய் என்னும் சொல்லொடு புணரின் முதல் நீண்டு ஈற்றுயிர் மெய் கெடுதலும் ஆகும்.

எ.டு : தெங்கு + காய் தேங்காய் எனவரும். எதிர்மறை உம்மையால் ஈறு கெடாமல் அம்முச்சாரியை பெற்றுத் தெகங்கங்காய் எனவும் வரும்.

## எண்ணுப்பெயர்களின் புணர்நிலை

நூ.130. ஒன்று முதல் எட்டெண் தம்மொடும் பிறவொடும்
புணர்வுழி முதலீர் எண்முதல் நீளும்
மூன்றாறேழ் முதல் குறுகும் எழ் ஆறல
இறுதி உயிர்மெய் கெடும் ஆறுயிர் வரின்
முதலும் ஏழ்மெய்வரின் இறுதியும் இயல்பாம்.

பொருள் : ஒன்று முதலாக எட்டு ஈறாக உள்ள எண்ணுப் பெயர்கள் தம்மொடு தாமும் பிறபெயர்களும் வந்து புணருமிடத்து ஒன்று இரண்டு என்பவை முதல் நிளும் மூன்று ஆறு ஏழு என்னும் பெயர்கள் முதல் குறுகும் ஏழும் ஆறும் அல்லாத ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து எட்டு என்னும் பெயர்களின் இறுதி உயிர்மெய்கள் கெடும். ஆறு என்னும் பெயர்முன் உயிர்வரின் முதலும் ஏழு என்னும் பெயர் முன் மெய்வரின் இறுதியும் இயல்பாக நின்றுபுணரும்.

வருமாறு : ஒன்று (ஒன்று) ஓர், இரண்டு (ஈரண்டு) ஈர், மூன்று - மூன்று, அறு, எழு ஈறுகெட்டவழி - ஒன், ஈரண், முன், நான், ஐந், எட், ஆறு - ஏழு என நிற்கும். பின்னர் வரும் விதிகளுடன் எடுத்துக்காட்டு வருமாறு. ஒன்றொன்று - ஒரொன்று, இருபொழுது, ஈராயிரம். மும்மூன்று, முப்பது, மூவுலகு, முந்நூறு - நானான்கு, நாற்பொருள் - நான்காயிரம் நாலாயிரம் - ஐந்தைந்து, ஐம்பொருள், ஐந்தாறு - ஆறாறு அறுபது, ஆறாயிரம், அறுகால், ஏழேழு, எழுநூறு, ஏழாயிரம், ஏழ்கடல் எட்டெட்டு, எண்பது, எண்ணாயிரம் எனவரும்.

## ஒன்று - இரண்டு

சூ.131. ஒன்றின் னவ் ரவ்வாம் இரண்டின் ரவ்வுயிர்
ணகரத்தொடுகெட உயிர்வரின் முதனிலை
நீளும் மெய் வரின்ரவ் உகரம் ஏற்கும்.

பொருள் : ஒன்று என்னும் பெயரின் னகர ஒற்று ரகர ஒற்றாகத் திரியும் இரண்டு என்னும் பெயரின் ரகரத்தின் உயிர் ணகர ஒற்றொடு கெடும். வருமொழியில் உயிர்வரின் ஒகரம் ஓகாரமாகவும் இகரம் ஈகாரமாகவும் நீளும். வருமொழி மெய்வரின் ரகர ஒற்று உகரம் ஏற்கும்.

வருமாறு : ஒன்று - ஒன் - ஒர் - ஓர் + ஆயிரம் = ஓராயிரம், ஓர் + உயிர் - ஒருயிர் ஒர் + நூறு - ஒருநூறு ஒர் + கலம் = ஒருகலம், இரண்டு இரண்- இர். ஈர் + ஆயிரம் ஈராயிரம் ஈர் - உலகம் = ஈருலகம் இர் + நூறு = இருநூறு. இர் + நாடு இருநாடு வழக்கில் விட்டிசைத்துக் கூறுமிடத்து - உயிர்வரின் நீளாமல், ஒரு ஆடு ஒரு உலகம் எனவும் இரண்டாயிரம் இரு உலகம், இரு எருமை எனவும் வரும் ஒப்புமை வழக்கால் வருமொழி மெய் வருமிடத்தும் ஒரு ஓர் எனத் திரிந்து ஒருநாள் ஓர்நாள், ஓர் வீடு எனவரும். இவ்வாறு வருதல் வழுவாகும். இவ்வாறே ஒரு ஆயிரம் ஒரு உலகம். இரு எருது இரு உயிர் என்பனவும் வழுவாகும். (எண்ணுப்பெயர்களின் அடிச்சொல்லும் ஆக்கமும் பற்றி மொட்டும் மலரும் என்னும் சொல்லாய்வுக்கட்டுரை நூலிற் கண்டுகொள்க.)

## மூன்று நான்கு ஐந்து எட்டு

சூ.132. மூன்றனொற் றுயிரும் யகரமும் எய்தின்
வவ்வாம் பிறவரின் அவையாம் நான்கன்
புள்ளிலற வாகும் லவ் உவ்வொடும் வரும்

ஐந்தனொற் றழிவு வலிவரின் இனமும்
மெலிவரின் அவையும் இடைவரின்கே டுமாம்
எட்டன் ஒற்றே ணகரமாத் திரிமே.

பொருள் : மேலை விதிப்படி ஈறு கெட்டு நிற்குமிடத்து மூன்று என்னும் பெயரின் னகர ஒற்று உயிரும் யகரமும் வரின் வகரமாகத் திரியும் பிறவரின் வந்த அவ்வெழுத்தாகத் திரியும். நான்கு என்னும் பெயரின் னகரம் லகரமாகவும் றகரமாகவும் திரியும் லகரஒற்று உகரம் ஏற்றும் வரும் ஐந்து என்னும் பெயரின் நகர ஒற்றுக் கெடுதலும் வலிவரின் இனமாதலும் மெல்லெழுத்துவரின் அவையுமாகத் திரிதலும் இடை எழுத்துவரின் கெடுதலுமாகும். எட்டு என்னும் பெயரின் ஒற்று ணகரமாகத் திரியும்.

எ.டு : மூன்று - எருது = முவ்வெருது - முவ்வாயிரம் மூன்று + யாழ் முவ்யாழ், முவ்யானை எனவும் (சிறுபான்மை வழக்கில் மூவெருது மூவாயிரம் என முதல் குறுகாதும் வரும்) முக்கடல், முச்சுரும்பு, முத்தலை, முப்பால், முஞ்ஞமலி, முந்நீர், மும்மதில், முவ்வட்டில் எனவும் - நாலு நாலாயிரம் நாலுகுயில், நாலுநாழி, நாலுவேலி, நாற்கழஞ்சு, நாற்சதுக்கம் நாற்பூதம் (றகரமாகத் திரிதல் வல்லெழுத்து வருமிடத்தேயாம்) ஐந்து, ஐயாயிரம், ஐயாறு, ஐங்காதம், ஐஞ்சுறா, ஐந்தலை, ஐம்பனை, ஐஞ்ஞமலி ஐந்நூறு, ஐம்மலை, ஐயானை, ஐவேலி எனவும், எட்டு எண்ணாயிரம் எண் கொண்டல், எண்ஞமலி எண்வேலி எனவும் வரும். இங்ஙனம் திரியாமல், மூன்றுலகம், மூன்று கிளை, நான்காயிரம், நான்குதிசை, ஐந்திலக்கணம், ஐந்து கடல், எட்டாயிரம், எட்டுத்திசை எனவும் வரும்.

## ஒன்று முதலாயவற்றின்முன் பத்துஎன்னும் எண்புணர்தல்

சூ.133. ஒன்றுமுதல் எட்டுவரைஎண் முனர்ப்பத்தின்
ஒற்றழிவுறலும் ஆய்தமா தலும் விதி

பொருள் : ஒன்று முதலாக எட்டீறாக உள்ள எண்களின் முன் பத்து என்னும் எண்ணுப்பெயர் புணருமிடத்து பத்து எண்பதன் இடைநிற்கும் ஒற்றுக்கெடுதலும் ஆய்தமாதலும் விதியாகும். (ஒன்று முதலாயவை மேற்கூறியவாறு திரிந்து நிற்கும்.)

எ.டு : ஒருபது, ஒருபஃது, இருபது இருபஃது, முப்பது, முப்பஃது, நாற்பது நாற்பஃது, ஐம்பது ஐம்பஃது, அறுபது அறுபஃது, எழுபது எழுபஃது, எண்பது எண்பஃது எனவரும்.

## தொண்ணூறு - தொள்ளாயிரம்

**சூ.134. தொல்நூறு தொல்லா யிரமெனும் சொற்கள்**
**தொண்ணூறு தொள்ளாயிரமென மருவும்**

**பொருள் :** நூறுக்கு முந்தியது ஆயிரத்திற்கு முந்தியது என்னும் பொருள்பட இணைந்த சொற்கள் எண்ணுப் பெயரை மட்டும் வரைந்து சுட்டுதல் வேண்டி லகரமெய் ணகரமாயும் ளகரமாயும் திரிந்து தொல்+நூறு = தொண்ணூறு தொள் + ஆயிரம் = தொள்ளாயிரம் என மருவி வரும்.

முதலாவதாகத் தோன்றுதலின் முதல் எண்ணின் பெயர் தோன்று என நின்றுபின் தொன்று எனக் குறுகிப்பின் ஒன்று என ஆக்கம் பெற்றது. அவ்வாறே தொல்பத்து என்பவைதொன்பது எனத் திரிந்து பின் ஒன்பது என ஆக்கம் பெற்றதென்க.

தொல்காப்பியரும் நன்னூலாரும் நிலைமொழி வருமொழிகளை ஒன்பது + பத்து எனவும் ஒன்பது + நூறு எனவும் நிறுத்தி அவை திரிந்து அமைந்தனவாக விரிவாக விதிகூறுவர்.

## பத்து இருபது முதலியவற்றின் முன் எண்ணுப்பெயர்களும் பிறவும்

**சூ.135. எண், நிறை அளவும் பிறவும் முன்வரின்**
**பத்தன் இறுதி மெய்யொடும் கேடுற்று**
**இன்இற்றுச் சாரியை பெறும் இரண்டன்முன்**
**தகரம் னகரமாம் பதுபானும்மாம்.**

**பொருள் :** ஒருபது முதலாயவற்றின் முன் எண்ணுப் பெயரும், நிறைப்பெயரும் அளவுப்பெயரும் பிறபொருட்பெயர்களும் வரின் பத்து என்னும் இறுதி உகரம் தான் ஊர்ந்து நிற்கும் மெய்யொடு கெட்டு இன் இற்று என்னும் சாரியைகளை ஏற்கும் இரண்டு என்னும் சொல்வருமிடத்துத் தகர ஒற்று னகரமாகத் திரியும். செய்யுள் வழக்கில் பது என்னும் இறுதி பான் எனவும் திரியும்.

**எ.டு :** பதினொன்று, பன்னிரண்டு பதின்மூன்று.... பதினெட்டு எனவும் பதிற்றொன்று, பதிற்றிரண்டு, பதிற்று மூன்று எனவும் ஒருபதிற்றொன்று இருபதிற்றொன்று எனவும் ஒருபான் ஒன்று இருபானொன்று முப்பானொன்று

எனவும், பதின்கழஞ்சு, இருபதின்கலம், பதினாழாக்கு இருபதினாழாக்கு பதின்காளைகள் பதின்மர், பதின்மரங்கள் - பதிற்றுப்பத்து எனவும் வரும். இன்சாரியை கூட்டற்பொருளிலும், இற்றுச்சாரியை பெருக்கற் பொருளிலும் வரும். பதினைந்து (பத்தும் + ஐந்தும்) பதிற்றைந்து (பத்து + ஐந்து = ஐம்பது) பத்தின் முன் ஒன்பது வரின் திரிபும் சாரியையுமின்றிப் பத்தொன்பது என்றே வரும்.

## பத்தன் ஒன்றுக்கெடாதநிலை

சூ.136. எண்வரின் இருபதாதித்தகரங்கெடா.

பொருள் : எண்ணுப்பெயர்கள் வரின் இருபது முதலாயவற்றின் பத்து என்பதன்கண் உள்ள தகர ஒற்றுக்கள் கெடாமல் நிலையும். எ,டு. இருபத்தொன்று முப்பத்திரண்டு, நாற்பத்தைந்து எண்பத்தெட்டு எனவரும்.

## எண்ணுப்பெயர் இரட்டி வருதல்

சூ.137. ஒன்பஃதொழிந்தவை இரட்டின் இயல்பும்
முதன்மொழி முதல்தவிர்ந்தவை கெட உயிர்வரின்
வவ்வும் மெய்வரின் அவையும் மிகல்நெறி

பொருள் : ஒன்பது ஒழிந்த பிற எண்ணுப் பெயர்கள் இரட்டி வருமிடத்து இயல்பாக வருதலும் முதல் நிற்கும் பெயரின் முதல் எழுத்துத் தவிர்ந்தவை கெட்டுப் பின் நிற்கும் உயிர் முதலாயின் வகர ஒற்றும் மெய்ம் முதலாயின் அம்மெய்களும் மிகுதல் நெறியாகும்.

எ.டு : ஒன்றொன்று, இரண்டிரண்டு, மூன்றுமூன்று, நான்குநான்கு, ஐந்தைந்து, ஆறாறு, ஏழேழு, எட்டெட்டு பத்துப்பத்து எனவும். ஒவ்வொன்று இவ்விரண்டு மும்மூன்று நந்நான்கு, ஐவைந்து, அவ்வாறு, எவ்வேழு, எவ்வெட்டு, பப்பத்து எனவும் வரும்.

'நெறி' என்ற மிகையால் நான்கு ஆறு ஏழு ஆகியவை முதல் குறுகலும் நூறு ஆயிரம் கோடி என்னும் பெயர்கள் திரிந்திரட்டாமையும் ஐந்து என்பவை யகர உடம்படுமெய் பெற்று ஐயைந்து என வருதலும் கொள்க.

## உருபுணரியல்

சூ.138. பெயர்ப்பின் ஐஆன் குஇன் அதுகண்
முதலிய வேற்றுமை உருபு புணருங்கால்

**பதப்புணர்ச்சிக்காம் விதிபெறும்மன், சில**
**அத்துஆன் முதலிய சாரியை களைப்பெறும்**
**பெயரொடு உருபுகள் இணைந்தபின் இரண்டும்**
**ஒருங்கொரு சொல்லாய் நின்றுமேற் புணரும்.**

**பொருள் :** ஐம்பால் மூவிடப் பெயர்களின் பின் ஐ ஆன் கு இன் அது கண் முதலாய வேற்றுமை உருபுகள் புணருமிடத்து அவை பெரும்பான்மையும் மேற்கூறப்பெற்ற பதப்புணர்ச்சிக்குரிய விதிகளையே பெறும் சிறுபான்மை அத்து ஆன் இன் உ முதலிய சாரியைகளைப் பெறும். பெயரொடு உருபுகள் இணைந்தபின் அவை ஒருங்கு ஒரு சொல்லாய் நின்று மேல்வரும் சொற்களொடு புணரும்.

உருபுகளின் ஈறும் முதலும் ஐ - உயிர் முதல உயிரீறு ஒடு - உயிர் முதல் உயிரீது, அது உயிர் முதல் உயிரீறு, ஆன் ஆல் இன் - உயிர் முதல் மெய்யீறு குமெய்ம் முதல் உயிரீறு கண் - மெய்ம் முதல் மெய்யீறு ஏனைய சொல்லுருபுகளும் இவ்வாறே நிற்கும்.

**எ.டு :** ஊரையடைந்தான் ஊரைக்கண்டான், ஊரை நோக்கினான் மரத்தையெரித்தான், மரத்தைக் கண்டான், மரத்தைநட்டான் மரத்தை வெட்டினான், ஆவினையழைத்தான் ஆவினைக்கண்டான் ஆவினை நோக்கினான் ஆவினையாத்தான், ஊரொடிணைந்தாள் ஊரொடு பகைத்தாள் ஊரொடு நின்றான் ஊரொடு வழங்கினான் வாளானெறிந்தான் வாளாற்பட்டான் வாளான்நொந்தான் வாளான்யாத்தான் ஊருக்கேகினான் ஊருக்குச் சென்றான் ஊருக்கு நல்கினான் ஊருக்கு வழங்கினான் சரத்துனுக்குரைத்தாள் - ஊருக்குக் கொடுத்தான் - மாடனுக்கு நல்கினான். காடானுக்கு வழங்கினான் ஊரினொதுங்கினாள், ஊரின்கிழக்கு அவனின் நெடியன் குறிய வலியன் அரசனதூர், அரசனது கட்டளை அரசனதுமா, அரசனது யாழ், ஊரின்கணுளன், ஊரின் கண்குளம், ஊரின்கண் நின்றாள், ஊரின்கண் வயல் குன்றத்தின் கண் உள்ளது மரம், குன்றத்துக்கட்கூகை நூலின்கண் நயம் காட்டின்கண் யானை எனவும் பிறவாறும் வரும். உருபொடுபுணர்ந்த பின் அவற்றை ஒருசொல்லாகக் கொள்ளாவிடின் சாத்தனொடு சாத்தனுக்கு சாத்தனது என்பவை குற்றியலுகர விதிபெறாமல் வழுவும். இன், கண் என்னென்பவை உயிர்வரின் இரட்டித்து வழுவுமென்க.

## வடமொழிச்சந்தி இலக்கணம்

தீர்க்கசந்தி - குணசந்தி விருத்திசந்தி என வடமொழியில் உயிர்ரீறு உயிர்முதல் சந்தி மூவகைப்படும்.

## தீர்க்கசந்தி

சூ.139. வடமொழி அஆஇஈஉஊ
ஈறும் முதலுமாய் வரினவை கேடுற
முறையே ஆ ஈ ஊ இடை தோன்றிப்
புணர்த்தல் தீர்க்க சந்தியென் றுரைப்ப.

பொருள் : வடமொழிச் சொற்களுள் அஆ இஈ உஊ இவை தம்முள் ஈறும் முதலுமாக வருமிடத்து முறையே அஆ இரண்டும் கெட இடையே ஆகாரமும் இஈ இரண்டும் கெட இடையே ஈகாரகும். உஊ இரண்டும் கெட இடையே ஊகாரமும் தோன்றிப் புணர்வது தீர்க்க சந்தி என்று கூறுவர்.

எ.டு : பத + அம்புயம் = பதாம்புயம்
சிவ + ஆலயம் = சிவாலயம்
சேநா + அதிபதி = சேனாதிபதி
சதா + ஆனந்தம் = சதானந்தம்
கிரி + இந்திரன் = கிரீந்திரன்
கிரி + ஈசன் = கிரீசன்
மகி + இந்திரன் = மகீந்திரன்
நதீ + ஈசன் = நதீசன்
குரு + உபதேசம் = குரூபதேசம்
மேரு + ஊர்த்தவம் = மேரூர்த்தவம்
வதூ + உத்வாகம் = வதூத்வாகம்
வதூ + ஊரு = வதூரு

## குணசந்தி

சூ.140. அஆமுன் இஈ உஊ வரினவை
கேடுற முறையே ஏயும் ஒவும்
இடைவந்து புணர்தல் குணசந்தி என்ப.

பொருள் : அஆ என்னும் ஈறுகளையுடைய வடசொற்களின் முன் இஈயும் உஊவும் முதலாக உள்ள வடசொற்கள் வரின் ஈறும் முதலும் கெட அஆ இஈ க்களுக்கு இடையே ஏகாரமும் அஆ உஊக்களுக்கிடையே ஓகாரமும் தோன்றிப் புணர்வது குணசந்தி என்று கூறுவர்.

எ.டு : நர + இந்திரன் = நரேந்திரன்
சுர + ஈசன் = சுரேசன்
தரா + இந்திரன் = தரேந்திரன்
மகா + ஈசன் = மகேசன்
பாத + உதகம் = பாதோதகம்
ஞான + ஊர்ச்சிதன் = ஞானோர்ச்சிதன்
கங்கா + உற்பத்தி = கங்கோற்பத்தி
தயா + ஊர்ச்சிதன் = தயோர்ச்சிதன் என வரும்.

## விருத்திசந்தி

சூ.141. அஆமுன் ஏஐ ஒஔ வரினவை
கேடுற முறையே ஐ ஔ இடையே
தோன்றிப் புணர்தல் விருத்தி சந்தியாம்.

**பொருள் :** அஆ என்னும் ஈறுகளையுடைய வடசொற்களின் முன் ஏஐஒஔ இவற்றை முதலாக உடைய சொற்கள்வரின் முறையே ஐகாரமும் அஆஒஔ கெட இடையே ஔகாரமும் தோன்றிப் புணர்தல் விருத்தி சந்தி என்று கூறுவர்.

எ.டு : லோக + ஏகநாயகன் = லோகைகநாயகன்
சிவ + ஐக்கியம் = சிவைக்கியம்
தரா + ஏகநாயகன் = தரைகநாயகன்
மகா + ஐசுவரியம் = மகைசுவரியம்
கலச + ஓதனம் = கலசௌதனம்
திவ்ய + ஔடதம் = திவ்யௌடதம்
கங்கா + ஓகம் = கங்கௌகம்
மகா + ஔதார்யம் = மகௌதார்யம்

சிறுபான்மை தமிழிலும் சில சொற்கள் இவ்வாறு புணரும். மர + அடி = மராடி குண + ஆளன் = குணாளன் - மணாளன், மணாட்டி குள + ஆம்பல் குளாம்பல் வட+ அது = வடாது - கரு + ஊர் = கரூர் இவற்றை மரூஉ எனக் கூறுவர் நூலோர்.

## வடமொழித் தத்திதாந்தப்பதங்கள்

சூ.142. கிழமை முதலாய பொருளகத்திியைப்
பெயர்திரிந் துட்பிணைப் பாதல்தத் திதமாம்

பொருள் : உடைமை, உரிமை தொடர்பு முதலாய பொருள் உள்விளக்கமாகப் பொருந்தப் பெயர்ச் சொற்கள் உட்பிணைப்பாகத் திரிந்து பொருள் தருவன தத்திதபதங்களாகும்.

எ.டு : திலம் = எள், திலத்தினால் ஆகியது தைலம். தீரம் - தீரத்தை உடையது தைரியம் வீரத்தன்மை உடையது வைரம் சூரத்தன்மையுடையது சௌரியம். குருவம்சத்தினர் கௌரவர் கேகயநாட்டிற் பிறந்தவள் கைகேயி. மிதிலையிற் பிறந்தவள் மைதிலி. தசரதன் மகன் தாசரதி ஜனகன்மகள் ஜானகி, புத்திரரின் புத்திரர் பௌத்திரர். அஞ்சனைமகன் ஆஞ்சனேயன் விஷ்ணுவை வழிபடுபவன் வைஷ்ணவன், சிவனை வழிபடுபவன் சைவன் ஜினனை வழிபடுபவன் ஜைனன், சூரியனை வழிபடும் மதம் சௌரம் சுகத்தன்மை - சௌக்கியம் சகாராற் வெட்டப்பட்டது சாகரம். இவ்வாறு பொருளை உள்ளடக்கிவருதல் தத்திதாந்தம் எனப்படும். தமிழில் பால்காட்டி வரும் விகுதிகளை வடமொழியாளர் தத்திதம் எனக் கொள்வர்.

## தமிழில் தத்திதப்பாங்கு

சூ.143. தத்தி பதம் போல் உட்பிணைப்புப் பொருள்
தரும்தமிழ் விகுதிகள் இ ஐ அம்மே.

பொருள் : தமிழில் இ ஐ அம் என்னும் விகுதிகள் தத்தித பதங்களைப் போல உட்பிணைப்புப் பொருள்தரும்.

எ.டு : அல் + இ - இருளில் மலர்வது அல்லி. வில்லையுடையவன் வில்லி கருநிறப்பரியை உடையவன் காரி - பாரையாள்பவன் பாரி - செந்நிறம் உடையவன் செம்பியன் விறல் (சத்துவம்) தோன்ற ஆடுபவள் விறலி ஓடுதலைப்புரிவது ஓடை நீரை மடுத்திருப்பது மடை. குடக்கிலிருந்து வீசம் காற்று கோடை வடக்கிலிருந்து வீசும் காற்று வாடை உடம்பை ஒட்டியிருப்து உடை மூட்டித்தைக் கப்பட்டது மூட்டை வரை (மலை)யில் வாழும் மான் வருடை வெந்து பருத்திருப்பது (சோறு) பருக்கை, ஒல்லென ஒலிப்பது ஒலை அராவுதலைப்புரிவது அரம். வெற்றியை வலிமையால் தருவது வலம் - பொறிகளைப் புல்லி (பற்றி)யிருப்பது புலம். தாளினால் இடப்படவது தாளம் கூடாக்கிருப்பது குடம் பகைவரைக்கொன்று அடைவது கொற்றம் பிறவும் இவ்வாறே காண்க.

## வடமொழி உபசர்க்கம் (முன்னொட்டிடைச்சொல்)

சூ.144. அவஅப நிருநிச் இன்மை வி மேன்மையொடு
இன்மை அயன்மை அதிஅபி மிகுதி

**துர்துன் கேடுஉப துணை அநு பின்சக**
**உடன் அதோ கீழ் பரி முழுமைசன் சம்சு**
**உயர், பொருள் தரும்வட மொழிமுன் ஒட்டே.**

**பொருள் :** வடமொழியில் வரும் முன்னொட்டுக்களுள் அவ அப நிர். நிச் என்பவை இன்மைப் பொருளும் வி என்பது மேன்மை இன்மை அயன்மைப் பொருளும் அதி அபி என்பவை மிகுதி என்னும் பொருளும் துர் துன் என்பவை கேடு என்னும் பொருளும் உப என்பது துணை என்னும் பொருளும் அநு என்பது பின் என்னும் பொருளும் சக என்பது உடன் என்னும் பொருளும் அதோ என்பது கீழ் என்னும் பொருளும் பரி என்பது முழுமை என்னும் பொருளும் சன்சம்சு என்பவை உயர்வு என்னும் பொருளும் தரும்.

| | |
|---|---|
| எ.டு : அவ - அவமானம் | அபி - அபிவிருத்தி |
| அப - அபகீர்த்தி | துர் - துர்க்குணம் |
| நிர் - நிர்ப்பயம் | துன் - துன்மார்க்கம் |
| நிச் - நிஷ்காமியம் | உப - உபகரணம் |
| வி - விநாயகன் | அநு - இராமாநுசன் |
| விரக்தி | சக - சகோதரன் |
| விதேசி | அதோ - அதோகதி |
| அதி - அதிரூபம் | பரி - பரிபூரணம் |
| சன் - சன்மார்க்கம் | சம் - சம்பந்தி - சம்பூர்ணம் |
| சு - சுமந்திரன் சுகுமாரன் | |

மற்றும் கு என்பது மாறுபாடு என்னும் பொருளும் சிறிது என்னும் பொருளும் தரும். கு - குதர்க்கம் - குக்கிராமம்.

## புறனடை

**நூ.145. விளம்பிய முறையிற் பிறவற் றையும் ஓர்ந்**
**துளங்கொளல் நன்மாணாக்கர் தம் கடனே.**

**பொருள் :** எழுத்திலக்கணம் பற்றி எழுத்தியல், பதவியல், புணரியல் என்னும் மூன்று இயல்களுள் கூறப்பெற்றுள்ள நெறிமுறைகளின்படி இவற்றொடு தொடர்புடைய பிறவற்றையும் உணர்ந்து மனங்கொள்ளுதல் சிறந்த மாணாகர்தம் கடமையாகும்.

## சொல்லிலக்கணப்படலம்
## தெய்வவணக்கம்

இருதிணைப் பொருள்களின் ஒலியுருவாய்ப்புலம்
மருவு சொற்றேவை வணங்குதும் மகிழ்ந்தே.

## சொல்லின் பொதுவிலக்கணமும் அதன் வகையும்

நூ.1. இருதிணைப் பொருளவற் றின்செயல் பண்பினை
இடுகுறி காரணத்தன்மையொடு சுட்டிப்
பகாப்பதம் பகுபதம் தொகைமொழி அமைப்பில்
தொடர்க்குறுப்பாய் எழுத் தானியல் வனசொல்
அவை பெயர் வினைஇடைஉரியெனநான்காம்.

பொருள் : உயர்திணை அஃறிணை என இரு திணையாக இயங்கும் உருவப் பொருள் அருவப் பொருள் உள்பொருள் இல்பொருள்களையும் அவற்றின் செயல்களையும் பண்புகளையும் இசை குறிப்பு பண்பு என்னும் உணர்வால் இடுகுறியும் காரணமுமாகிய தன்மைகளொடும் உணர்த்திப் பகாப்பதம் பகுபதம் தொகை மொழி என்னும் அமைப்பொடு தொடர்கட்கு உறுப்பாய் எழுத்தான் இயல்வன சொல் எனப்படும். அவை இலக்கண நோக்கில் பெயர்ச்சொல் வினைச்சொல் இடைச்சொல் உரிச்சொல் என நால்வகைப்படும்.

## இலக்கியவகைச் சொற்களும் அவை பெயர் வினைகளுள் அடங்குமாறும்

நூ.2. அவைதாம்
இலக்கிய வழக்கில் இயற்சொல் திரிசொல்
திசைவட சொல்லென நால்வகைப்பட்டு
மேலைப்பெயர் வினைச் சொற்களுள் அடங்கும்.

பொருள் : மேல் நால்வகைப்படுமென்ற சொற்கள் இலக்கிய வழக்கில் இயற்சொல் திரிசொல் திசைச் சொல் வடசொல் என நால்வகைப்பட்டு மேற்கூறப் பெற்ற பெயர்ச் சொல் வினைச் சொற்களுள் அடங்கும்.

**இயற்சொல் :** நன்கு கற்றோர், கல்லாதார் யாவருக்கும் விளங்க வரும் நிலம், நீர், வானம், கடல், மலை, யானை, குதிரை, பறவை, மீன் முதலிய பெயர்களும் உண்டான், உறங்கினான், பாடினான், ஆடினான், என்றாற் போன்ற வினைச் சொற்களும், வேற்றுமையுருபு உவம உருபு ஏகார முதலிய தனிப்பொருள் தரும் இடைச்சொற்களும் செம்மை வெண்மை நன்மை முதலிய பண்புணர்த்தும் உரிச்சொற்களுமாம்.

**திரிசொல் :** பலபொருளொருசொல் ஒருபொருட் பல்பெயர்களும் கற்றோர்க்கே நனி விளங்கும் புவி, விலங்கல், ஆழி, வீ வளி, விண் களிறு ஒருத்தல் எனவரும் பெயர்களும் அயின்றான், துஞ்சினான், கிளந்தான் குயின்றான் எனவரும். வினைகளும் மன், கொன், தஞ்சம் முதலிய இடைச் சொற்களும் சால உறுதவநனி முதலாய உரிச்சொற்களுமாம்.

**திசைச்சொல் :** வட்டார வழக்காக வருவன. ஆவினைப் பெற்றம் எனல் தென்பாண்டி நாட்டு வழக்கு சோற்றினைச் சொன்றி எனல் குடநாட்டு வழக்கு. வஞ்சரைக்கையர் என்பது கற்காநாட்டரர் வழக்கு. தோட்டத்தைக் கிழார் என்பது வேணாட்டார் வழக்கு சிறு குளத்தைப் பாழி எனல் பூழிநாட்டார் வழக்கு வயலைச் செறு என்பது அருவாநாட்டார் வழக்கு புளியை எகின் எனல் அருவாவடதலையார் வழக்கு. இவை தொல்காப்பியர் காலத்தில் நிலவிய தமிழகப் பகுதிகள் அவற்றை அடிப்படையாக வைத்து உரையாசிரியன்மார் தமிழ்நாட்டைச் சூழ்ந்த பன்னிருநாடுகள் கொடுந் தமிழ்நாடு என்றும் பாண்டி நாடே செந்தமிழ் நாடென்றும் கொண்டு மேற்கண்ட எடுத்துக்காட்டுக்களைத் தந்துள்ளனர். இன்றைய தமிழக அமைப்பு முற்றிலும் மாறுபட்டது. இற்றைக்கும் கொங்குநாடு வடதமிழ்நாடு நாஞ்சில்நாடு முதலியவற்றில் வழங்கும் சொற்கள் பல வட்டார வழக்காக உள்ளமையைக் காணலாம்.

மற்றும் இன்றைய நிலையில் பாரதம் ஒருநாடு அதன் உட்பகுதி தமிழ்நாடு இதன்கண் பல அயல் மாநில மக்கள் கலந்து வாழ்கின்றனர். அவரவர்களின் மொழிச் சொற்கள் பல அயல் மாநில மக்கள் கலந்து வாழ்கின்றனர். அவரவர்களின் மொழிச் சொற்கள் பல தமிழோடு தமிழாகவே வழங்கப்படுகின்றன. மேலும் முகலாயர் ஆட்சிக் காலத்திலிருந்து ஆங்கிலேயர் ஆட்சி வரை தமிழோடு கலந்துள்ள சொற்கள் பல தமிழ் போலவே கலந்து வழங்குகின்றன. அவற்றுள் தமிழ் மூலத்திற்கு ஏற்ப வழங்குவனவெல்லாம் திசை மொழிகளாகவே கொள்ளுதல் வேண்டும். ஆட்சிமொழி நீதிமன்ற மொழிகள் பல அயல்மொழிச் சொல்லாகவே உள்ளன. அவற்றை எல்லாம் வழக்குத் தமிழில் திசைச் சொற்களாகவே கொள்ளுதல் வேண்டும் இலக்கியத்தில் தமிழ் எழுத்துக்களுக்கும் புணர்ச்சி விதிகளுக்கும் முதனிலை இறுதிநிலைகளுக்கும் மாறுபடாமல் உள்ளவற்றையெல்லாம்

கொள்ளலாம் ஏனையவற்றை விலக்குதலே மொழிப்பண்பாட்டிற்கு உகந்ததாகும்.

**வடசொற்கள்:** தமிழிலும் ஆரியத்திலும் அமைந்துள்ள ஒத்தபொருளுடைய சொற்களில் வடவெழுத்துக்களை நீக்கித் தமிழ் எழுத்துக்களால் அமைத்துக் கொண்டனவும் தமிழாக அமைதற்கேற்ற ஆரியச் சொற்களும் வடசொல் எனப்படும். மெய்யியற்கலைச் சொற்களும் சமயச்சார்பான சொற்களும் தமிழாக்கம் செய்யப்பெற்று வழங்கப்பெறுகின்றன. எடுத்துக்காட்டாக ஆதி, அந்தம், காலம் தெய்வம், கலை முதலாயவற்றை ஒருசாரர் வடசொற்கள் என்பர். இவை எல்லாம் தமிழ் அடியாகக் கொள்ளற்குரியனவாகும். இவ்வாறன்றி வருடம், இடபம், புட்பம், மாதா, பிதா என்றாற் போல்வனவற்றை வடசொல் திரிந்த ஆக்கச் சொற்களாகக் கொள்ளுதல் வேண்டும்.

## இருதிணை

நூ.3. *அறநெறி இயல்புமுக் கால உணர்வமை*
*மக்கள் உயர்திணை பிறவெலாம் அஃறிணை.*

**பொருள் :** இல்லறம் துறவறம் என்னும் வாழ்க்கை முறையும் தாய் தந்தை மகன் மகள் முதலாய உறவுநெறிகளையும் வகுத்துக் கொண்டொழுகும் ஒழுக்கமும் அறிவாற்றலால் முக்காலங்களைப் பற்றி எண்ணும் சிந்தனையியல்பும் உடைய மக்கட்பிறப்பினர் உயர்திணையாவர். மற்றைய உயிர் உள்ளனவும் இல்லனவும் உயிர்ப்பொருள் உயிரில் பொருள்களின் தன்மை இயல்பு செயல் பற்றியனவும் பல்வகையான குணம் பற்றி வரும் சொற்கள் தொழிற்சொற்கள் யாவும் அஃறிணையாம்.

## திணைப்புறனடை

நூ.4. *தெய்வமும் மக்கட் பேடும் அலியும்*
*உயர்திணைப் பால்களான் வழங்குதல் மரபே.*

**பொருள் :** தத்துவங்களின் உருவகமாகச் சமயங்கள்தொறும் அமைந்துள்ள தெய்வங்களைச் சுட்டும் பெயர்களும் ஆண்மை திரிந்த பெண்ணியல்புடைய பேடும் ஆண்மை பெண்மை இரண்டுமற்ற அலியும். உயர்திணைக்குரிய ஆடூஉ மகடூஉ பல்லோர் என்னும் மூன்றுபால்களுக்குரிய ஈறுகளான் வழங்கப்பெறும் = சிறுபான்மை அஃறிணைக்குரிய ஈறுகளானும் வழங்கப்பெறும். பேடு பெண்பால் ஈறு பெற்று வருதல் மரபு.

எ.டு : தேவன், தேவி, தேவர், இறைவன், ஆறுமுகன், திருமகள் கலைமகள், இயக்கன், இராட்சசன் இராட்சசி எனவரும் தேவர் நாகர் பெயர்கள் வினை கொள்ளுமிடத்து தேவன் வந்தான், தேவி வந்தாள், தேவர் வந்தனர் என்றும் இறைவன் அருளினான் ஆறுமுகன் எழுந்தருளினான், திருமகள் இவள் கலைமகள் பாடுகிறாள் இயக்கன் வந்தான் இராட்சசன் வந்தான் இராட்சசி வந்தாள் எனவரும். பேடி வந்தான் பேடிவந்தாள் அலி இவன் அலிஇவள் எனவரும் பேடி என்னும் பெயர் பெண்பாலாகவே வரும் அலி அஃறிணைப் பாலான் வரும் என்பார் தொல்காப்பியர். தெய்வம் புறப்பட்டது கடவுள் துணைபுரியும் எனவும் வரும்.

## ஐம்பால்

சூ.5. ஆடூஉ மகடூஉ பல்லோ ரறிசொல்
என உயர் திணைப்பால் மூன்று ஒன்றறிசொல்
பலவறி சொல்லென அஃறிணை இரண்டே
எண்ணும் அவையே உணர்த்தும் என்ப.

பொருள் : ஆடூஉ மகடூஉ பல்லோரறி சொல் என உணர்திணைப்பால் மூன்றாகும். ஒன்றறிசொல் பலவறி சொல் என அஃறிணைப்பால் இரண்டேயாம். ஆடூஉ மகடூஉ ஒன்றறிசொல் மூன்றும் ஒருமை எண்ணையும் பல்லோரறி சொல் பலவறி ெசால் இரண்டும் பன்மை எண்ணையும் தரும் என்பது தமிழ் மரபு.

இடைக்கால இலக்கண நூலார் இப்பெயர்களின் அறிவியல் நேரக்கை எண்ணாமல் ஆண்பால் பெண்பால் பலர்பால் ஒன்றன்பால் பலவின் பரல் எனக் குறியீடு செய்தனர். அவை இற்றைக்கு வழக்காகி நிற்கின்றன. ஆதலின் இந்நூலுள் அவ் இருவகைப் பெயர்களும் ஆளப்பெறும்.

## 2. பெயர்சொல்

சூ.6. வழங்கற்பயத்தவாய் இருதிணைப் பெயர்க்கிடும்
குறியீடாமவை உயர்திணை அஃறிணை
இருதிணைப் பொதுவாய்ச் சுட்டிடம் வினா ஒப்பு
அடியினும் பொருளிடம் காலம் சினை குணம்
தொழில் குறித் தியற் பெயர் இடுபெயர் ஆகு
பெயரெனவரும்வினைப் படுமிடத் தெண்வகை
வேற்றுமை நிலையுறல் அவற்றினதியல்பே.

**பொருள் :** பெயர்ச் சொல்லாவன இருதிணைப் பொருட்கும் சுட்டி வழங்கற் பயத்த வாய் இடப்பெறும். குறியீடுகளாகும் அவை உயர்திணைப் பெயர் அஃறிணைப் பெயர் இருதிணைப் பொதுப்பெயர் எனச் சுட்டப்படும் மூவிடம் வினா உவம இடைச் சொல் அடியாகவும் பொருள் இடம் காலம் சினை குணம் தொழில் ஆயவற்றைக் குறித்து இயற்பெயர் இடுபெயர் ஆகுபெயர் என முத்திறமாக வரும். அவை வினைப்படுமிடத்து எண்வகை வேற்றுமை நிலையுறுதல் அவற்றின் இலக்கணமாகும்.

**விளக்கம்:** அவன் அவள் அவர் அது அவை இவை போல்வன சுட்டிடைச் சொல்லடியாக வருவன. யான் யாம் நாம் நீ நீயிர் தான் தாம் என்பவை மூவிடம் பற்றி வருவன. எவன், யாவன், எவள் யாவள் எவர் யாவர் எது யாது எவையாவை இவை போல் வன வினா அடியாக வருவன. அன்னன் அன்னள் அன்னர் அன்னது அன்னவை, போல்வன போல்பவள் போல்வார், போல்வது போல்வன எனவருவன உவம இடைச் சொல்லடியாக வருவன.

**பொருட்பெயர்:** மகள் தேவர் ஆடவர் பெண்டிர் விலங்கு பறவை பாம்பு, மீன், கதிர் மதி விண்மீன் காற்று நிலம் மலை, கடல் எனவருவன பொருள் பற்றி ஆக்கம் பெற்றன.

**இடப்பெயர்:** அகம், புறம், மேல், கீழ், பக்கம் என வருவன இடங்குறித்த பெயர்களாகும், (வீடு, அரண்மனை, காடு, மேடு பள்ளம் என ஒருபொருளைக் குறித்துவருவன பொருட் பெயருள் அடங்கும்.)

**காலம் :** காலை, மாலை, பகல், இரவு, கார், கூதிர், வேனில், பரணி, கார்த்திகை, நேற்று இன்று நாளை என வருவன காலம் பற்றியனவாகும். (பரணி கார்த்திகை என்பவை காலம் குறியாமல் விண்மீன்களைக் குறிப்பின் மொருட் பெயராகும்)

**சினை:** தலை, கால், கை, இடை, வயிறு, முதுகு, கண், மூக்கு, செவி, சிறகு அலகு, கொம்பு, வால் எனவருவன சினை (உறுப்பு) பற்றியனவாகும்.

**குணம்:** கருமை, செம்மை, வெள்ளை, நீலம், குறுக்கம், அகலம், நீளம், வட்டம், வளைவு சதுரம், தொடி, பலம், படிஉழக்குகலம்., இனிப்பு துவர்ப்பு கைப்பு, வெறுப்பு, உவப்பு நன்மை தீமை உனவருவன குணம் பற்றியனவாகும்.

**தொழில்:** நடத்தல், இருத்தல், உறக்கம், மலைப்பு, வாழ்க்கை என விகுதி பெற்றுவரும் தொழிற் சொற்கள் யாவும் தொழிற் பெயர்களாம்.

**இயற்பெயர்:** யானை, குதிரை, புலி, பசு, கழுகு, நாரை, புறா, தெங்கு கழுகு, பாம்பு, பல்லி, ஓந்தி, ஈ எறும்பு என அஃறிணைப் பொருளின் குறியீடாக வருவன யாவும் இயற்பெயராம். இவற்றை அஃறிணை இயற்பெயர் என்றும் வழங்குப.

**இடுபெயர்:** காரணங்கருதாமல் மக்கட்கும் பிறபொருள்கட்கும் சுட்டி உணர்த்தற்பொருட்டாக வரும். கொற்றன், சாத்தன்,தேவன், பூதன், கொற்றி, சாத்தி, இராமன், கோபாலன், முருகன், பொன்னன், பொன்னி என வருவனவும் பிறவாறு மக்கட் கிடும் தமிழ்மொழி அயல்மொழிப்பெயர்களும் இடுபெயர்களாம்.

இவற்றுள் சுட்டு வினா ஒப்படிப்படையில் பால்காட்டும் ஈறுகளுடன் வருபவை உயர்திணை அல்லது அஃறிணை என்பதை வரைந்துணர்த்தும் இயற்பெயர்களும் இடுபெயர்களும் இருதிணைப் பொருள்களும் இட்டு வழங்கப்படுதலின் அவை இருதிணைப் பொதுப் பெயர்களாகும். பிறவிளக்கங்களை அவ்வச் சிறப்பிலக்கணம் கூறும் வழிக்கண்டு கொள்க. பொருள் முதலிய அறுவகைப் பெயர்களின் அடிப்படையில் பால் காட்டும் விகுதி பெற்று வருவனவும் திணைப் பொதுப் பெயர்களாம். அவை சிறப்புவினை சிறப்புப் பெயர் முடிபு பெறுமிடத்து ஒரு திணைக்குரியவாக அமையும்.

## உயர்திணை அஃறிணைச் சிறப்புப்பெயர்கள்

சூ.7. *சுட்டுவினாஒப்பிடைச் சொல் மற்றை*
*பிறஇவை அன்ஆன் முதலிய விகுதிபெற்*
*றியல்வன இருதிணைச் சிறப்பும் பெயராம்.*

**பொருள்** : அ இ உ என்னும் சுட்டெழுத்துக்களையும் எ யா என்னும் வினா எழுத்துக்களையும் ஒ, அன் என்னும் ஒப்பிடைச் சொற்களையும் மற்றை, பிற என்னும் இடைச் சொற்களையும் முதலாகக் கொண்டு அன் ஆன் அள் ஆள் அர் ஆர் மார் துறுடு அ ஆ வை வ் என்னும் விகுதிகளைப் பெற்று வருவன உயர்திணை அஃறிணைக்களுக்குரிய சிறப்புப் பெயர்களாம்.

**எ.டு** : அவன் இவள் உவன் அவள் இவள் உவள் அவர் இவர் உவர் எவர் யாவர் அன்னன் இன்னன் அன்னள் இன்னள் ஒத்தவன் ஒத்தவள் ஒத்தவர் அன்னர் இன்னர் தாய்மார் தந்தைமார் சின்னான், சின்னாள் பெரியார் என்பவை உயர்திணைப் பெயர்கள்.

அது இது உது எது யாது ஒத்தது அன்னது வருவது செல்வது அவற்று இவற்று குண்டுகட்டு, கரியன செய்யன உண்ணா தின்னா அவை இவை உவை அவ் இவ் உவ் எனவருவன அஃறிணைச் சிறப்புப் பெயர்களாம். இவற்றுள் பது றுடு அ ஆ முதலியவை தெரிநிலை, குறிப்பு வினையாலணையும் பெயர்களாக வரும். பிறவிளக்கங்களை வினையியலுள் கண்டு கொள்க.

## இருதிணைப் பொதுப் பெயர்கள்

சூ.8. *அஃறிணைப் பொருட்பெயர், அன் ஆன் இகர*
*விகுதிபெற்றமைவன முறைமை சுட்டுந*
*எல்லாம் தாம் தான் இருதிணைப் பொதுபெயர்*

**பொருள் :** அஃறிணைப் பொருட்பெயர்கள், அன் ஆன் விகுதி இகர விகுதி பெற்று வரும் பொருட் பெயர்களும் முறைமை சுட்டிவரும் பெயர்களும் எல்லாம் தாம் தான் என்னும் பெயர்களும் இருதிணைப் பொதுப்பெயர்களாம்.

எ.டு : காளை வந்தான், காளை வந்தது, மமில் வந்தாள் மயில் வந்தது, காளை இவன், காளை இது மயில் இவள், மயில் இது - என வருவன அஃறிணைப் பெயரடியாக வரும் பொதுப் பெயர்களாம்.

சாத்தன்வந்தான் சாத்தன் வந்தது சாத்தன் இவன், சாத்தன் இது. கோட்டான் வந்தான் கோட்டான் வந்தது. கோட்டான் இவன். கோட்டான் இது. சாத்தி வந்தாள், சாத்தி வந்தது, சாத்தி இவள் சாத்தி இது தந்தை வந்தான், தந்தை வந்தது, தந்தை இவன் தந்தை இது நாமெல்லாம் வந்தோம் அவை எல்லாம் வந்தன தாம் வந்தனர், தாம் வந்தன தான் வந்தான் தான் வந்தாள் தான் வந்தது எனவரும். பிற விளக்கங்களைப் பொதுப் பெயர் இலக்கணம் கூறும் வழிக் கண்டு கொள்க.

## மரபு பற்றி வரும் உயர்திணைப்பெயர்கள்

சூ.9. *நம்பி நங்கை கோவேள் குரிசில்*
*இன்னன மரபாள் உயர்திணைப்பெயராம்*

**பொருள் :** நம்பி நங்கை கோவேள் குரிசில் என்பனவும் இவை போல்வனவும் மரபாக வரும் உயர்திணைப் பெயர்களாம்.

இன்னன என்றதனான் ஆடூஉ மகடூஉ விடலை, தோன்றல் செம்மல் பாங்கன் பாங்கி தையல்மக்கள் மாந்தர் என்பன கொள்க. மற்றும் திணை, நிலம், சாதி குடி குழு பற்றி ஆண்பால் பெண்பால் விகுதி பெற்று வருவனவும் கொள்க.

## பொதுப்பெயர் அல்லது விரவுப்பெயர் இயல்பு

நூ.10. *முதற்பெயர், சினைப்பெயர் சினைமுதற் பாங்கின்*
*ஆண்பெண் ஒன்றுபல எனும்பாற் பெயரொடு*
*முன்னிலைப் பெயர் முறைப் பெயர் பொதுப் பெயராம்.*

*பொருள்:* முதற்பெயர் சினைப் பெயர் சினைமுதற்பெயர் என்னும் பகுப்போடமைந்து திணை காட்டாமல் ஆண் பெண் ஒன்று பல என்னும் பால் காட்டும் பெயர்களும் நீ நீயிர் நீர் என்னும் முன்னிலைப் பெயர்களும் தாய் தந்தை மகன் மகள் என்னும் முறைப் பெயர்களும் இருதிணையினும் விரவும் பொதுப்பெயர்களாம்.

அஃறிணை இயற்பெயர்கள் னகர ஈறு பெறுமிடத்து ஆண்பாலையும் இகர ஈறு பெறுமிடத்துப் பெண்பாலையும் விகுதியை பெறாது நிற்குமிடத்து ஒருமைப் பால்பன்மைப் பால்களுக்குப் பொதுவாகவும் நிற்கும்.

எ:டு : *முதற்பெயர்:* கொற்றன் வந்தான் கொற்றன் வந்தது கொற்றன் இவன் கொற்றன் இது. கொற்றி வந்தாள் கொற்றி வந்தது கொற்றி இவள் கொற்றி இது என வரும்.

*சினைப்பெயர்:* முடவன் வந்தான் முடவன் வந்தது முடவன் இவன் முடவன் இது முடத்தி வந்தான் முடத்தி வந்தது முடத்தி இவள் முடத்தி இது எனவும் செவியிலி வந்தான் செவியிலி வந்தாள் செயிலி வந்தது எனவும் வரும்.

*சினைமுதற்பெயர்:* முடக்கொற்றன் வந்தான் முடக்கொற்றன் வந்தது முடக்கொற்றி வந்தாள் முடக்கொற்றி வந்தது முடக்கொற்றன் இவன் முடக்கொற்றன் இது முடக் கொற்றி இவள் முடக்கொற்றி இது எனவரும்.

*ஒருமைப்பெயர்:* கோதை வந்தான் கோதை வந்தாள் கோதை வந்தது, பொன்மாலை வந்தான் பொன்மாலை வந்தாள் பொன்மாலை வந்தது.

**பன்மைப்பெயர்:** மணி வந்தான், மணி வந்தாள் மணி வந்தது மணி வந்தன யானை வந்தான் யானை வந்தாள் யானை வந்தது, யானை வந்தன எனவரும்.

பன்மைப் பொதுப்பெயர் என்றது அஃறிணைப் பன்மையையும், அஃறிணை ஒருமையையும் உயர்திணை ஆண் பெண் ஒருமைகளையும் சுட்டி வரும்.

நன்னூலாசிரியர் பன்மை விரவுப் பெயர்கள் விகுதி பெற்று உயர்திணைக்கும் அஃறிணைக்கும் பொதுவாக வரும் என்பார் அவர் கொள்கைப்படி. கோதைகள் வந்தனர், கோதைகள் வந்தன எனவரும். கள் விகுதி அஃறிணைப் பன்மைக்கு மட்டும் வரும் என்பார் தொல்காப்பியர். நன்னூலார் இருதிணைக்கும் வரும் எனக் கொண்டார். இன்றைய வழக்கில் கள் விகுதி பயின்று வருகின்றது.

**முன்னிலைப் பெயர்:** நீ வந்தாய் நீயிர் வந்தீர் நீர் வந்தீர் எனவரும்.

**முறைப்பெயர்கள்:** தாய் வந்தாள் தாய் வந்தது தந்தை வந்தான் தந்தை வந்தது மகன் வந்தான் மகன் வந்தது மகள் வந்தாள் மகள் வந்தது எனவரும்.

ஈண்டுக் கூறப்பெற்ற பொதுப்பெயர் யாவும் பயனிலை கொள்ளாமல் தனித்து நிற்குமிடத்து விரவும் பெயராகும் பயனிலை கொண்டவிடத்து அப்பயனிலைகளுக்குரிய திணைகளுக்கு உரிமையாகி விடும் என்க.

## ஆகுபெயர்

**நூ.11.** **பொருளிடம் காலம் சினைகுணம் தொழிலொடு**
**அளவை சொல் தானி கருவி காரியம்**
**கருத்தா முதலிய் தொடர்பால் ஒருபெயர்**
**எழுவாய் வேற்றுமை மயக்காய் இயைபமை**
**பிறிதொரு பொருளை ஒருமடி பலமடி**
**என அமைந் துணர்த்துவது ஆகுபெயராம்.**

**பொருள்:** பொருள் இடம் காலம் சினை குணம் தொழில் எண்ணல் எடுத்தல் நீட்டல் முகத்தலாகிய அளவைகள் சொல், தானி கருவி காரியம் கருத்தா முதல் தொடர்பால் ஒருபெயர் எழுவாய் வேற்றுமை மயக்கமாக

அவற்றோடு இயைபுடைய பிறிதொரு பொருளை ஒருமடி இருமடி பலமடி என்னுமாறு உணர்த்துவது ஆகுபெயராகும். ஒரு பொருள் தன்னோடு தொடர்புடைய பொருளுக்கு ஆகிவருதலின் அகுபெயர் எனப்பட்டது. அது மரபானும் இலக்கணை குறிப்பு வகையானும் வரும். கொண்டு முடியும் பயனிலை காரணமாக ஒரு பெயர்ப் பொருள் பிறிதொன்றாகமாறுதலின் ஆகுபெயர் எழுவாய் வேற்றுமை மயக்கமாகிறது.

எ.டு : தாமரை மலர்ந்தது என்னுமிடத்து தாமரை என்பது கொடித்தண்டை உணர்த்தாமல் மலரை உணர்த்தலின் பொருளாகுபெயர். இதனை முதலாகு பெயர் என்றும் கூறுப.

அகனமர்ந்து செய்யாளுறையும் என்னமிடத்து அகம் என்னும் இடப்பெயர் உள்ளத்தை (நெஞ்சினை) உணர்த்தலின் இடவாகுபெயர்.

கார்த்திகை பூத்தது என்னுமிடத்து கார்த்திகை என்னும் காலப் பெயர் அக்காலத்து மலரும் பூவை உணர்த்தலின் கால ஆகுபெயர்.

வெற்றிலை நாட்டான் என்னுமிடத்து வெற்றிலை என்னும் இலையை உணர்த்தாமல் அதன் கொடியை உணர்த்தலின் சினை ஆகுபெயர்.
நீலம் சூடினான் என்புழி நீலம் என்பது நிறப்பண்பை உணர்த்தாமல் மலரை உணர்த்தலின் குண ஆகுபெயர் அல்லது பண்பாகுபெயர்.

வற்றலோடு உண்டான் என்புழி வற்றல் தொழில் காய்ந்து வற்றிய உணவுப் பண்டத்தை உணர்த்தலின் தொழிலாகுபெயர்.

இரண்டுங் கெட்டான் என்புழி இரண்டு என்னும் எண்ணுப்பெயர் நல்லது தீயது என்னும் நிலைமையை உணர்த்திற்று. ஐந்துபலம் பெற்றான் என்புழி ஐந்து பலம் உடைய பொருளை உணர்த்திற்று. ஒரு மரக்கால் விதைக்கப்பட்டது என்புழி மரக்கால் நெல்லை உணர்த்திற்று பூவிற்பவனிடம் ஒரு முழங்கொடு என்புழி முழம் என்பது முழநீளப் பூச்சரத்தை உணர்த்திற்று இவை அளவை ஆகுபெயர் நூலுக்கு உரை செய்தான் என்புழி உரை என்பது பொருளை உணர்த்தலின் சொல்லாகுபெயர்.

விளக்கு முரிந்தது என்புழி விளக்கு என்னும் ஒளிப்பெயர் அஃது எரியும் தண்டினை உணர்த்தலின் தானியாகுபெயர் (தானி - ஸ்தானம் = உறையுமிடம்)

பொன்அணிந்தான் பட்டுடுத்தான் என்புழிப் பொன்னாலாகிய அணிகலனையும் பட்டு நூலால் ஆகிய ஆடையையும் உணர்த்தலின்

கருவியாகுபெயர். அலங்காரம் படித்தான் என்புழி அலங்காரம் (அணி) என்னும் காரியம் அதனை உணர்த்தும் நூலுக்காயினமையின் காரிய ஆகுபெயர். வள்ளுவரைக்கற்றான் என்புழி வள்ளுவராற் செய்யப்பட்ட நூலை உணர்த்தலின் கருத்தாவாகு பெயர்.

முதலிய என்றதனான் காளை போல்வானைக் காளை வந்தான் என்பது உவம ஆகுபெயர். பட்டுருமாலை அணிந்தவனைப் பட்டுருமாலை வந்தான் என்னுமிடத்து நேர்ச்சி ஆகுபெயர் இவற்றை இலக்கணை என்பார் வடநூலார். இவை எல்லாம் ஒருமடி ஆகுபெயர்.

புளிநட்டான் என்புழிப் புளி என்னும் சுவைப்பெயர். அதனை உடைய பழத்திற்காகிப் பின் அதன்வித்துக் காயினமையின் இருமடி ஆகுபெயர். கார் அறுத்தான் என்புழி. கார் என்னும் நிறப்பெயர் மேகத்திற்காய் பின் அது பெய்யும் காலத்திற்காய்ப்பின் அக்காலத்தில் விளையும் நெற்பயிரை உணர்த்தலின் மும்மடியாகும். ஒன்றின் பின் ஒன்றாய் வருதலின் மடி எனப்பட்டது.

ஆகுபெயர் ஒரு சொல்லாகவே வரும். அச்சொல் தனித்தும் அடையடுத்தும் வரலாம். அறுகால் மொய்க்கும் மலர் என்புழி அறுகால் என்பது ஆறு கால்களை உடையவண்டிற்கு ஆளது. ஆறு என்பது கால்களுக்கு அடை திருவாசகம் படித்தான். வாசகம் நூலை உணர்த்திற்று திரு என்பது அடை கொடியிடை வந்தாள் என்புழி இடை என்றும் சினைப்பெயர் இடையை உடையாளை உணர்த்திற்று கொடி இடைக்கு உவம அடையாக நின்றது மருக்கொழுந்து நட்டான் என்புழி. மரு அடை மற்றும் ஆகுபெயர்கள் இருபெயரொட்டாகவும் வரும். வகரக்கிளவி என்புழி வகரமாகிய கிளவி என இருபெயரொட்டாய்க் கிளவி என்பது வகர எழுத்தை உணர்த்தி ஆகுபெயராக நின்றது.

மற்றும் வடமொழி இலக்கணையை நோக்கி விடாத ஆகுபெயர் விட்ட ஆகுபெயர் விட்டும் விடாத ஆகுபெயர் எனவும் வகுத்துக் கூறுவர்.

1. புளி தின்றான் என்புழிப் புளிச்சுவை பழத்தோடு ஒருங்கிருத்தலின் விடாத ஆகுபெயர்.

2. ஊர்சிரித்தது என்புழிச் ஊர் என்பது மக்களை உணர்த்தி வேறு நிற்றலின் விட்ட ஆகுபெயர்.

3. பகல் கான்றெழுதரும் பருதி என்புழி. பகலைக் கக்கியது வெளிப்படுத்தியது என்று பொருள் தருதலின் (காலுதல் விட்டது வெளிப்படுத்தல் விடாதது) இது விட்டும் விடாத ஆகுபெயர்.

## தொகை மொழி வகை

நூ.12. இருமுத னிலைப் பெயர் வேற்றுமை பண்பொப்பு
உருபுகள், கால இடைநிலை உம்மை
அயற்பொருள் தொக்கொரு மொழிபோல் வருவன
தொகை மொழி அவ்வப் பெயர் பெறும வையே.

பொருள்: இரண்டு முதல் நிலைப் பெயர்கள் வேற்றுமை உருபுகள் பண்புருபு உவம உருபுகள், கால இடைநிலைகள் உம்மைகள் அயலது ஒருபொருள் தொக்கு இரு சொற்களும் ஒருமொழி போல வருவன தொகை மொழிகள் எனப்படும். அவை அவ்வப் பெயரான் வேற்றுமைத் தொகை பண்புத் தொகை உவமத் தொகை வினைத்தொகை உம்மைத் தொகை அன்மொழித் தொகை என அவை பெயர் பெறும். எட்டு வேற்றுமையுள் தமக்கென சிறப்புருபுகள் உடையவை ஆறேயாதலின் வேற்றுமைத் தொகை இரண்டாம் வேற்றுமை முதல் ஏழாம் வேற்றுமை வரையிலான ஆறேயாகும். பண்புருபு என்பது பண்பைப் பொருளோடு இணைக்கும் ஆகிய என்னும் இடைச்சொல்லாகும். உவம உருபுகள், போல, புரைய, ஒத்த அன்ன முதலியனவாகும். காலத்தை உணர்த்தல் வினையின் இலக்கணமாதலின் கால இடை நிலைகளுக்கு வினை என்பது பெயர். வினைச்சொல் எனினும் காலக்கிளவி எனினும் ஒக்கும். அயற்பொருள் என்றது தொகையுற்று நிற்கும் இரு சொற்களின் பொருளின் வேறாக ஆற்றலால் உணரப்படும் பொருள். பிற விளக்கங்களை மேல் வரும் அவற்றின் இலக்கணங்களான் அறிக. ஒருமொழிபோல் நடத்தலாவது தனி ஒருபெயர்ச் சொல்லைப் போல எழுவாயாகவும் பெயர்ப் பயனிலையாகவும் வருதல் அது பழந்தின்னி பறந்தது இப்பறவை பழந்தின்னி எனவரும். உம்மைத் தொகைமொழி இரண்டுக்கும் மேற்பட்ட பெயர்களாலும் வரும்.

## வேற்றுமைத் தொகைமொழி

நூ.13. ஐஆன் குவ்வின் அது கண் என்னும்
உருபுகள் தொகச் செயப் படுபொருள் கருவி
கோடல் எல்லை உடைமை இடப்பொருள்
விளங்க வருபவை வேற்றுமைத் தொகை மொழி

பொருள்: ஐ ஆன் கு இன் அது கண் என்னும் உருபுகள் தொக்கு நிற்கச் செயப்படுபொருள் கருவிப்பொருள் கோடற்பொருள் எல்லைப் பொருள் உடைமைப் பொருள் இடப்பொருள் விளங்க இருபெயர் இணைந்து வருபவை

வேற்றுமைத் தொகை மொழியாகும். மொழி என்னும் இறுதி குறைத்து வேற்றுமைத் தொகை எனவும் வழங்குப.

எ.டு : பழந்தின்னி, பாலுண்ணி, ஈர்க்கொல்லி என வருவன இரண்டாம் வேற்றுமைத் தொகைமொழி வாள்வெட்டு (வாளான் வெட்டிய் வெட்டு) பொற்றொடி (பொன்னாலாகியதொடி) மட்குடம் (மண்ணால் செய்யப்பட்ட குடம்) எனவருவன மூன்றாம் வேற்றுமைத் தொகை. மூன்று நான்கு ஐந்து ஏழு ஆகிய தொகைகள் உருபொடு பயனிலைச் சொல்லும் தொக்கு நிற்கும் வினையின்றி வேற்றுமை நிகழாதாகலின் இவ்விளக்கத்தை வேற்றுமையியலுள் கண்டு கொள்க. நெல்வேலி (நெல்லுக்குக்கோலிய வேலி) நோய் மருந்து (நோய் நீக்குதற்கான மருந்து) என வருவன நான்காம் வேற்றுமைத் தொகை. மலையருவி (மலையினின்று வீழும் அருவி) கருவூர்க்கிழக்கு மருவூர் (கருவூரின் கிழக்கே உள்ளது மருவூர்) இவை ஐந்தாம் வேற்றுமைத் தொகை. யானைக்கோடு (யானையது கொம்பு) அரசாட்சி (அரசனது ஆட்சி) என வருவன ஆறாம் வேற்றுமைத் தொகை. ஊர்மன்று (ஊரின்கண் உள்ள மன்றம்) மாலை விளக்கு (மாலைக்காலத்தில் ஏற்றும் விளக்கு) என வருவன ஏழாம் வேற்றுமைத் தொகை.

மற்று உருபுகள் தொக்குப் பயனிலைகளோடு முடியுமாயின் அவை தொகை மொழி எனப்படா தொகைச் சொற்றொடர் எனப்படும். அவை பாலுண்டான் (பாலை உண்டான்) கல்லடி பெற்றான் (கல்லால் அடி பெற்றான்) ஊர் சென்றான் (ஊருக்குச் சென்றான்) ஊர் நீங்கினான் (ஊரினின்றும் நீங்கினான் மனையிருந்தாள் மனையின்கண் இருந்தாள் எனவரும். தொகைமொழியுள் இரு சொற்களும் பெயராகவே இருக்கும். தொகைச் சொற்றொடர் பெயரும் வினைமுற்றுச் சொல்லாகவும் இருக்கும். தொகைமொழி பற்றி நன்னூலார் கூறும் இலக்கணம் பிழையானது தமிழ் நெறிக்கு மாறானது.

நன்னூலாசிரியர் வினைத்தொகையின் முதற்சொல் முதனிலைத் தொழிற்பெயர் என்பதை உணராமல் வினைச்சொல்லாகக் கருதிக் காலங்கரந்த பெயரெச்சம் என்றார். அதற்கேற்பப் பொதுவில்க்கணம் கூறும் வழி.

பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை
முதலியபொருளின் அவற்றின் உருபிடை
ஒழிய இரண்டுமுதலாத் தொடர்ந்தொரு
மொழி போல் நடப்பன தொகை நிலைத்தொடர்ச் சொல்

என்று கூறிச் சென்றார். பிற விளக்கங்களை எனது மடைமாறிய தமிழ் இலக்கண நூல்கள் என்னும் ஆய்வு நூலிற் கண்டு கொள்க.

# பண்புத் தொகை மொழி

**நூ.14. பண்படி அடையாய் இணைந்த முதற்பெயரும்
இருபெய ரொட்டும் பண்புத்தொகை மொழி.**

**பொருள்:** வண்ணம், வடிவு அளவு சுவை முதலியவற்றை யுணர்த்தும் பண்புப்பெயர் முதனிலைகள் அடையாக இணைந்து வரும் முதற்பெயர்களின் தொகையும் ஒருபொருள் குறித்து இருபெயர்கள் ஒட்டி வரும் தொகையும் பண்புத் தொகை மொழிகளாம்.

**எ.டு :** செந்தாமரை, கருங்குதிரை, வெண்டிங்கள் (இவை வண்ணப்பண்பு) வட்டப்பலகை, முடத்தெங்கு, (இவை வடிவப்பண்பு) நெடுமாறன், குறுங்கை (இவை அளவைப்பண்பு) தீங்கனி, உவர்நீர் இவை (இவை சுவைப்பண்பு) நுண்பொருள், ஒண்சுடர், மெல்லணை நல்லணி (இவை பிறகுணப்பண்பு) எனவரும்.

இவை விரியுங்கால் முதற்பொருளின்பாலுக்கேற்ப விகுதியொடு ஆகிய என்னும் உருபொடு விரியும் அவை விரியுமாறு செய்யதாகிய தாமரை - கரியதாகிய கதிரை வெள்ளிதாகிய திங்கள். வட்டத்ததாகிய பலகை, முடத்ததாகிய தெங்கு நெடியனாகிய மாறன். குறியதாகியகை, தீவிதாகிய கனி உவரதாகிய நீர் நுண்ணிதாகிய பொருள் ஒள்ளிதாகிய சுடர். மெல்லிதாகிய அணை என விரியும். பண்படி எந்தப் பொருளுக்கு அடையாக வருகின்றதோ அப்பொருளுக்குரிய பால் காட்டும் ஈறு ஆகிய என்னும் உடைமைப் பொருளுணர்த்தும் இடைச் சொல்லொடு விரியும். இதனைத் தொல்காப்பியர் 'ஐம்பாலறியும் பண்பு தொகுமொழி' என்பர்.

இவ்வாறன்றிச் செம்மையாகிய தாமரை நெடுமையாகிய மாறன் நுண்மையாகிய பொருள் எனப் பண்புச் சொற்களை விரிப்பின் ஆகிய என்பது பண்புருபாகாது ஆக்கச் செயலுணர்த்தும் பெயரெச்ச வினையாகும். முன்பு வேறு நிறமாக இருந்து இப்பொழுது செம்மையாகிய தாமரை எனப் பொருள்படும் தமிழ்நெறியையும் அறிவியலையும் நோக்காத பவணந்தி முனிவர், பண்புத் தொகை இலக்கணம் கூறுவழி 'பண்பை விளக்கும் மொழி தொக்கன' எனக் கூறிச் சென்றார்.

இனி இருபெயரொட்டுப் பண்புத் தொகை வருமாறு. ஆயன் சாத்தன், முருகவேள், சாரைப்பாம்பு, வேழக்கரும்பு எனவரும். இருபெயர்களுள் முன்னிற்கும் பெயர்கள் பின்னிற்கும் பெயர்ப்பொருளை இனம் முதலாய பொருள் சுட்டிச் சிறப்பித்து நிற்கும். ஆயன்சாத்தன் = ஆயனாகிய

சாத்தன் இதன்கண் ஆயன் என்பது சாதியைச் சுட்டி நின்றது. முருகவேள் = முருகனாகிய வேள் - இவன்மார வேளல்லன் முருகவேள் எனச் சுட்டி நின்றது. சாரைப்பாம்பு சாரையாகிய பாம்பு. பாம்பு இனங்களுள் இது சாரையினத்தது எனச் சுட்டி நின்றது. வேழக்கரும்பு = வேழமாகியகரும்பு இது தட்டைக் கரும்பன்று எனச் சாதி குறித்து நின்றது. மேலும் இருபெயரொட்டுப் பண்புத் தொகை மொழிகள் அடிமலர் - அடியாகியமலர், முகமதி = முகமாகியமதி என உருவகமாகவும் வடசொற் கிளவி, வகரக்கிளவி என விளக்க அடைபெற்றும் வரும். மற்றும் இருபது = இரண்டாகிய பத்து முப்பஃது மூன்றாகிய பத்து என உறழ்ந்து வருவனவும் இருபெயரொட்டின்பாற்படும் என உணர்க.

## உவமத் தொகைமொழி

நூ.15. உவமத்தன்மையொடு உருபுதொக்கிருபெயர்
இணைந்தொப்புணர்த்துவ உவமத் தொகையாம்

பொருள்: உவமத்தன்மையும் உவம உருபும் தொக்கு இருசொற்கள் உவமமும் பொருளுமாக இணைந்து ஒப்புணர்த்தி வருவன உவமத்தொகை மொழிகளாகும். உவமம் வினைபயன் மெய்யுரு என்றும் நான்கனடிப்படையில் தோன்றும்.

எ.டு : கிளிமொழி - கிளிமொழிமானக்கிளக்கும் மொழி - இது வினையுவமத்தொகை. மாரிவெண்கோ - மாரிவழங்குதல் பொருவ வழங்கும் வெண்கோ = இதுபயனுவமந் தொகை. துடியிடை - துடிநடுவினை ஒப்ப ஒடுங்கிய இடை - இது மெய்வுமத்தொகை பவளவாய் - பவளம் போலும் சிவந்த நிறமுடையவாய். இஃது உருவமத் தொகை மற்றும் புலிமறவன் மழைக்கை, மதிமுகம், கார் வண்ணன் என வருவனவெல்லாம் கொள்க. உவமஉருபு மான, பொருவ ஒத்த போன்ற எனப் பெயரொச்சமாகவும் மானும் பொருவும் ஒக்கும் போலும் எனச் செய்யுமென்னும் எச்சமாகவும் உவம உருபுகள் வரும். ஆதலின் அவை செயப்படு பொருள் நிலையில் கிளியை ஒப்பக்கிளக்கும் மொழி என உருபு விரியும் விரியினும் கிளிமொழி என்றாற் போல வருவன வேற்றுமைத் தொகையாகா என உணர்க.

## வினைத்தொகை

நூ.16. தொழில்முதனிலைச் சொல் பிறபொருட் சொல்லொடு
இணைந்து முக்காலமும் கரந்துவரும் வினைத்தொகை

**பொருள் :** நடவா கொல் செல் எனவரும் முதனிலைத் தொழிற் பெயர் பிறபொருட்பெயர்களொடு இணைந்து முக்காலத்தையும் உள்ளடக்கி வருவன. வினைத்தொகை மொழிகளாம்.

எ.டு : ஆடரங்கு செய்குன்று கொல்களிறு செல்செலவு, பொழிபுனல், புலர்பொழுது எனவரும். இவை மேல் தொடர்ந்து நிற்கும் சொற்களால் ஒருகாலத்தை வரைந்துணர்த்தும் தனித்து நிற்புழி மூன்றுகாலத்திற்கும் பொதுவாக நிற்கும்.

மாதவி ஆடரங்கினின்று வந்தாள். இத்தொடரில் ஆடிய அரங்கு என இறந்த காலமுணர்த்தும். ஆடரங்கில் நடிக்கின்றாள். எனின் நிகழ் காலமுணர்த்தும் ஆடரங்கிற்குச் செல்கின்றாள் எனின் எதிர்காலம் உணர்த்தும். இவ்வாறே கொல் யானை ஓடிவிட்டது எனின் இறந்தகாலம் கொல் யானைபுலியொடு போர் புரிகின்றது எனின் நிகழ்காலம் புலியொடு போரிடக் கொல் யானை, வருகிறது எனின் எதிர்காலம்.

மற்று வினைத்தொகையாக அமைந்த சொற்கள் காலக் குறிப்பின்றிக் காரணப் பெயராயும் நிற்கும். அவை அரிவாள், சுடுசோறு புணரியல் என்றாற் போல வரும். மேலும் முதனிலைத் தொழிற் பெயர் விகாரப்பட்டும் வரும். வருபுனல் தருசுடர் நடந்திடு குதிரை = இவற்றின் முதனிலை வா, தா, நட என்பனவாகும். நன்னூலார் காலங்கரந்த பெயரெச்சம் வினைத்தொகை என்பார். முதனிலைத் தொழிற்பெயர்கள் காலங்கரந்த வழிப் பெயராதலன்றி வினையாகாமையானும் காலம் விரிந்த வழி வினைத் தொகையாகாமையானும் அவ்விலக்கணம் பொருந்தா தென்க.

## உம்மைத்தொகை

சூ.17. **எண்ணும் மைதொகச் சிலசொல் தொடர்ந்தொரு**
**தொகைபட முடிவன உம்மைத்தொகை யாங்கு**
**உயர்திணைத் தொகை பலர் பாலீற்றான்இறும்.**

**பொருள் :** உம்மைத் தொகையாவது எண்ணும்மை தொக்கு நிற்க இரண்டு முதலாகச் சில சொற்கள் தொடர்ந்து ஒருதொகைபட முடிவனவாகும். ஆண்டு உயர்திணையாக வரும் உம்மைத் தொகை பலர்பாலுக்குரிய ஈற்றான் முடியும்.

எ.டு : இராப்பகல் - இரவும் பகலுமாகிய பொழுது. புலிவிற்கயற் கொடி அறம் பொருளின்பம் வீடு அடைதல் நூற்பயன் எனவும் கபிலபரணர், சேர சோழ பாண்டியர் எனவும் வரும்.

இனி, பதினொன்று பனிரண்டு எனவும் இருபத்தொன்று - இருபத்து நால்வர் முப்பத்தெண்மர் எனவும் உம்மைத் தொகை வரும். எண்தொகைகள் வருமிடத்து அறுபத்துநான்கு எனவரின் அறுபது பண்புத் தொகை அது ஒரு சொல்லாய் அறுபதும் நான்கும் என உம்மைத் தொகை விரியும் பிறவற்றையும் இவ்வாறு ஓர்ந்து கொள்க.

## அன்மொழித்தொகை

நூ.18. வேற்றுமை பண்புவமம் வினை உம்மைத்
தொகைகள் தம்பொருள் விரியாதயலதோர்
மொழிப்பொருள் சுட்டுவ தன் மொழித்தொகையே.

**பொருள்** : வேற்றுமைத் தொகை பண்புத் தொகை உவமத் தொகை வினைத்தொகை உம்மைத் தொகைகள் தம்தம் பொருள்விரியாமல் அவை அயலதொரு மொழிப் பொருளாகச் சுட்டி உணருமாறு வருவது அன்மொழித் தொகையாகும்.

தொக்கு நிற்கும் சொற்பொருளை உணர்த்தாமல் அயலதொரு சொல்லின் பொருளை உணர்த்தலின் அன்மொழித் தொகை எனப்பட்டது. அன்மொழிப் பொருள் அது கொண்டு முடியும் பயனிலைகளான் விளங்கும்.

எ.டு : 'பொற்றொடி' வந்தாள் - பொற்றொடி என்பது பெண்மகள் என்னும் பொருளைச் சுட்டியது 'கவியிலக்கணம்' (நூல்) வாங்கினான் 'கிள்ளிகுடி' (ஊர்) வாழ்ந்தான் எனவரும். இவை வேற்றுமைத் தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகை 'தேன்மொழி' பாடினாள். உவமத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகை 'பெய்வளை' நடனமாடினாள் வினைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகை 'தகரஞாழல்' பூசினாள் (தகரமும் ஞாழலும் கொண்டு செய்யப்பெற்ற மணக்குழம்பு) இது உம்மைத்தொகை நிலைக் களத்துப் பிறந்த அன்மொழித் தொகை. இது புலிவிற்கயல் பறந்தது எனவும் வரும்.

அன்மொழித் தொகையினுள் சொற்களின் பொருள் சுட்டப்படும் பொருளின் வேறுபட்டு நிற்கும். தொடர்புடையதாக வரின் அவை அடையடுத்த ஆகுபெயருள் அடங்கும். பெய்வளை, கழல் தொடி என்பவை அன்மொழித் தொகைகள் தாழ்குழல் தளரிடை என்பவை அடையடுத்த ஆகுபெயர். குழலும் இடையும் மகளிரின் உறுப்பாதலின் சினையாகுபெயர்களாம். மற்றும் அன்மொழித் தொகையை விரிப்புழித் தொகைச் சொல்லின் பொருள் விரியாது. விரியின் ஆகுபெயராகிவிடும். பொற்றொடி வந்தாள் என்னுமிடத்து

பொன்னாலாகிய தொடியை அணிந்தவள் வந்தான் என விரிப்பின் அது காரண ஆகுபெயராகும். தொடி மகளிர்க்குரிய அணிகலனாதலின் அவ் இயைபற்றிப் பொற்றொடி என்பது பெண் மகளை உணர்த்தும்.

# 3. வேற்றுமையியல்

## வேற்றுமை என்பதன் பொருளும் அதன் வகைகளும்

நூ.19. கருத்துணர்த் துஞ்சொற் றொடர்க்கண் வினையான்
பெயர்ப்பொருள் எய்தும் நிலைகளே வேற்றுமை
எனப்படும் அவை எழுவாய் செயப் படுபொருள்
கருவி கோடல் எல்லை உடைமை
இடம் விளி என எண் வகைப்பட்டமையும்.

பொருள் : ஒருவர் ஒரு கருத்தைக் கூறுமிடத்து அச்சொற்றொடரின் கண் உள்ள வினையால் பெயர்ப்பொருள் எய்தும் நிலைகளே வேற்றுமை எனப்படும். அவ்வேறுபாடுகள் எழுவாய், செயப்படுபொருள் கருவிப்பொருள் கோடற்பொருள் (கோடல் =கொள்ளுதல்) எல்லைப் பொருள், உடைமைப் பொருள், இடப்பொருள், விளிப்பொருள் என எட்டுவகைப்பட்டு அமையும் (வினைகளால் நிகழ்வுகளால் பெயர்ப்பொருள் எய்தும் எல்லா வேறுபாடுகளும் இவ் எட்டு வகையுள் அடங்கும்) வினை என்றது பயனிலைகளை அது தெரிநிலை வினையாயும் குறிப்பு வினையாயும் பெயர்ப் பயனிலையாயும் வரும். பயனிலை எனினும் முடிக்கும் சொல் எனினும் ஒக்கும்.

எ.டு : கண்ணன் பசியால் வீட்டிற்குச் சென்று செம்பில் இருந்த பசுப்பாலை உண்டு களைப்பின் நீங்கினான். இக்கருத்துத் தொடரில் கண்ணன் பசி வீடு செம்பு பசு பால் களைப்பு என்பன பெயர்ப்பொருள் (பெயர்ச்சொற்கள்) செல்லல், இருத்தல் உண்ணல் நீங்குதல் என்பன வினை நிகழ்ச்சிகள் வினைச்சொற்கள். இச்செயல்கள் நிகழ்தற்கு உரிய பொருள்கள் கண்ணன் முதலிய பெயர்ப் பொருள். வினை நிகழ்தற்கு அடிப்படையாக உள்ள பொருள் வினைமுதல் எனப்படும். வினை முதலாகத் தோன்றும் பெயர்களே வினைகளால் வேற்றுமை நிலைகளை எய்தும். இத்தொடரின்கண் செல்லுதல் உண்ணுதல் நீங்குதல் ஆகிய வினைகளை நிகழ்த்தியவன் கண்ணன் அதனால் செல்லுதல், உண்ணுதல் இரண்டும் எச்சமாகி நீங்கினான் என்னும் முற்றொடு முடிகின்றன. இருத்தல் வினைபாலின் வினை அதனால் ஆது பெயரெச்சமாய் பால் என்னும் பெயராடு முடிகிறது. கண்ணன் எங்கு சென்றான் வீட்டிற்கு வீடு கண்ணனை ஏற்கும் பொருளாக உள்ளமையின் நான்காம் வேற்றுமையாகிறது கு என்னும் உருபைப் பெறுகிறது. எதனாற்

சென்றான் பசியால் அதனால் பசி மூன்றாம் வேற்றுமையாகி ஆல் உருபை ஏற்கிறது. பால் எங்கிருந்தது செம்பில் அதனால் செம்பு ஏழாம் வேற்றுமையாகிறது. இல் என்னும் இடப்பொருள் தரும் சொல்லுருபைப் பெறுகிறது. எதனை உண்டான், பாலை அதனால் பால் இரண்டாம் வேற்றுமையாகிய ஐயுருபைப் பெறுகிறது. எதனின் நீங்கினான் களைப்பினின்று அதனால் களைப்பு ஐந்தாம் வேற்றுமையாகி இன்னுருபைப் பெறுகிறது. பால் எதனுடையது பசுவினுடையது அதனால் பசு ஆறாம் வேற்றுமையாகி உருபு தொக்கு நிற்கிறது. இங்ஙனம் பயனிலையாக வரும் சொற்களே பெயர்ப் பொருளை அவ்வப் பயனிலைகளுக்கேற்ற வேற்றுமையை எய்துதலை உணரலாம். உருபுகள் விரிந்தும் தொக்கும் அடையாளமாக அமைதலையும் காணலாம்.

## வேற்றுமை உருபுகள்

நூ.20. *பெயர்ஐ ஒடு கு இன் அது கண் விளி*
*என்பவை வேற்றுமைக் கடையாள உருபாம்*
*நிரல் முறை உருபான் அவை வழங்கப் பெறும்.*

பொருள் : பெயர், ஐ ஒடு (ஆன்) கு இன் அது கண் விளி என்பவை வேற்றுமை உருபுகளாம். இவை பொருளையுணர்த்தும் பெயர்ச் சொற்களின் கண் அடையாளமாக வரும். உருபிடைச் சொற்களாகும். எண்ணும் நிரல் முறையானும் உருபின் பெயர்களாலும் எட்டு வேற்றுமைகளும் வழங்கப் பெறும். பொருளானும் சுட்டப்படும்.

அஃதாவது பெயர் வேற்றுமை எழுவாய் வேற்றுமை முதல் வேற்றுமை கருத்தா வேற்றுமை என்பவை முதல் வேற்றுமைப் பெயர்களாம். ஐ வேற்றுமை இரண்டாம் வேற்றுமை செயப்படு பொருள் வேற்றுமை என்பன இரண்டாம் வேற்றுமைப் பெயர்களாம். மூன்றாம் வேற்றுமை கருவி வேற்றுமை ஒடு வேற்றுமை என்பன மூன்றாம் வேற்றுமைப் பெயர்களாம். கருவி காரணம் ஏது என்பவை ஈண்டு ஒரு பொருள் பற்றி நிற்கும் காரணப் பொருளில் ஆன், ஆல் என்பவை உருபாக வரும். ஒடு என்பது ஓடு என நீண்டும் வரும். ஒடு என்பது கொண்டு என்பதன் மரூஉவாகும். கு வேற்றுமை நான்காம் வேற்றுமை கோடற்பொருள் (கொள்ளும் பொருள்) வேற்றுமை என்பவை நான்காம் வேற்றுமைக்குப் பெயர்களாக வரும். பொருட்டு என்னும் சொல் சொல்லுருபாக வரும். ஐந்தாம் வேற்றுமை இன்வேற்றுமை, எல்லைப் பொருள் வேற்றுமை நீக்கற்பொருள் வேற்றுமை என்பன ஐந்தாம் வேற்றுமைக்குரிய பெயர்களாம். இதற்கு நின்று என்பது சொல்லுருபாக வரும். ஆறாம் வேற்றுமை அது வேற்றுமை உடைமைப் பொருள் வேற்றுமை

கிழமைப் பொருள் வேற்றுமை என்பன ஆறாம் வேற்றுமைப் பெயர்களாக வரும். இதற்கு உடைய என்பது சொல்லுருபாக வரும். அது என்பது ஆது என நீண்டும் ஈறுகெட்டு அ என்னும் அளவிலும் வரும். இதற்கு உரிமைப் பொருள் வேற்றுமை என்னும் பெயரும் உண்டு. ஏழாம் வேற்றுமை, கண் வேற்றுமை இடப் பொருள் வேற்றுமை ஆதாரப் பொருள் வேற்றுமை என்பன ஏழாம் வேற்றுமைக்குரிய பெயர்களாக வரும். இதற்குக் கண்கால் புறம் அகம் இல் உள் உழை கீழ் மேல் முதலாக இருபத்தெட்டுச் சொற்கள் சொல்லுருபாக வரும். எட்டாம் வேற்றுமை, விளிவேற்றுமை அழைத்தற் பொருள் வேற்றுமை என்பன எட்டாம் வேற்றுமைக்குரிய பெயர்களாம். இதற்குத் தனியே உருபுகள் இல்லை எனினும் ஆய், ஏ என்பன உருபுகள் போல வரும் பெயர் ஈறும் ஈற்றயலும் திரிந்து உருபு நிலை எய்தும் ஈறு குன்றியும் அளபெழுந்தும் தன் பொருளைக் காட்டும். பிற விளக்கங்களை அவ்வச் சிறப்புச் சூத்திர உரையுள்கண்டு கொள்க.

## வேற்றுமை உருபுகள் பற்றிய சிறுவிளக்கம்

வேற்றுமை உருபுகள் யாவும் இடைச்சொற்களே. இடைச் சொல் என்பது பெயர்ச் சொல் வினைச்சொல்லடியாக உருப்பெற்றுச் சுருங்கியும், குறைந்தும் ஒடுங்கியும் திரிந்தும் ஆக்கம்பெற்றுத் தனித்தியங்காமல் பெயர்க வினைகளுக்கு உறுப்பாகவும் அவற்றைச் சார்ந்தும் நடை பெறுவதாகும். அவற்றின் மூல உருவத்தை ஆய்ந்துகாணின். ஐ என்னும் இரண்டாம் வேற்றுமை உருபு ஏய என்பதன் மரூஉவாகும். பேச்சு வழக்கில் பாட்டெப்படிச்சான் கரும்பெத் தின்றான் என எகரமாகவும் ஊரப்பகைச்சான் கண்ணக் குத்தினான் என அகரமாகவும் வழங்கும் ஏய என்பது வினையெச்சக் கருத்துடையதாகலின் இது வினைகொண்டே முடியும்.

ஒடு ஆன் இன் என்னும் மூன்றாம் வேற்றுமை உருபுகளுள் ஒடு என்பது கொண்டு என்பதன் மரூஉவாகும். (கொண்டு → கொடு → ஒடு என மருவியது) இது கருவிப் பொருளில் வரும் வினை கொண்டே முடியும். ஆன் இன் என்பவை அதனான் இதனான் என்னும் சுட்டு முதலாகிய காரணக்கிளவிகளின் மரூஉவாகும். இவை காரணப் பொருளில் வரும் வினைகொண்டு முடியும். அம்முறைமையாற்றான் மட்குடம் பொற்றாலி என்னும் தொகைமொழிகள் விரியுமிடத்து மண்ணால் ஆகிய குடம் பொன்னாலாகியதாலி எனப் பயனிலை கொண்டு விரிகின்றன.

கு: என்னும் நான்காம் வேற்றுமை உருபு கொள்ள, கொள்ளும் என்னும் வினையெச்சப் பெயரெச்சங்களின் முதல் குறைந்து மருவி அமைந்ததாகும். பொருளை வறியவர்க்கு வழங்கினான் ஆசிரியன் மாணவர்க்கு அறிவளித்தான் என இவை கொள்ள என்னும் வினையெச்சக்

கருத்தான் வந்து வினையொண்டு முடிந்தன. இது காரணப்பொருளில் வருமிடத்து கூலிக்கு உழுதான் எனப் பொருட்டுப் பொருளில் வரும். பொருட்டு என்பது கூலியின் பொருட்டு உழுதான் எனச் சொல்லுருபாக வரும்.

கருவூர்க்குக் கிழக்கு மருவூர், நோய்க்கு மருந்துண்டான். பசிக்கு உணவளித்தான் என வருபவை வினையை உள்ளடக்கிப் பெயர் கொண்டு முடிந்தவையாகும். மருவூரைக் கிழக்காகக் கொள்ளும் கருவூர். நோயை நீக்குதற்குக் கொள்ளும் மருந்து பசியைப் போக்கற்குக் கொள்ளும் உணவு எனப் பெயரச்சக் கருத்தால் வருமிடத்துப் பெயர் கொண்டு முடியும்.

**இன்:** என்னும் ஐந்தாம் வேற்றுமை உருபு நின்று (இருந்து) என்னும் வினையெச்சத்தின் திரிபாக நின்று → நின் → இன் என அமைந்ததாகும். மலையின் வீழ் அருவி கருவூரின் கிழக்கு மருவூர் சாத்தனின் நெடியன் கொற்றன் என வருவனவற்றுள் நீக்கப் பொருளில் வருபவை நின்று என்பதன் திரிபாகலின் மலையினின்று வீழும் அருவி கருவூரினின்றும் கிழக்கு மருவூர் என விரியும். நின்று இருந்து என்னும் சொலலுருபுகள் வருமிடத்து இன் என்பதன் திரிபாகிய இல் என்பதனையும் சாரியையாகப் பெற்று வரும் ஊரிலிருந்து சென்றான் என வரும். உறழ்ச்சிப் பொருளில் நீக்கக் கருத்தாகிய விட என்பதனைச் சொல்லுருபாகக் கொண்டு சாத்தனை விடக் கொற்றன் பெரியன் பொருளை விடக் கல்வி சிறந்தது எனவரும். நீக்கப் பொருள் உறழ்ச்சிப் பொருளில் வினை கொண்டு முடியும். எல்லைப் பொருளில் வினையை உள்ளடக்கிய பெயர் கொண்டு முடியும்.

***அது:*** என்னும் ஆறாம் வேற்றுமை உருபு உடையது என்னும் முற்று வினையான் (உடைமை) முதல் குறைந்து ஆக்கம் பெற்றதாகும். அது என்பது விரியுங்கால் ஆதல் என்னும் அடிப்படையில் ஆகும் என விரியும்.

அது என்னும் சொல் சுட்டுப் பெயராகவும் குறிப்பு வினை விகுதியாகவும் ஆறாம் வேற்றுமை உருபிடைச் சொல்லாகவும் வரும். இவை வடிவத்தால் ஒன்று போல இருப்பினும் பொருளால் வேறு வேறானவை. சுட்டுப்பெயர் அது உண்டது, அது பசு என எழுவாயாகவும் உண்டது. அது பசு அது எனப் பெயர்ப் பயனிலையாகவும். அதனை அதனால் அதற்கு அதனின் அதனது அதன்கண் என வேற்றுமைப்பட்டும் வரும். குறிப்புவினை முற்றுவிகுதி நாடு அரசனது புகழ்புலவரது, அருள் இறைவனது, வீடு சாத்தனது. கன்றுபசுவினது அது அவனது எனப் பெயரிறுதிக்கண் ஒருமை உணர்த்தி வரும். உடைமைப் பொருள் எழுவாயாக வரும். உருபாக வருமிடத்து ஓர் எழுவாய்க்கும் பெயர்ப் பயனிலைக்கும் இடையே உரிமைப் பொருளின்பின் இது அரசனது யானை இவை ஆவினது கன்றுகள் இது வள்ளுவரது நூல்

எனவரும். உருபு இறுதிக்கண் வாராது. வினைக் கருத்தை உள்ளடக்கிய பெயரைக் கொண்டே முடியும். இதன் மூலப் பொருளாகிய உடைய என்பது சாத்தனுடைய வீடு, சாத்தனுடைய பசுக்கள் எனச் சொல்லுருபாக வரும். உடைமைப் பொருள் பெயர்ப் பயனிலையாக வரும்.

கரிது வெளிது கோட்டது எனவரும். குறிப்பு வினைமுற்றுக்களில் வரும் து என்பது அது என்பதன் முதற்குறையன்று. அஃறிணை ஒருமை விகுதியாகும் அவ்வாறே கரிய வெளிய கோட்ட உயர்திணைய, அஃறிணை என வருவனவற்றுள் உள்ள அகர ஈறு அஃறிணைப் பன்மை வினைமுற்று விகுதியாம் இவற்றை அது என்னும் உருபின் முதற்குறை கடைக் குறை என உரையாசிரியர் சிலர் மயங்கி ஒவ்வா விளக்கங் கூறிச் சென்றனர்.

**கண்:** என்னும் ஏழாம் வேற்றுமை உருபு கண் என்னும் வினையடி நெருங்குதல் அடைதல் என்னும் கருத்துடையதாகலியும் நெருங்குதற்கும் அடைதற்கும் உரிய இடப் பொருளை உணர்த்தி நின்றது. அம்முறையில் இடஞ்சுட்டும் சொற்கள் யாவும் ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபுகளாக அமைந்தன. இது அறையின்கண் இருந்தான் மதியின்கண் ஒளி கழுகு விண்ணின் கண் பறந்தது. மீன் கடலின்கண் திரிகின்றது என வினை கொண்டு முடியும். மதியின் கண் மரு. குன்றின் கண் சுனை என வினைக் குறிப்பை உள்ளடக்கிய பெயரொடும் முடியும். இவை விரியுங்கால் மதியின்கண் உள்ளது ஒளி என்றேனும் மதியின் கண்ணது ஒளி என்றேனும் விரியும் - பிறவிளக்கங்களை அவ்வப்வேற்றுமை இலக்கணம் கூறும் வழிக் கண்டு கொள்க.

## முதல் வேற்றுமை

நூ.21. குழுவின் நீங்கி வினை முதலாய்ப் பெயர்
தோன்றும் நிலை முதல் வேற்றுமைப் பொருளாம்.

**பொருள்:** இருதிணைப் பொருள்களின் குறியீடாக அமைந்து கிடக்கும் பன்னூறு பெயர்களின் குழுவினின்றும் பிரிந்து நீங்கி ஒரு கருத்தை உணர்த்தவேண்டும் பெயர்களாய் எழுதல் எழுவாய் வேற்றுமையின் பொருளாகும். ஒரு கருத்துள் கூறப்பெறும் வினைகளுக்குத் தாம் முதலாய் நிற்றலின் வினைமுதல் எனவும் பெயர் பெறும் பெயர், எழுவாய், வினைமுதல், கருத்தா என்பவை முதல் வேற்றுமையைக் குறிக்கும் பெயர்களாம். அங்ஙனம் முதற்கண் எழுவாயாக எழுந்த பெயர்களே வாக்கியக் கருத்துக்களுக்கு ஏற்ப வேறு வேறு வேற்றுமை நிலைகளை எய்தும்.

எ.டு : கண்ணன் உண்டான் என்னும் தொடரில் உண்ணுதல் தொழிலுக்கு கண்ணன் உரியனாகலின் கண்ணன் எழுவாய் இவ்வாக்கியத்தில் பெயர்ப்பொருள் ஒன்றே வந்தது.

கண்ணன் வெண்ணெய் உண்டான் என்னும் வாக்கியத்தில் இரண்டும் பெயர்கள் எடுத்துக் கொள்ளப் பெற்றுள்ளன. வெண்ணெய் உண்ணப்படும் பொருளாக மாறுதலின் உண்ணப்படுதலுக்கு வினை முதலாய் இரண்டாம் வேற்றுமையாக மாறியது விரியுமிடத் கண்ணன் வெண்ணெயை உண்டான் என விரியும். இனிக் கண்ணன் வெண்ணெயை வாயால் உண்டான் என்னுமிடத்து வாய் என்னும் பெயர் கண்ணன் உண்ணுதற்குக் கருவியாய் அமைந்து மூன்றாம் வேற்றுமையாக மாறி நிற்கிறது. இவ்வாறு எடுத்துக் கொள்ளப் பெறும் ஒவ்வொரு பெயரும், கொள்ளும் வினை காரணமாக வேற்றுமைப்படும்.

நூ.22. பெயரே எழுவாய் வேற்றுமைக்குருபாம்
ஆக்கவினைச் சொலை உருபெனல் வழுவாம்

பொருள்: எழுவாயாகக் கொள்ளப்படும் பெயரே முதல் வேற்றுமைக்கு உருபாம். வடமொழியைத் தழுவி ஆக்கவினைச் சொல்லை உருபெனக் கூறுவது வழுவாகும்.

எ.டு : சாத்தன், சாத்தி, கோவலர், யானை, குதிரை, பறவைகள், மீன்கள் என ஐம்பாற் பெயர்களே எழுவாயாகவும் உருபாகவும் நிற்கும். ஆக்கவினை பெறுதலாவது சாத்தனானவன், சாத்தியானவள் கோவலரானவர் - யானையாகப்பட்டது. பறைவைகளாகப்பட்டவை எனவரும். இது வடமொழி மரபு.

## எழுவாய்ப் பெயர்கள் தொகை மொழியாகவும் தொடர்மொழியாகவும் வருதல்

நூ.23. ஒருபொருள் குறித்த தொகை மொழியாயும்
தொடர்மொழியாயும் தோன்றும் அதுவே.

பொருள்: எழுவாயாக வரும் பெயர்கள் ஒருசொல்லாக வருதலேயன்றி ஒரு பொருளையே குறித்துத் தொகை மொழியாகவும் தொடர்மொழியாகவும் வரும்.

எ.டு : ஆயன்சாத்தன் வந்தான், முத்துக்குமரன் உண்டான், மோசி கீரனார் வந்தார். கலைமகள் அருளினாள். வெண்ணிக் குயத்தியார் பாடினார் என வருபவை தொகை மொழிகள். சோழன் பெருவிறற்கிள்ளி (வந்தான்) சேரன் செங்குட்டுவன், தலையாலங்கானத்து செருவென்ற நெடுஞ்செழியன் இவை தொடர் மொழி. இவையாவும் ஒரு பொருளையே குறித்து நிற்றலின் ஒருசொல் நீர்மையவாக எழுவாயாக வந்தன.

## எழுவாய் வேற்றுமை கொள்ளும் பயனிலைகள்

சூ.24. பொருண்மை உணர்த்தல் விளிவினா வினையொடு
பெயர்கொளவருதல் அதன் பயனிலை என்ப.

*பொருள்:* ஒரு பொருளின் இயல்புத்தன்மை உணர்த்தல், விளி கொள நிற்றல் வினாக் கொள நிற்றல் வினைகொள நிற்றல் பெயர் கொள நிற்றல் எழுவாய் கொள்ள நிற்கும் பயனிலைகளாகும்.

எ.டு : பசு உண்டு, கடல் உண்டு, அறிவு உண்டு, இன்பமுண்டு என ஒரு பொருளின் நிலைபேற்றினை உணர்த்தல் பொருண்மை உணர்த்தலாம். கண்ணாவா, சாத்தா உண்க என வருதல் விளிகொள்ளுதலாம் (இவன்) கண்ணனா (இவள்) சாத்தியா. கண்ணனோ சாத்தியோ என வருதல் வினாக்கொள்ளுதலாம். கண்ணன் வந்தான், கண்ணன் இனியன் எனவருதல் வினைகொள நிற்றலாம். (இனியன் என்பது குறிப்பு வினைமுற்று) ஆபல, மக்கள் பலர் உறுதிப் பொருள் நான்கு இவர் அரசர். இவன் மாணாக்கன் எனப் பெயர்ப்பயனிலைகள் வினைத்தன்மையை உள்ளடங்கி நிற்கும். ஆபல எனின் ஆக்கள் பலவாக உள்ளன என்பது கருத்து.

எழுவாய், வினைமுதல், கருத்தா என்பவை ஒருபொருள் குறித்து வரினும் தம்முள் சிறிது சிறிது நிமித்த வேறுபாடுடையவாகும்.

*எழுவாய்:* பெயர்க்கூட்டத்தினின்றும் ஒருகருத்தை உணர்த்த எழுந்து நிற்கும் பெயர் என்பது பொருள்.

*வினைமுதல்:* ஒருதொடரின் கண் முடிபாக நிற்கும் வினைக்கு அடியாக மூலமாக நிற்பது என்பது பொருள்.

**கருத்தா:** ஒருதொடரின்கண் உள்ள கருத்தைக் கருக்கொண்டிருப்பது என்பது பொருள் இச்சொல் கர்த்தா எனத் திரிந்து வடமொழியாக அமைந்துள்ளது.

கரு, கருக்காய், கருப்பம், கருத்து முதலியவை கரு என்பதனடியாகப் பிறந்தவை.

## இரண்டாம் வேற்றுமை

நூ.25. ஐவேற்றுமை எனும் இரண்டாம் வேற்றுமை
ஆக்கல் அழித்தல் எய்தல் நீக்கல்
திரிபுறுத்தல் முதல் எழுவாய்த் தொழில் சென்று
படுதலதன் பொருள்நிலை என்மனார் புலவர்.

பொருள்: ஐகார வேற்றுமை எனப் பெயர் பெறும் இரண்டாம் வேற்றுமை ஒரு பொருளை ஆக்குதல் அழித்தல் எய்துதல் நீக்குதல் திரிபுறுத்தல் முதலாக எழுவாயின் தொழில் சென்று படுதல் அதன் பொருள் நிலையாகும் என்று கூறுவர் புலவர் - செயப்படுபொருள் எனினும் செய்பொருள் செயற்படுபொரு எனினும் ஒக்கும்.

எ.டு : குயவன் குடத்தை வனைந்தான். மன்னன் கோயிலைக் கட்டினான். சாத்தன் சோற்றைச் சமைத்தான். சாத்தி மகவை ஈன்றாள். கொற்றன் மரத்தை வெட்டினான். சாத்தன் நிலத்தைத் தோண்டினான். சிறுவன் பானையை உடைத்தான். பூதன் குப்பையைக் கொளுத்தினான். வீரன் வெற்றியைப் பெற்றான். பொன்னி திருவினை ஒத்தாள். நடுவர் உண்மையை உணர்ந்தார். பூதன் அறிவைப் பெற்றான். சாத்தி பருவத்தை அடைந்தாள். மருத்துவன் நோயைப் போக்கினான். பொன்னி மாலையைக் கட்டினாள். மருதி சோற்றைக் குழைத்தாள் எனவரும்.

இலக்கணக் கொத்து பசுவைப் பாலைக் கறந்தான் என்றும் யானையைக் கோட்டைக் குறைத்தான் என்றும் உதாரணம் தருவார். அது பிழையான கோட்பாடாகும். பசுவைப் பாலைக் கறந்தான் என்னுமிடத்து பசுவை என்பது பசுவினது என ஆறாம் வேற்றுமை மயக்கமாம் பசு செயப்படு பொருளாகாது பசுவைக் கறந்தான் எனின் பசு என்பது ஆகுபெயராய்ப் பாலை உணர்த்தும்.

## மூன்றாம் வேற்றுமை

நூ.26. ஒடு ஆன் பெயர் பெறும் மூன்றாம் வேற்றுமை
கருவி காரணம் ஆதல் அதன் பொருள்

**பொருள்:** மூன்றாம் வேற்றுமை உருபுகள் காரணமாக அஃது ஒடு வேற்றுமை ஆன் வேற்றுமை எனப் பெயர் பெறும் கருவியாதலும் காரணமாதலும் அதன் பொருளாம். சிறுபான்மை இன் என்பது உருபாகவும் மாறு உளி என்பவை சொல்லுருபுகளாகவும் வரும். ஆன் ஆல் எனத் திரிந்தும் வரும்.

எ.டு : கொடியொடு துவக்குண்டான் ஊசியொடு குயின்ற தூசும் பட்டும் எனவும் அறிவான் உயர்ந்த சான்றோர் மண்ணான் ஆகிய குடம் எனவும் கல்வியிற் பெரியன் கம்பன். சிறந்தோன் பெயரன் பிறந்தமாறே எனவும் இயல்புளிக் கோலோச்சும்மன்னவன் என்றும் வாளால் வெட்டினான் எனவும் வரும்.

கருவி காரணம் என்பவை ஒருபொருளில் வருமேனும் கருவி என்பது பெரும்பாலும் பருப்பொருளாகவும் காரணம் என்பது பெரும்பான்மை நுண்பொருளாகவும் வரும். காரணம் கருத்துப் பொருளாக வருமிடத்து ஏது எனக் கூறுதல் மரபாகும். ஒடு என்னும் உருபு கருவிப்பொருளில் இக்காலத்து அருகி உடனிழ்வாகிய காரணத்திற்கே வருவதாயிற்று. காரணம் முதற்காரணம் துணைக் காரணம் நிமித்த காரணம் என மூவகைப்படும். அரிசியால் சோறாக்கினான் என்னுமிடத்து அரிசி முதற் காரணம். அது காரியத்தொடு ஒன்றுபட்டிருக்கும். நெருப்பு அகப்பை முதலிய கருவிகள் சமைத்தவன் எல்லாம் துணைக் காரணம். இவை காரியம் நிகழ்ந்தபின் நீங்கிவிடும் உண்பவர் நிமித்தகாரணம் இது காரியத்தின் பயனைக் கொள்ளும். காற்றால் கொடி அசைந்தது வாளால் வெட்டினான் என முதற் காரணமின்றியும் வரும். மழையின்மையால் பயிர்கள் வாடின என்பது ஏது பனியின்மையால் குளிரில்லை என்பதும் அது.

இனித் தொல்காப்பிய உரையாசிரியன்மாரும் பவணந்தி முதலாய இடைக்கால இலக்கண நூலாரும் உருபுகளின் அடிப்படையில் வேற்றுமை இலக்கணங் கூறும் வடமொழிக் கொள்கையைப் பின்பற்றி ஒன்றற்கு மேற்பட்ட பொருள்களை ஒருவேற்றுமைக்குள் அமைத்தும் ஒரு பொருளை இரண்டு வேற்றுமைகளுக்கு உரிமையாக்கியும் வேற்றுமை என்பதன் மெய்ம்மைத்தன்மையை (தத்துவத்தை) ச் சிதைத்துப் போயினர்.

தொல்காப்பியச் சூத்திரங்களின் மெய்ப்பொருளை உணராமல் உரையாளர் மூன்றாம் வேற்றுமை கருவி கருத்தா என்னும் இரண்டு பொருண்மை உடையது என்றனர். பவணந்தியார் கருவி கருத்தா உடனிகழ்வு என மூன்று பொருளில் வரும் என்று கூறிச் சென்றார். வினைமுதல் என்னும் கருத்தா முதல் வேற்றுமைக்கும் மூன்றாம் வேற்றுமைக்கும் உரியது என்றும் ஏதுப்பொருள் மூன்றாம் வேற்றுமைக்கும் ஐந்தாம் வேற்றுமைக்கும் உரியது என்றும் கூறிச் சென்றனர். மேலும் ஒத்தல் என்னும் வினையை ஐந்தாம் வேற்றுமையின் பொருளாகக் கூறிச் சென்றனர்.

மூன்றாம் வேற்றுமைக்குரிய இலக்கணமாகத் தொல்காப்பியர்,

மூன்றாகுவதே ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக்கிளவி
வினைமுதற் கருவி அனை முதற்றதுவே என்று வரைந்தார்.

இரண்டாம் வேற்றுமை "எவ்வழிவரினும் வினையே வினைக் குறிப்பு அவ்விரு முதலிற்றோன்றும்" என்றார். அதனைச் சுட்டி அவ்வினை நிகழ்தற்குக் கருவியாகிய அத்தகு அடிப்படையுடையது என்றார். 'வினைமுதல்' என்றதை உரையாசிரியன்மார் கருத்தா என விபரீதமாகப் பொருள் கொண்டனர். வினைமுதல் என்பதற்கு வினை நிகழ்தற்கு கருவி என்பது பொருளாகும். இவ்வாறே மூன்றாம் வேற்றுமைப் பொருள் வகை கூறுமிடத்துத் தொல்காப்பியர்

"அதனின் இயறல் அதற்றகுகிளவி, அதன் வினைப்படுதல் அதனின் ஆதல் அதனிற் கோடல் அதனொடு மயங்கல் அதனோடியைந்த ஒருவினைக் கிளவி அதனோடியைந்த வேறு வினைக்கிளவி அதனோடியைந்த ஒப்பல் ஒப்புரை இன் ஆன் ஏது ஈங்கென வருஉம் அன்னபிறவும் அதன் பால என்மனார்"

என்றார். இவையாவும் காரணம் பற்றியே நிகழும் என்பதை ஓராமல் அதனோடியைந்த ஒருவினைக் கிளவி என்பதற்கு உடனிகழ்ச்சி எனத் தவறாகப் பொருள் கொண்டு பவணந்தி முனிவர் "மூன்றாவதன் உருபு ஆல் ஆன் ஒடு ஓடு - கருவி கருத்தா உடன் நிகழ்வதன் பொருள்" என்று கூறிச் சென்றார்.

ஒடு என்னும் இடைச்சொல் பொருள் கருவி காலம் வினையிடனொடைந்தும் இருள் தீர எண்ணிச்செயல்" என எண்ணும்மைப் பொருளிலும் பாலொடு தேன் கலந்தற்றே என இணைப்பும்மைப் பொருளிலும் வேலொடு நின்றான் இடுவென்றதுபோலும் கோலொடு நின்றான் இரவு எனத்துணைப் பொருளிலும் நண்பனொடு கண்ணன் வந்தான் என உடனாக என்னும் பொருளிலும் இன்னும் பிறவாறும் வரும். உருபிடைச் சொல் தாயொடு குழந்தை வந்தது தாய் வந்தமையால் தானே வருதற்கியலாத குழந்தை வந்தது. அரசரொடு இளையர் வந்தார் அரசர் வந்தமையால் அவருக்குப் பணிபுரிதற்காக இளையர் உடன் வந்தனர் - எனக்காரணம் பொருளில் வரும்.

வேலனொடு கண்ணன் வந்தான் என்னுமிடத்து வேலன் வந்தான். அவனுடன் கண்ணன் வந்தான் என்பது பொருளாயின் ஒடு உருபன்று

இணைப்பிடைச் சொல்லாகும். ஒருங்குவருதல் என்பது ஒருபொருளின் வேற்றுமை நிலையாகாது. வருதற்கு விருப்பமில்லாத கண்ணன் வேலன் வருதலை நோக்கித்தானும் வந்தான் எனின் வேலன் காரணப் பொருளாகக் கண்ணன் மூன்றாம் வேற்றுமைப் பொருளாகும். ஆதலின் உடனிகழ்ச்சி என்பது ஒரு வேற்றுமைப் பொருளாகாது என அறிக. மற்றும்

அரசனால் ஆகிய கோயில் என்னுமிடத்து அரசன் மூன்றாம் வேற்றுமைக் கருத்தா எனப் பிழைபடக் கூறிச் சென்றனர். மேலும் மூன்றாம் வேற்றுமைக் கருத்தா ஏவுதற் கருத்தா தச்சனாலாகிய கோயில் என்புழி தச்சன் துணைக் காரணமாகவும் இருத்தல் போல அரசனாலாகிய கோயில் என்புழி அரசன் நிமித்த காரணமாவ தல்லது கருத்தாவாகான் என உணர்க. ஏவுதல் என்பது நிமித்தத்தின்பாற்படும் என்க.

கருவி ஒற்றுமைக் கருவி வேற்றுமைக்கருவி அகக்கருவி புறக்கருவி எனப்பல வகையாக அமையும்.

## இதுவுமது

சூ.27. உடனிகழ்வாய் வரும் ஒருவினைக் கிளவியும்
வேறுவினைக் கிளவியும் ஏதுவும் பிறவும்
காரணப்பொருள்தரின் கருவி வேற்றுமையாம்.

பொருள்: ஒருவினைக் கிளவியாக உடனிகழ் பொருளும் வேறு வினைக்கிளவியாக உடன் நிகழ் பொருளும் ஏதுவும், காரணப் பொருளில் வரும் பிறவும் கருவி வேற்றுமையாகிய மூன்றாம் வேற்றுமையாகும்.

எ.டு : மன்னனொடு காவலன் வந்தான், பசுவொடு கன்று வந்தது இவை ஒரு வினைக்கிளவி காவலன் வந்தமைக்கு மன்னன் வருகை காரணம். கன்று வந்தமைக்குப் பசுவருகை காரணம் பூங்காவொடு குளம் வெட்டினான். இது வேறு வினைக்கிளவி காவளர்தற்கு நீம்பாய்ச்சுதற்காகக் குளம் வெட்டப்பட்டது. வெட்டுதல் வினை காவொடு பொருந்தாமையான் வேறு வினைக் கிளவியாயிற்று. விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல் கற்றாரொடு ஏனையவர் என்னுமிடத்து கற்றார் கல்லார் வேறுபாடுகளை உணர்த்த விலங்கொடு மக்கள் உவமமாக எடுத்துக் கொண்டமையால் அது ஏதுவாக அமைந்து மூன்றாம் வேற்றுமைப் பொருளாக அமைந்தது. ஏதுப் பொருளுக்குரிய எடுத்துக்காட்டுக்கள் மேற்கூறப் பெற்றன. பிற என்றமையான் கண்ணாற் குருடன் காலான் முடவன் என்றாற் போல

வருவன கொள்க. கண்ணொளி இன்மையும் கால் வளமின்மையும் காரணம் என்க. இத்தகைய தொடர்கள் வினையை உள்ளடக்கி நிற்கும்.

## நான்காம் வேற்றுமை

நூ.28. குவ்வெனப் பெயர்பெறும் நான்காம் வேற்றுமை
கொடைபகை நேர்ச்சி தகவு அதுவாதல்
பொருட்டுறவு முதலா எப்பொருளாயினும்
ஏற்றுக்கோடல் அதன் பொருளாகும்.

பொருள்: நான்காம் வேற்றுமை உருபுகாரணமாகக் குவ்வேற்றுமை எனப்படும் கொடை, பகை, நேர்ச்சி, தகவு அதுவாதல் பொருட்டு உறவு முதலிய எவ்வகையான பொருளாயினும் இதற்கு இது என்னும் முறையில் ஏற்றுக் கொள்ளுதல் இதன் பொருளாகும். அதனான் இதனைக் கோடற் பொருள் வேற்றுமை என்றும் கோளி என்றும் கூறுவர்.

எ.டு : பாணாற்குப் பரிசளித்தான் - கொடையாக ஏற்றல்
நெருப்பிற்குப் பகை நீர் - பகையாக ஏற்றல்
பாரிக்கு நட்பினர் கபிலர் - நேர்ச்சியாக ஏற்றல்
அரசற்குரித்தானது மணிமுடி - தகுதியாக ஏற்றல்
தாலிக்குப் பொன் கொடுத்தான் - அதுவாதலாக ஏற்றல்
கூலிக்குப் பணிபுரிந்தான் - பொருட்டாக ஏற்றல்
சாத்தனுக்கு மகன் பூதன் உறவாக ஏற்றல் இதனை
சிவனுக்கு மனைவி உமை முறை எனவும் கூறுவர்.
முருகனுக்குத் தாய் பார்வதி

மற்றும் ஏற்றுக் கோடல் பொருள் பருப்பொருளாகவும் நுண் பொருளாகவும் பல கோணங்களில் வரும்.

கன்றுக்கு நீர் வார்த்தான் ஆயன். கூழுக்கு உப்பிட்டான் மடையன். மாணாக்கற்கு அறிவளித்தான் ஆசிரியன். போர்க்குச் சென்றான் வீரன் வீட்டிற்குச் சென்றான் கண்ணன். ஆடைக்கு நூல் கொடுத்தான் வணிகன்கள்வற்குக் கசையடி கொடுத்தான் காவலன் எனவும் பிறவாறும் வரும்.

நான்காம் வேற்றுமைக்குப் பொருட்டு நிமித்தட் என்பவை சொல்லுருபுகளாக வரும். மழையின் பொருட்டுக் குடை பிடித்தான். கூலியின் நிமித்தம் வேலை செய்தான் எனவரும். குவ்வுருபுடன் ஆக

என்பது துணை வினையாகவும் வரும். வேள்விக்காகப் பொன் கொடுத்தான். அறத்திற்காக உயிர்தந்தான் எனவரும்.

## ஐந்தாம் வேற்றுமை

சூ.29. இன் எனப்பெயர் பெறும் ஐந்தாம் வேற்றுமை
ஒன்றனை ஒன்றனொடு சார்த்தியும் உறழ்ந்தும்
நீக்கியும் எல்லையொடு அளவையுமாக
இதனின் இற்றிது எனும் பொருள் படவரும்.

பொருள்: ஐந்தாம் வேற்றுமை உருபு காரணமாக இன் வேற்றுமை எனப் பெயர்பெறும். அது ஒன்றை எல்லையாக (அளவையாக) நிறுத்தி அதனொடு ஒன்றைச் சார்த்தியும் உறழ்ந்தும் நீக்கியும் எல்லையும் அளவையுமாக இப்பொருளினின்று இப்பொருள் இந்நிலையினது என்னும் பொருள் படவும் வரும்.

அம்முறையில் இதனை எல்லைப் பொருள் வேற்றுமை உறழ்ச்சிப் பொருள் வேற்றுமை நீக்கப் பொருள் வேற்றுமை எனவும் கூறுப. இதனின் இற்று இது என்பதே ஐந்தாம் வேற்றுமையின் பொருள் நிலையாகும்.

எ.டு : கருவூரின் கிழக்கு மருவூர். காவிரியின் வடக்குத் திருவரங்கம். தஞ்சையினின்றும் மூன்றுகாதம் உறையூர். இவை சார்த்திக் கூறல் எல்லை பற்றி நின்றன. சாத்தனின் நெடியன் கொற்றன் கொற்றனின் குறியன் சாத்தன் பூதனின் வலியன் தேவன் யாழின் இனியது மழலை உயிரிற் சிறந்தது மானம். இவை உறழ்ந்து கூறல் எல்லை பற்றி நின்றன.

மலையின்வீழ் அருவி, தலையின் இழிந்த மயிர், வறுமையிற்றீந்தான் வணிகன், ஊரின் நீங்கினான் கள்வன், இவை நீக்கம் பற்றி நின்றன. எல்லையாயினும் நீக்கமாயினும் இதனின் இற்று இது என ஒன்றை எல்லையாக அளவையாக வைத்துக் கூறப் பெறுவது ஐந்தாம் வேற்றுமை.

பவணந்தி முனிவர் இன் என்னும் உருபு அடிப்படையில் ஐந்தாம் வேற்றுமை ஒப்புப் பொருளிலும் காரணப் பொருளிலும் வரும் என்பார் உரையாளர். காக்கையிற்கரிது களம்பழம் (காக்கை போலக்கரிது) என்பது ஒப்பு எனவும் கல்வியிற் பெரியன் கம்பன் என்பது ஏதுப்பொருள் எனவும் உதாரணம் தருவர் காக்கையைப் போலக் கரிது எனின் அது செயப்படுபொருளாய் இரண்டாம் வேற்றுமையாவதல்லது தனி ஒரு

வேற்றுமையாகாது மற்றும் காக்கையின் என்பதில் உள்ள இன் என்பது இன்ன என்னும் உவம உருபின் மரூவாதலன்றி உருபாகாது கல்வியின் பெரியன் என்பதில் இன் மூன்றாம் வேற்றுமை ஏதுப் பொருள் உருபாதலன்றி ஐந்தாம் வேற்றுமை நீக்கற் பொருள் உருபாகாதென அறிக.

ஐந்தாம் வேற்றுமையது இன் உருபு வழக்கில் இல் எனத் திரிந்தும் வரும். மேலும் நின்று, இருந்து என்பவை துணைவினையாகச் சேர்ந்தும் வரும். அவை ஊரிலிருந்து சென்றான் காட்டினின்று நீங்கினான் எனவரும்.

## ஆறாம் வேற்றுமை

நூ.30. அதுவெனப் பெயர் பெறும் ஆறாம் வேற்றுமை
பண்புறுப்புக்குழு பலவின் ஈட்டம்
வாழ்நிலை செய்யுள் திரிபின் ஆக்கம்
அன்னபிறவும் தன்னினும் பிறிதினும்
இதனது இதுவெனும் கிழமைப்பட வரும்
உருபீறு கெடுதலும் முதனீளலுமாம்

பொருள்: ஆறாம் வேற்றுமை உருபுகாரணமாக அது வேற்றுமை எனப் பெயர் பெறும். அது பண்பு உறுப்பு குழு பலபொருள்களின் ஈட்டம் வாழ்ச்சி நிலை. செய்யுள் உரிமை ஒன்று திரிந்து மற்றொன்றாக நிற்கும் நிலை ஆகியபொருள் பற்றியும் அவை போல்வனவாய பிறவும் தன்னொடு ஒன்றுபட்டுள்ள கிழமைப் பொருளாயும் பிறிதாக அடைந்து நிற்கும் பொருளாயும் "இதனது இது" என்னும் பொருள்பட வரும். அது என்னும் உருபு ஈறு கெட்டு அ என்னுமளவில் நிற்றலும் முதல் நீண்டு ஆது என வருதலும் இலக்கண வழக்காகும்.

பொருள் இடம் காலம் பற்றி யவை பிறிதின் கிழமையாகவும் ஏனையவை தற்கிழமையாகவும் அமையும்.

| | | |
|---|---|---|
| எ.டு : | சாத்தனது வலிமை | குணப்பண்புத்தற்கிழமை |
| | சாத்தனது வரவு | தொழிற்பண்புத் தற்கிழமை |
| | மாந்தரது கூட்டம்<br>நெல்லது குவியல் | ஒன்றன் கூட்டத்தற்கிழமை |
| | படைகளது தொகுதி<br>பறவைகளது கூட்டம் | பலவின் ஈட்டத்தற்கிழமை |
| | நெல்லது பொரி<br>மஞ்சளது சாந்து | ஒன்று திரிந்தொன்றாகிய தற்கிழமை |

| | | |
|---|---|---|
| யானையது காடு<br>பறவையது கூடு | | வாழ்ச்சிக்கிழமை |
| கபிலரதுபாட்டு | - | செய்யுள் தற்கிழமை |
| கபிலரது பிள்ளைத்தமிழ் | - | செய்யுட் பிறிதின்கிழமை |
| சாத்தனது வேல்<br>கொற்றனது பசு | | பொருட்பிறிதின் கிழமை |
| முருகனது குறிஞ்சிநிலம்<br>தேவனது வீடு | | இடப்பிறிதின் கிழமை |
| மாரனது வேனிற்காலம்<br>முருகனது கார்த்திகைநாள் | | காலப்பிறிதின்கிழமை |

அன்ன பிறவாக வருவன இராகுவினது தலை எனது உயிர் எனவும் பசுவினது கன்று குயிலது குஞ்சு என ஒற்றியற் கிழமை யாகவும் வரும். பிறவாறு உடைமைப் பொருள்பட வருவனவெல்லாம் கொள்க.

ஆறாம் வேற்றுமை உருபின் மூலமாகிய உடைய என்பது சொல்லுருபாக அரசனுடைய மகன், சாத்தனுடைய வீடு எனவரும். அது உருபு நீண்டு எனாது கைகள் தனாது முகம் எனவும் ஈறு குன்றி என கைகள் தன தாள்கள் எனவும் வரும்.

இனி நன்னூலாசிரியர் அது என்பதன் கடைக்குறையாகிய அகரத்தை தனியாகக் கொண்டு அதனைப் பன்மைப் பொருள் பற்றி வரும் பன்மையுருபு என்பார். உருபுகள் வேற்றுமை நிலைமையை உறுதி செய்து காட்டும் அடையாள இடைச் சொற்களாகும். அவை விகுதி இடைச் சொற்களைப் போல திணைபாலிடம் காட்டா. காட்டுதல் தமிழ் நெறியன்று. உரையாசிரியன்மாரும் நன்னூலாரும் தமிழிலக்கணத்தை வடநூலொடு ஒப்பிட்டு நோக்கி உருபுகள் ஒருமை பன்மை காட்டும் எனக் கருதி விட்டனர். ஆறாம் வேற்றுமை உருபு தவிர்ந்த ஏனையவை ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுப்பட வருதலை அவர்கள் கருதவில்லை. மற்று உடைய என்னும் அகர ஈற்று சொல்லுருபு என்னுடைய மகன் என்னுடைய மக்கள் எனப் பொதுவாக வருதலையும் நோக்கிற்றிலர். அரசன் படைகள் புலவர் நூல்கள் என்றாற் போல்பவை. அரசன படைகள் புலவர நூல்கள் என வழங்குதல் மரபின்று அரசனது படைகள் புலவரது நூல்கள் என்றே வழங்கும்.

மற்று சாத்தனது வீடு சம்பந்தன தமிழ் என வரும் உருபு இடைச் சொல்லும் வீடு சாத்தனது கண்கள் பெரிய எனவரும் குறிப்பு வினைமுற்று விகுதி இடைச் சொற்களும் வேறு வேறு என்பது முன்னர் விளக்கப் பெற்றன. ஆறாம் வேற்றுமை ஏற்று நிற்கும் சொல் பெயராயும் வினைக் குறிப்பாயும்

வரும் என்று சேனாவரையர் கூறுவது பிழை என்பதை எனது சொல்லதிகார ஆராய்ச்சிக் காண்டிகையுரையுள் கண்டு கொள்க.

## ஏழாம் வேற்றுமை

நூ.31. கண்ணெனப் பெயர் பெறும் ஏழாம் வேற்றுமை
பல்வகை இடம், வினை நிகழ்ச்சி காலமிவை
இடனாய் நிற்றல் அதன் பொருளாகும்
கண்கால் புறம் அகம் உள்உழை கீழ்மேல்
முன்பின் அயல்புடை கடையிடை தலைவாய்
வலமிடம் முதல்சார் தேஎம் திசை பால்வழி
உழி உளி இல்வயின் என்பவும் பிறவும்
இடவகை குறித்த சொல்லுருபுகளாய் வரும்.

**பொருள்:** ஏழாம் வேற்றுமை உருபு காரணமாகக் கண் வேற்றுமை எனப் பெயர்ப் பெறும். அஃது உருவும் அருவும் உருவருவுமாகி வரும் பல்வேறு இடத்தையும் வினை நிகழ்ச்சியையும் காலத்தையும் இடமாகக் கொண்டு நிற்றல் அதன் பொருளாகும். கண் என்னும் இடைச்சொல்லேயன்றி இடவகை குறித்து வரும் கண், கால், புறம், அகம் உள் உழை கீழ் மேல் முன் பின் அயல், புடை, கடை இடை தலை வாய் வலம் இடம் முதல் சார், தேஎம் திசை பால்வழி உழி உளி இல் வயின் என்பனவும் மற்றவும் சொல்லுருபாகி வரும்.

ஏழாம் வேற்றுமையாக வரும் இடம் தற்கிழமையாயும் பிறிதின் கிழமையாகவும் அமையும் பிரிவின்றி ஒற்றுமையுடையது தற்கிழமை பிரிவுடையது பிறிதின் கிழமை.

எ.டு : மணியின்கண் ஒளி (மணி - ரத்தினம்) தற்கிழமை - பொருளிடமாயது.
பனையின்கண் வாழும் அன்றில் - பிறிதின்கிழமை- பொருளிடமயாது.
ஊரின்கண் உள்ளது கோயில் - தற்கிழமை - இடம் இடமாயது.
நீர்க்கண் உள்ளது நுரை - தற்கிழமை - நீர்இடமாயது.
காற்றின்கண் உள்ளது தூசு - தற்கிழமை - காற்று இடமாயது.
ஆகாயத்தின்கண் பறக்கிறது கழுகு - பிறிதின்கிழமை - விண் இடமாயது.

கடலின்கண் திரிகின்றது மீன் - பிறிதின் கிழமை - கடலிடமாயது.
காற்றின்ங்கண் பறக்கிறது பஞ்சு - பிறிதின்கிழமை - காற்று இடமாயது.
நாளின்கண் உள்ளது நாழிகை - தற்கிழமை - காலம் இடமாயது
வேனிற்கண் பூத்தது பாதிரி - பிறிதின் கிழமை - காலம் இடமாயது
கறுப்பின்கண் உள்ளது கவின் - தற்கிழமை - குணம் இடமாயிற்று.
இளமைக்கண் வாய்த்தது செல்வம் - பிறிதின் கிழமை - குணம் இடமாயிற்று.
ஆடற்கண் உள்ளது சதி - தற்கிழமை - தொழில் இடமாயது.
ஆடற்கண் நிகழ்ந்தது பாடல் - பிறிதின்கிழமை - தொழில் இடமாயது.

இது காலத்தினும் தொழிலிலும் அடங்காமையான் வேறாயிற்று இடமாக நிற்கும் பொருள் ஒரு பகுதியாகவோ முழுமையாக அமையும். கடலின்கண் நாவாய் என்பது கடலில் ஒரு பகுதி. கடலின்கண் உப்பு கடல் முழுமையும் இடம்.

சொல்லுருபுகட்கு எடுத்துக்காட்டு
கண் - நிலத்தின்கண் வளர்வது மரம்
கால் - ஊர்க்கால் நிவந்த பொதும்பர். கால் = ஒருபகுதியிடம்
புறம் - என் உயிர்ப்புறத்திருந்த மருள்மாலை - புறம் = பின்பக்கம்
அகம் - ஊரகத்திருந்தான் அகம் - உள்ளிடம்
உள் - காட்டினுள் வாழும்புலி - உள் நடுவிடம்
உழை - என்னுழை நின்றான் - உழை - பக்கம்
கீழ் - மரநிழற்கீழ் அமர்ந்தான் - கீழ் - அடியிடம்
மேல் - பரியின் மேல் அமர்ந்தான் வீரன் - மேல் - மேலிடம்
முன் - அவர்முன் பகைத்தான் - எதிர்இடம்
பின் - உணர்வின்பின் நின்றது உள்ளம் - நெருங்கிய இடம்
அயல் - மலையயல் உள்ளது சுனை - பக்கம்
புடை - எயிலின் புடை நின்றான் - பக்கம்
கடை - வேலின்கடை மணிபோல் திண்ணியன் - கடை - நுனியிடம்
தலை - வலைத்தலை மானன்ன நோக்கியர் - தலை - உறுதியான இடம்
வாய் - குரைகடல்வாய் அமுதென்கோ - வாய் - வயப்பட்ட இடம்
வலம் - கைவலத்துள்ளது கொடுக்கும் - உள்ள இடம்

இடம் - இல்லிடப்பரத்தை - இடம் - இடப்படுதலால் இடம்
முதல் - சுரன் முதல் வந்த உரன் மாய்மாலை - அடிப்படையிடம்
சார் - காட்டுச்சார் ஓடும் குறுமுயல் ! - சார் - பக்கம்
தேஎம் - மறையோர் தேஎத்து மன்றல் - தேஎம் - இடம்
திசை - தேர்த்திசை இருந்தான் - பாகுபட்ட இடம்
பால் - அவன்பாற் சென்றான் - பால் - பக்கஇடம்
வழி - நறவேங்கை நிழல் வழியசைந்தன்ன - வழி அமைந்த இடம்
உழி - உறைப்புழி ஓலைபோல - முறையான இடம்
உளி - குளிர்காவுளி சேர்புறையும் - உளி - உள்ளிடம்
இல் - ஊரில் இருந்தான் - இல் - இலங்குமிடம்
வயின் - அவர் வயின் சென்றான் - வயின் - வாய்த்த இடம்
பிறவும் என்றதனால் பாடு, அளை முதலியவை கொள்க. நம்பாடணையாத நாள் - கல்லளை சேர்சுனை எனவரும்.

## எட்டாம் வேற்றுமை

சூ.32. விளியெனப் பெயர் பெறும் எட்டாம் வேற்றுமை
எய்துபெயரீறு குன்றல் மிகுதல்
வேறுறல் இயல்பயல் நீளல்பிறிதாதல்
அளபெழல் ஏயுறல் அன்னபிற வாகத்
திரிதல் மரபத் திரிபமை பெயரே
உருபாம் படர்க்கைப் பொருளை முன்னிலைப்
படுத்தழைத் தல்அதன் பொருள்நிலைஎன்ப.

பொருள்: பொருள் காரணமாக விளி வேற்றுமை எனப் பெயர் பெறும் எட்டாம் வேற்றுமையை ஏற்கும் பெயர் ஈறுகெடுதல் குறுகுதல் நீளல் எழுத்து வேறுபடுதல் இயல்பாக நிற்றல். ஈற்றயல் நீளுதல் ஈற்றயலெழுத்துப் பிறிதாதல் அளபெடுத்தல் ஏகாரம் பெறுதல் அன்னபிறவாகத் திரிதல் மரபாகும். தனக்கெனத் தனியே வேறு உருபின்மையின் அங்ஙனம் திரிபுற்ற பெயரே உருபாகக் கொள்ளப்பெறும். படர்க்கைப் பொருளை முன்னிலைப்படுத்துத் தன்முகமாக அழைத்தலே அதன் வேற்றுமைப் பொருள் நிலை எனக் கூறுவர் நூலோர்.

எழுவாய் வேற்றுமையில் அப்பெயரே உருபாதல் போல விளிவேற்றுமையில் இயல்பும் திரிபுமாக அழைக்கப்படும் பெயர்களே உருபாகக் கொள்ளுதல் இலக்கண மரபாகும். ஏகாரம் பெறுதல் ஓகாரம் பெறுதல் அளபெடுத்தல் முதலியவை திரிபாகவே கொள்ளப்படும். இருதிணைப் பெயர்களும் விளி ஏற்கும்.

எ.டு : அரசன் - அரச ! அரசே ! அரசனே வாழ்க வருக எனவரும் புலவன் = புலவ, புலவோய் ! வருக எனவும், ஐயன், ஐய, ஐயா, ஐயனே, ஐயாவோ எனவும் அன்னை - அன்னாய், அன்னா, அன்னையே அன்னே எனவும் கண்ணன் - கண்ணா! கண்ணனே, கண்ணாஓ கண்ணாஅ எனவும் கரியன் கரியாய் எனவும் கரியர் - கரியீர், கரியரே எனவும் தோழி - தோழீ - தோழீஇ எனவும் கிழான் - கிழாஅன் எனவும் வரும் பிற என்றதனான் காவலன் - காவல! காவலோய் எனவும் கிளிகள் - கிளிகாள் எனவும் நம்பர் - நம்பீர், நம்பீரே எனவும் வருதல் கொள்க.

## விளியேலாப் பெயர்கள்

சூ.33. தன்மை முன்னிலை சுட்டு வினாப் பெயர்
தநநு எமுத லாகிய னளர
இறுதிக்கிளைப் பெயர் பாலொடு வரூஉம்
மற்றை பிறவொடு தாம் தான் விளிகொளா.

பொருள்: தன்மை முன்னிலை இடப்பெயர், சுட்டுப் பெயர் வினாப்பெயர் த ந நு என்பனவற்றை முதலாக உடைய ன ள ர ஈற்றுக் கிளைப்பெயர்கள் பால்காட்டி வரும். மற்றை பிற என்னும் பெயர்கள் தாம் தான் என்னும் படர்க்கைப் பெயர்கள் ஆகியவை விளி ஏலாதனவாம்.

அவை யாவன, யான், நான், யாம், நாம், நீ நீர், நீயிர் அது இது உது எது அவன் இவன் உவன் எவன் அவள் இவள் உவள் எவள் அவர் இவர் உவர் எவர் அவை இவை உவை எவை அவ்இவ் உவ் எவ் யாது, யாவை, யாவன், யாவள் யாவர் முதலியனவும்

தமன் தமள் தமர் நமன் நமள் நமர் நமன் நமள், நுமர், எமன், எமள் எமர் என்பனவும் மற்றையான் மற்றையாள், மற்றையார் மற்றையது மற்றையவை பிறன் பிறள் பிறர், பிறிது, பிற என்பனவுமாம்.

## வேற்றுமை மயக்கம்

எழுவாய் முதலாக எண் வகை வேற்றுமைகளும் பெயர்ப் பொருளைப் பற்றி அமையும் அவ்வேறுபாடுகளைச் செய்வன தொடரின் கருத்துக்களை முடிக்கும் பெயர்ப் பயனிலைகளும் வினைப் பயனிலைகளுமாம். உருபுகள் அடையாளமாக ஒரு வேற்றுமையை உறுதி செய்தற் பொருட்டு வரும். கருத்துக்கள் தொடராக விரிந்து முடியுமளவில் பெயர்ப் பொருளின் பெயர்களில் உருபு தொக்கு (மறைந்து) ம் இயைபில்லாத வேறு உருபுகளும்

வரும் ஒரு பயனிலை ஒன்றற்கு மேற்பட்ட பொருளிலும் வரும். அங்ஙனம் உருபு தொகுதலும் பிற உருபுகள் வருதலும் பயனிலைச் சொல் உறுதியின்றி வருதலும் வேற்றுமை மயக்கம் எனப்படும்.

**எ.டு. உருபுதொகல்:** உண்டு வந்தேன் இதன்கண் யான் என்னும் எழுவாய் தோன்றாமல் தொக்கு நின்றது. யான் சோறுண்டேன் இதன்கண் சோறு என்னும் செயப்படுபொருள் சோற்றை எனவிரியாமல் ஐயுருபு தொக்கு நின்றது. மரத்தேர் செய்தான் - இதன்கண் மரத்தால் தேர் செய்தான் என்னும் மூன்றனுருபுதொக்கது யான் பள்ளி செல்கிறேன் இதன் கண் பள்ளிக்கு என்று உருபு விரியாமல் தொக்கு நின்றது. கற்று அறியாமை நீங்கினான் என்பதன்கண் கற்றதனால் அறியாமையின் நின்று நீங்கினான் என்னும் இன்னுருபுதொக்கது அரசாட்சி என்பதன்கண் அரசனது ஆட்சி என்னும் அது உருபு தொக்கது மலைச்சுனைவற்றியது என்பதன்கண் மலையின் கண் சுனை என்றும் கண்ணுருபு தொக்கது. செய்க பொருளை என்பதன்கண் அரசே! மக்களே! என்னும் விளிப் பெயர் தொக்கன.

**(2) வேறு உருபுமயங்கல் :** அவ்வித்தழுக்காறுடையானைச் செய்யவள் தவ்வையைக் காட்டிவிடும். இதன்கண் தவ்வைக்கு - தவ்வையிடம் என்னும் பொருளில் ஐகார உருபு வந்தது. கிளையரிநாணற் கிழங்கு மணற்கீன்றமுளை. இதன்கண் மணற்கண் ஈன்ற என்னும் பொருளில் குவ்வுருபு வந்தது.

**(3) வேற்றுமைப் பொருள்மயக்கம் :** எறிதல் என்னும் வினை செயப்படு பொருட்கும் கருவிப் பொருட்கும் உரித்தாகலின் கல்லெறிந்தான் என்னும் தொடர் மயங்கி நிற்கும். கல்லை எறிந்தான் - கல்லால் எறிந்தான் என்னும் உருபுகள் வந்து உறுதி செய்யும்.

சார்தல் என்னும் வினை பருப்பொருட்கும் நுண்பொருட்கும் உரியது. ஊர்சார்ந்தான் என்னும் தொடர் ஊரைச்சார்ந்தான் எனவும் ஊரின் கண் சார்ந்தான் எனவும் ஊர் என்பது ஊராகிய இடத்தையும் ஆகுபெயரால் ஊர்வாழும் மக்களையும் குறித்து வரும். கரும்புவேலி என்னுமிடத்து கரும்பாலாகிய வேலி எனவும் கரும்பிற்குக் கட்டி வேலி எனவும் வரும். இவ்வாறு வருதல் பொருள் மயக்கமாம்.

**நூ.34.** உருபுதொக வருதலும் பொருள் நிலைக்கேற்ப
பிறிது பிறிதாகலும் பொருள் தடுமாறலும்
வேறுருபு வருதலும் வேற்றுமை மயக்கமாம்.

பொருள்: வேற்றுமைப் பொருளை உறுதிப்படுத்தும் உருபிடைச் சொற்கள் தொக்கு வருதலும் பொருள்நிலைகட்கு ஏற்ப வேறு வேறு உருபுகளை ஏற்றுப் பொருள் மயங்கியும் தடுமாறியும் வருதலும் ஓர் உருபு நிற்க வேண்டிய விடத்து வேறு உருபு வந்து நிற்றலும் வேற்றுமை மயக்கம் எனப்படும்.

எ.டு : விளக்கமும் எடுத்துக்காட்டுக்களும் மேல் வரையப்பெற்றன. பிறவும் பின்வரும் நூற்பா உரைகளுள் விளங்கும்.

## பொருள் மயக்கம்

சூ.35. தடுமாறு தொழிற்கண் இரண்டும்மூன் றும்வரும்

பொருள்: தடுமாறு தொழிலாக வரும் தொடர்க்கள் விரியுமிடத்து இரண்டாம் உருபும் மூன்றாம் உருபும் வரும். புலிகொல் யானை என்னும் தொடரில் கொன்றது யானையாயின் புலியைக் கொன்ற யானை எனவும். கொல்லப்பட்டது யானையாயின் புலியாற்கொல்லப்பட்ட யானை எனவும் வரும். மீன் விழுங்கினவன் என்பதுமது.

சூ.36. கொடை எதிர் கிளவிக்கு நான்கும் ஆறுமாம்

பொருள்: கொடையை ஏற்றுக் கொள்ளும் பொருட்டொடரில் நான்கனுருபும் ஆறனுருபும் மயங்கும்.

எ.டு : தேவர் பலி கொடுத்தான் என்பது தேவர்க்குப் பலி கொடுத்தான் என்றும் தேவரது பலியைக் கொடுத்தான் எனவரும். - தாலிப்பொன் - கபிலர் நண்பன் என்றாற் போல்வன மயங்கா நான்காவதே பெற்று வரும்.

சூ.37. உரிமைப் பொருட்கண் உயர்திணைத்தொகைவயின்
அது உருபு விரியாது குவ்வுருபு தொடரும்
உடைய சொல்லுருபு விரிதலும் வழக்கே

பொருள்: தன்னுரிமையுடைய உயர்திணைப் பெயர்ப் பொருட்கண் உருபு தொக்குழி அது என்னும் உருபு விரியாது குவ்வுருபு தொடரும். உடையான் என்னும் சொல்லுருபு விரிதல் உலக வழக்காகும்.

எ.டு : நம்பிமகன், நங்கை கணவன், என்மகன், என்தாய், என் தந்தை என்பவை விரியுமிடத்து நம்பிக்கு மகன், நங்கைக்குக் கணவன் எனக்கு

மகன் எனக்குத் தாய் எனக்குத் தந்தை எனவும் நம்பியினுடைய மகன் - நங்கையுடைய கணவன் என்னுடைய மகன் எனவும் வரும்.

## முதல் சினை பற்றிய மரபு

நூ.38. *முதல் சினைத் தொடருள் முதற்கண் ஐவரின்*
*சினையைக் கண்ணுறும் சினைக்கண் ஐவரின்*
*முதற்கண் அதுவரல் முறைமை என்ப.*

**பொருள்:** முதற் பொருளும் சினைப் பொருளும் ஒருங்கு ஒருதொடராக வருமிடத்து முதற்பொருளில் ஐயுருபுவரின் சினைப் பொருளில் கண்ணுருபு வரும் சினைப் பொருளில் ஐயுருபு வரின் முதற்பொருளில் அது உருபு வரல் முறைமை என்ப.

**எ.டு :** மரத்தைக் கிளையின் கண் வெட்டினான் யானையைக் கோட்டின் கண் குறைத்தான் எனவும் மரத்ினது கிளையைக் குறைத்தான் யானையது கோட்டைக் குறைத்தான் எனவும் வரும். சிறுபான்மை மரத்தின் கண் கிளையை வெட்டினான் எனமாறியும் வரும்.

## முதல்சினை பற்றியதொரு விளக்கம்

நூ.39. *முதலும் சினையும் பொருளின் வேறல*
*உரைப்போர் குறிப்பின பிண்டமும் அற்றே*

**பொருள்:** உறுப்புக்களின் தொகுதி முதல், ஒரு முதலின் கூறுகள் உறுப்பு ஆதலின் அவை பொருளின்று வேறுபட்டவை யல்ல ஒன்றை முதலாகவும் உறுப்பாகவும் கூறுதல் கூறுவோர் கொள்ளும் குறிப்பினவாகும். பிண்டப் பொருளும் அவ்வாறே கூறப்பெறும்.

**விளக்கம்:** யானையை முதலாகக் கொள்ளுமிடத்து தலை உடல் கால் முதலியவை சினை. தலையை முதலாகக் கொள்ளுமிடத்து கண் செவி துதிக்கை முதலியவை சினை படையை முதலாகக் கொள்ளுமிடத்து யானை சினைப்பொருளாகும். இவ்வாறே பிண்டப் பொருளும் பொலியின்கண் நெல்லைவாரினான் குப்பையது தலையைச் சிதைத்தான் எனவரும்.

## வேற்றுமையுருபுகள் வருமிடம்

சூ.40. ஐம்முதல் உருபுகள் ஆறும் இடை வரும்
அது தவிர்ந் தீற்றிலும் வரும் தொகின் இடைதொகும்
ஐயும் கண்ணும் ஈற்றிலும் தொகுமே.

**பொருள்:** பெயரைச் சார்ந்து வரும். ஐம்முதல் கண் ஈறாகிய உருபுகள் ஆறும் தொடரின் இடையிலும் அது உருபு தவிர்ந்தவை ஈற்றிலும் வரும் தொகுங்கால் இடையில் தொகும் ஐயுருபும் கண்ணுருபும் ஈற்றிலும் தொகும்.

**எ.டு :** கண்ணைப் பெற்றான். கண்ணாற்கண்டாள், கண்ணுக்கு மருந்திட்டான் கண்ணின் நீர் வழிந்தது - கண்ணது பார்வை கண்ணின்கண் தூசு படிந்தது எனவும் பெற்றான் கண்ணினை கண்டான் கண்ணால் மருந்திட்டாள் கண்ணிற்கு நீர் வழிந்தது கண்ணின். தூசு படிந்தது கண்ணின்கண் எனவும் - உண்டான் சோறு அரசன் ஏறினான் தேர் எனவும் வரும். நாடு அரசனது பசு ஆயனது என வருவன ஆறனுருபு பெற்றவையல்ல என அறிக. அது உருபு இடையில் மட்டுமே வரும். ஒரு பெயர்ப்பயனிலையொடு முடியும்.

## குவ்வுருபுமயக்கம்

சூ.41. உறுப்பும் உறவும் கருவியும் எல்லையும்
உறழ்ச்சியும் நீக்கமும் காலமும் இடமும்
அன்ன பிறவினும் குவ்வுருபு மயங்கும்.

**பொருள்:** ஆறாம் வேற்றுமைக்குரிய உறுப்புப் பொருளிலும் உறவுப் பொருளிலும் மூன்றாம் வேற்றுமைக்குரிய கருவிப் பொருளிலும் ஐந்தாம் வேற்றுமைக்குரிய எல்லைப் பொருள் உறழ்ச்சிப் பொருள் நீக்கப் பொருள்களிலும் ஏழாம் வேற்றுமைக்குரிய காலப் பொருளிலும் இடப் பொருளிலும் அவை போலும் பிறவிற்றினும் நான்காம் வேற்றுமைக்குரிய குவ்வுருபு பொருள் சிதையாமல் மயங்கிவரும்.

**எ.டு :** யானைக்குக் கொம்பு கூரியது. இம்மகவிற்குத்தாய் இக்குரங்கு எனவும் இது பணத்திற்குக் கொண்ட அரிசி எனவும். கருவூர்க்குக் கிழக்கு மருவூர், சாத்தனுக்கு நெடியவன் கொற்றன். தன் ஊர்க்கு நீங்கினான் பூதன் எனவும் நாளைக்கு வருவான், அவனுக்குக் குற்றமில்லை எனவும் வரும் பிற என்றதனான் சாத்தனுக்குச் செய்ய இயலும் இக்காரியம் என ஏதுப் பொருளில் வருதல் கொள்க.

## அது உருபு மயக்கம்

சூ.42. அதுவென் உருபு செயப்படு பொருளிலும்
கோடற்பொருளிலும் ஒரோ வழி வருமே.

பொருள்: அது என்னும் ஆறனுருபு ஒரோ வழிச் செயப்படு பொருளிலும் கோடற் பொருளிலும் மயங்கிவரும்.

எ.டு : நூலது குற்றங் கூறினான் என்பது நூலைக் குற்றங் கூறினான் என்றும் அவனது குற்றேவல் செய்தான்பது அவனுக்குக்குற்றே வல் செய்தான் என்றும் வரும்.

## உருபு மயங்கினும் பொருள் திரியாதெனல்

சூ.43. யாதன் உருபிற் கூறிற்றாயினும்
பொருள் செல் மருங்கின் வேற்றுமை சாரும்.

பொருள்: ஒருதொடர் எவ்வுருபாற் கூறப்பட்டிருப்பினும் பொருள் கொள்ளுமிடத்து அதன் பயனிலைக்கேற்ப வேற்றுமைப் பொருள் சார்ந்து நிற்கும்.

எ.டு : "கோட்டுப்பூச்சூடினும் காயும் ஒருத்தியைக் காட்டிய சூடினீர் என்று" இதன்கண் ஒருத்திக்கு என்பது ஒருத்தியை என நிற்பினும் கோடற் பொருளே தரும். "கொக்கினுக்கொழிந்த தீம்பழம்" இதன்கண் கொக்கினின்று என்பது கொக்கினுக்கு என நிற்பினும் நீங்கற் பொருளே தரும் (கொக்கு = மாமரம்) 'மெய்யுருபு தொகா இறுதியான' இதன் இறுதியான் என நிற்பினும் இறுதிக் கண் என இடப்பொருளே தரும். பிறவும் இவ்வாறே கண்டுகொள்க.

## சில பொருள் மயக்கம் மரபாக வருதல்

சூ.44. செயப்படுபொருளும் கருவியும் ஒரோவழி
வினைமுதல் போலக் கிளத்தலும் மரபே.

பொருள்: செயப்படு பொருளையும் கருவிப் பொருளையும் ஒரோவிடத்து வினைமுதல் போல வைத்துக் கூறுதலும் உலக வழக்காகும்.

எ.டு : திண்ணை மெழுகப்பட்டது எனற் பாலது திண்ணை மெழுகிற்று என்றும் இது இவ்வெழுத்தாணியான் எழுதப்பட்டது எனற்பாலது இவ்வெழுத்தாணி எழுதியது எனவும் வரும்.

**குறிப்பு:** வேற்றுமை பற்றியும் பெயர்ச் சொல்லிலக்கணம் பற்றியும் தமிழ் நெறி மரபினின்றும் பிறழ்ந்த உரையாளர் கருத்துக்களும் நன்னூல் முதலிய இடைக்கால நூற் கருத்துக்களும் மறுக்கப்பட்டுள்ளமையை ஓர்ந்து உண்மை நெறியை மாணக்கர் தெரிந்து கொள்வாராக. நுட்பமான விளக்கங்களைத் தொல்காப்பிய ஆராய்ச்சிக் காண்டிகையுரை நூலுள்கண்டு கொள்க.

# 4. வினைச்சொல்லியல்

## (வினைச் சொற்களின் பொதுவிலக்கணமும் வகைகளும்)

சூ.45. பொருளது இயக்கம் பண்புநிலை முதலாச்
சுட்டிஎழும் முதனிலைச் சொல்முக் காலம்
தெரிநிலை குறிப்பொடு சுட்டியும் பாலிடம்
காட்டியும் பாலிடம் குன்றியும் வேற்றுமை
கொள்ளாது உயர்திணை அஃறிணை இருதிணைப்
பொதுவென முத்திறப்படவரும் வினைச்சொல்.

**பொருள்:** இருதிணைப் பொருள்களின் இயக்கம் வடிவு நிறம் தன்மை முதலாய பண்பு நிலைகளைச் சுட்டித் தோன்றும் முதனிலை (பகுதி) ச் சொற்கள் இறப்பு நிகழ்வு எதிர்வெனும் மூன்று காலங்களைத் தெரிநிலையாகவும் குறிப்பாகவும் காட்டியும் ஐம்பால் மூவிடங்ககளை விகுதிகளாற் காட்டியும் பாலிடம் காட்டும் விகுதிகள் குன்றியும் எண் வகை வேற்றுமையும் கொள்ளாமல் உயர்திணை வினை அஃறிணை வினை இருதிணைப் பொது வினை எனமுத்திறமாக வருவன வினைச் சொற்களாம்.

**தெரிநிலை வினைகள்:** முதனிலைத் தொழிற் பெயர்களடியாகத் தோன்றிக் காலங்காட்டும் இடைநிலைகளையும் விகுதிகளையும் பெற்று ஒருகாலத்தைத் தெளிவாகக் காட்டி வரும். இவை அன் ஆன் முதலிய விகுதிகளால திணைபால் இடங்களைக் காட்டி வரும். பாலிடங்காட்டும் விகுதி குன்றி வருவன எச்சவினை அல்லது வினையெச்சம் எனப்படும் அது. உண்டு, உண்ணுபு, உண்ண உண்ணிய எனப்பத்து வாய்பாடுகளில் வரும்.

குறிப்பு வினை: தேவன் பொன்னினன், சாத்தன் ஊரினன் கண்ணன் திருவோணத்தான் சாத்தன் நெடுஞ்செவியன் மாரன் கரியன் இவன் கூத்தன் எனவும் கண்ணன் இவன் எனும் குறிப்பு வினைகள் பொருளாதி ஆறுபெயர்களின் அடியாகத் தோன்றிப் பயனிலையாகக் காலத்தைக் குறிப்பாகக் கொண்டு வரும்.

நம்பி உண்டான் நங்கை உண்டாள் அவர் உண்டார் உயர்திணை வினை. களிறு உண்டது களிறுகள் உண்டன அஃறிணை வினை. சாத்தன் உண்ணும் - சாத்தி வரும். அவன் உண்டு அவள் உண்டு அவர் உண்டு அது உண்டு அவை உண்டு என இருதிணைப் பொதுவினை. வரும் பிறவிரிவான விளக்கங்களைச் சிறப்புச் சூத்திர உரைகளில் கண்டு கொள்க.

## வினையாலணையும் பெயர்

சூ.46. இருவினை முற்றும் பயனிலைத்தன்மை
விட்டெழு வாயின் காரணப்பெயராய்
ஈறு, திரிந்துந் திரியாதும் பிறிதொரு
வினையா னிறல்வினை யாலணையும் பெயர்.

பொருள்: எழுவாய்ப் பெயரை முடிக்குஞ் சொல்லாக வரும் தெரிநிலை, குறிப்பு ஆய இருவகை வினைமுற்றுக்களும் பயனிலையாய் முடிக்குந் தன்மையை விட்டு ஒர் எழுவாய்ப் பெயர்ப் பொருட்குக் காரணப் பெயராய் ஈறு திரிந்தும் திரியாமலும் பிறிதொரு பயனிலையால் முடியின் அவை வினையாலணையும் பெயர் எனப்படும்.

எ.டு : சாத்தன் உண்டான் என்பதில் உள்ள வினைமுற்று அச்சாத்தனுக்குக் காரணப் பெயராய் வருமிடத்து உண்டவன் என்று திரிந்தோ உண்டான் எனத் திரியாமலோ வரும். அவ்வழி அப்பெயர், வினையாலணையும் பெயராம். அது உண்டான் வந்தான், உண்டானைக் கண்டேன், உண்டானால் இது செய்யத் தகும் உண்டானுக்கு விடைதந்தேன் உண்டானின் இவன் நல்லவன் - உண்டானது குதிரை உண்டான்கண் நலம் சேரும் உண்டானே! செல்க என வேற்றுமைகளை ஏற்று வரும் இது உண்டவன் வந்தான் உண்டவனைக் கண்டேன் எனவும் உண்டோன் வந்தான் உண்டோனைக் கண்டேன் எனவும் ஈறுதிரிந்தும் வரும். ஈறுதிரிந்த வழி பயனிலையின்றியும் வினையாலணையும் பெயர் என்பதைக் காட்டும்.

இவ்வாறே சாத்தன் கரியன் என்னும் தொடரில் உள்ள கரியன் என்னும் குறிப்பு வினைமுற்றுக் கரியன் வந்தான் கரியனால் முடியும் இக்கரியம் என உருபுகளை ஏற்றுவரும். குறிப்பு வினையாலணையும் பெயர். கரியன் என்னும் சொல் பெயராகுறிப்பு வினை முற்றா வினையாலணையும் பெயரா என்பது

கூறுவோனது குறிப்பாலும் முன்னும் பின்னும் வரும் சொற்களின் தொடர்களாலும் உணரப்படும். வினையாலணையும் பெயர்க்குத் தொழில் நிலைப் பெயர் என்பதும் ஒருபெயர் சுருக்கமாக வினைப்பெயர் என்றும் கூறுப. இவை பாலிடங் காட்டும் விகுதி குன்றியவிடத்துப் பெயரச்சமாக நிற்கும்.

## தெரிநிலை வினை

**சூ.47.** **முதனிலை வினைப்பெயர் காலக்கிளவியொடு**
**வரினவை தெரிநிலை வினைச்சொல் எனப்படும்.**

**பொருள் :** நடயா மடிசீ எனவரும் முதனிலைத் தொழிற் பெயர்கள் இடைநிலையாயும் ஈறாயும் அமைந்த காலமுணர்த்தும் இடைச் சொற்களொடு கூடி வரின் அவை தெரிநிலை வினைச்சொற்கள் எனப்படும்.

**எ.டு :** நடந்தான் நடக்கிறான் நடப்பான், நடவான், நடந்து நடக்க எனவரும். ஏனைப் பாலிடங்களோடும் எச்ச வாய்பாடுகளோடுங் கூட்டிக் கண்டு கொள்க. இவை இடைநிலைகளான் காலங்காட்டின. சென்று, சேறு, சேறும் காண்மின் உண்மின், உண்ணும் உண்கும் வாழ்க வாழி என வருவன விகுதிகளால் காலங்காட்டின.

## குறிப்பு வினை

**சூ.48.** **பொருள் முதலாறன் பெயரடிப்படைச்சொல்**
**பாலிட விகுதியொடு பயனிலை யாகமுக்**
**காலக்குறிப்பொடும் வரும் வினைக்குறிப்பவை**
**உடைமை இடம் ஒப் பொடு குணம் உணர்த்தும்.**

**பொருள் :** பொருளிடம் காலம் சினை குணந்தொழில் ஆகிய ஆறனது முதனிலைச் சொற்கள் பாலிடங்காட்டும் விகுதியொடு கூடி ஓர் எழுவாய்ப் பெயர்க்குப் பயனிலையாக முக்காலங்களையும் உள்ளடக்கிய குறிப்பொடு வருவன குறிப்பு வினைச் சொற்களாம். அவை உடைமை இடம் ஒப்பு பண்பு ஆகியவற்றை உணர்த்தி வரும்.

**எ.டு :** சாத்தன் பொன்னினன், பொன்னன், சாத்தி பொன்னினள், பொன்னி சாத்தர் பொன்னினர், பொன்னர், களிறு முகபடாத்தது களிறுகள் முகபடாத்தன எனவும் யான் பொன்னினேன் யாம் பொன்னினேம் நீ பொன்னினை நீயிர் பொன்னினிர் எனவும் அவன் காடன் இவன் மலையன் இவள் மலைச்சி இவர் ஊரினர் எனவும் வரும் இவை பொருட் பெயர் அடியாக ஆக்கம் பெற்றவை. கண்ணன் அகத்தான், வேலன் புறத்தான், முருகன் உச்சியான் என வரும். இவை இடப் பெயரடியாக ஆக்கம் பெற்றவை.

இவன் புலியன்னன், இவள் மயிலன்னள் இவர்களிறன்னர் எனவரும் இவை ஒப்புப் பொருள் பற்றி உவம உருபால் ஆக்கம் பெற்றவை.

மாரன் வேனிலான், சிவன் ஆதிரையான், இவன் மூலன், அவன் நேற்றையான் என வருவன காலப் பெயர்களால் ஆக்கம் பெற்றவை.

திருமால் செங்கண்ணன், சிவன் நுதற்கண்ணன் இவன் நெடுஞ்செவியன் அவன் பெருவயிறன் என வருபவை சினைப் பெயரடியாக ஆக்கம் பெற்றவை.

சாத்தன் கரியன் சாத்திசிகப்பி, தேவர் பெரியர், இவன் குறளன், பூதன் நல்லன் கொற்றிநல்லள் தாய் அன்பினள் என வருவன குணப்பெயரடியாக ஆக்கம் பெற்றவை அவன் நெடுநடையன், இவன் அம்பலக் கூத்தன் இவள் கூத்தி இவள் பாடினி என வருவன தொழிற் பெயரடியாக ஆக்கம் பெற்றவை.

நல்லபசு, கரியகுதிரை தீயபாம்பு எனக் குறிப்புப் பெயரெச்சங்கள் வரும். நலமன்றிப் புரியான் பொருளின்றிக் கூறான் எனக் குறிப்பு வினை எச்சங்கள் வரும்.

குறிப்பு வினை விரியுங்கால் ஆக்கச் சொல்லொடு கூடிச்சாத்தன் பொன்னை உடையவனாக இருந்தான் இருக்கிறான் இருப்பான் எனவும் இவன் நல்லன் ஆயினான், ஆகின்றான் ஆவான் எனவும் விரிந்து ஒரு காலத்தை உணர்த்தும்.

## காலம்

**சூ.49. நிகழ்வு எதிர்வு இறப்பெனக் காலம் மூன்றே**

**பொருள் :** நிகழ்காலம் எதிர்காலம் இறந்த காலம் எனக் காலம் மூன்றே யாம் வடமொழி முதலியவற்றுள் சொற்களை அடிப்படையாக வைத்து வந்து கொண்டிருந்தான் வந்து கொண்டிருக்கிறான் வந்துக் கொண்டிருப்பான் என்றாற் போல்வனவற்றை நிகழ்வில் இறப்பு நிகழ்வில் நிகழ்வு நிகழ்வில் எதிர்வு என்றாற் போலப்பகுத்து கூறுவன யாவும் முடிந்த முடிபாக மூன்று காலங்களுள் அடங்குதலின் காலம் மூன்றே என்பது தமிழ் நூலார் கொள்கையாம்.

நிகழ்காலம் என்பது ஒன்றில்லை எனினும் ஒருதொழில் தொடங்கி முற்றுப் பெறும் அளவுக்கு இடைப்பட்ட காலத்தை நிகழ் காலம் என வகுத்தனர் நூலோர்.

## வினை நிலை

நூ.50. பாலிடங்காட்டும் விகுதியொடு முடிக்கும்
சொல்லாய் அமைவன முற்றுவினை, அவை குறைந்து
அயலதோர் வினையொடு முடிபவை எச்சமாம்

பொருள் : வினைச்சொற்களுள் பால் இடம் காட்டும் விகுதியொடு கூடி எழுவாய்க்கு முடிக்கும் சொல்லாய் அமைபவை முற்றுவினை அல்லது வினைமுற்று எனப்படும் பாலிடம் காட்டும் விகுதிகுன்றி பிறிதொரு வினைச் சொல்லொடு முடிபவை எச்சவினைகளாம். எ.டு. உண்டான் - உண்கிறான் - உண்பான், உண்ணான், உண்டு, உண்ணுபு - உண்ண எனவரும்.

## விகுதிகள்

நூ.51. குடுதுறு என் ஏன் அல் அன் உயர்திணைத்
தன்மை ஒருமை, அம் ஆம் எம் ஏம்
கும் டும் தும் றும் பன்மை விகுதியாம்
படர்க்கை யோரையும் கும் டும் தும் றும்
இருபாலாரையும் உளப்படுத் தமையும்
இவற்றுள் என்ஏன் அம் ஆம் எம்ஏம்
குறிப்புவினைக்கண் வருதற்குரிய.

பொருள் : முற்றுவினைக்கண் குடுதுறு என் என் அல் அன் என்பவை உயர்திணைத் தன்மை ஒருமைக்கும் டும் தும் றும் அம் ஆம் எம் ஏம் என்பவை உயர்திணைத் தன்மைப் பன்மைக்கும் விகுதிகளாக வரும். இவற்றுள் அம்மாம் என்பவை முன்னிலையாரையும் எம் ஏம் என்பவை படர்க்கையாரையும் கும் டும் தும் றும் என்பவை ஈரிடத்தாரையும் உளப்படுத்துத் தன்மைப் பன்மை விகுதிகளாக வரும். மற்று இவற்றுள் என் ஏன் அம் ஆம் எம் ஏம் என்பவை மட்டும் குறிப்பு வினைக்கண் விகுதிகளாக வரும்.

எ.டு : யான் உண்கு, யான் உண்டு, யான்வருது, யான்சேறு, யான் வந்தனென், யான் வந்தேன், யான் வருவல், யான் வருவன் எனவும் நாம் உண்டனம், யாம் உண்டாம் சேறும் எனவும் யான் கரியென் யான் கரியேன் யாம் கரியம், யாம் கரியாம் யாம் கரியெம், யாம் கரியேம் எனவரும் அஃறிணைக்குப் பேசும் தன்மை இன்மையின் அஃறிணையில் தன்மை வினைகள் இல்லை. நன்னூலார் உருவக வகையால் வருவனவற்றை ஏற்றுத் தன்மையைப் பொதுவினையுள் கூறுவார். அது அறிவியலுக்கு முரணாகும்.

## உயர்திணைப் படர்க்கை வினை ஒருமை பன்மை விகுதிகள்

சூ.52. அன் ஆன் அள் ஆள் படர்க்கை உயர்திணை
ஒருமை அர் ஆர் பம்மார் பன்மை
விகுதியாம் கள்ளொடுமிடைதலும் வழக்கே
குறிப்பு வினைக்கு அன் ஆன் அள் ஆள் அர் ஆர்
வரும் னள ஈறு ஆண் பெண்பால் உணர்த்தும்.

**பொருள் :** அன் ஆன் அள் ஆள் விகுதிகள் உயர்திணைப் படர்க்கை வினை ஒருமையும் அர் ஆர் ப, மார், பன்மையும் காட்டும் பன்மையில் கள் விகுதி இணைந்து வருதல் உலக வழக்காகும். குறிப்பு வினைக்கண் அன் ஆன் அள் ஆள் அர் ஆர் என்பவை மட்டும் வரும். அவற்றுள் ன்கர ஈறு ஆண்பாலையும் ளகர ஈறு பெண்பாலையும் உணர்த்தும் ஏனைய இருபாற்பன்மையும் உணர்த்தும்.

**எ.டு :** உண்டனன், உண்டான், உண்டனள், உண்டாள், உண்டனர், உண்டார் கூறுப உண்மார் எனவும் கரியன் கரியான் கரியள் கரியாள் கரியர் கரியார் எனவும் வரும். பகரம் உயிர்மெய்யாய் உயர்திணைக்கே உரிய வினைகளில் மட்டும் வரும். அஃறிணைக் கண் வரின் பகரமெய் எதிர்கால இடைநிலையாகவும் அகரம் ஈறாகவும் வரும் என அறிக. இடைக் காலத்தில் இவ் அறிவியல் நோக்குச் சிதைந்து விட்டது. இருதிணைக் கண்ணும் உரையாசிரியர்கள் ஆளுகின்றனர்.

## அஃறிணை வினைவிகுதிகள்

சூ.53. துறுடுக் குற்றிய லுகரயீறஃறிணை
ஒருமை அஆ வ பன்மை விகுதியாங்கு
ஆ எதிர்மறைக்கணும் வகரந் தெரிநிலை
டுக்குறிப்பினும் பிற பொதுவினும் வருமே.

**பொருள் :** அஃறிணைப் பொருட்படர்க்கையின் கண் து று டு என்னும் குற்றுகர ஈறுகள் ஒருமைக்கும் அ ஆ வ என்னும் ஈறுகள் பன்மைக்கும் விகுதியாக வரும். ஆங்கு ஆகாரம் எதிர்மறையில் மட்டும் வரும். வகரம் தெரிநிலை வினைக்கு மட்டுமே வரும். டுகரம் குறிப்புவினைக்கு மட்டுமே வரும். ஏனைய துறு அ தெரிநிலை குறிப்பு வினைகளுக்குப் பொதுவாக இரண்டன் கண்ணும் வரும்.

**எ.டு :** உண்டது உண்கின்றது (எதிர்காலத்தில் செய்யும் என்னும் இருதிணைப் பொது வினையான் வரும். பன்மையும் அவ்வாறே வரும்) கூயின்று போயிற்று றுகரம் இறந்த காலத்தில் மட்டும் வரும். உண்டன உண்கின்றன எனவரும்

வகரம் தெரிநிலையாக வருவ செல்வ உண்ணுவ என எதிர் காலத்தில் மட்டும் வரும். ஆகாரம் உண்ணா தின்னா வாரா எனத் தெரிநிலை வினையாக எதிர் மறையில் வரும் குண்டுகட்டு குறுந்தாட்டு என டுகரம் குறிப்பு வினையில் மட்டும் வரும்.

## பொதுவினை

சூ.54. முன்னிலை வியங்கோள் பெயர், வினையெச்சம்
செய்யுமென் முற்று வேறிலை உண்டிருதிணைப்
பொதுவினை, பொதுமைமுன் பின் வரும் சிறப்புப்
பெயர் வினையான் தவிந் தொரு பாற்படுமே.

**பொருள் :** முன்னிலை வினை வியங்கோள்வினை பெயரெச்ச வினை வினையெச்ச வினை செய்யும் என்னும் வாய்பாட்டு முற்று வினை வேறு இல்லை உண்டு என்னும் குறிப்பு வினைகள் இருதிணைக்கும் பொது வினைகளாம். பொது வினைகளின் பொதுத் தன்மை முன்னும் பின்னும் வரும் சிறப்புப் பெயர் சிறப்பு வினைகளான் நீங்கி ஒரு திணையின்பாற்படும். விளக்கமும் உதாரணங்களும் சிறப்புச் சூத்திர விதிகளிற் கண்டு கொள்க.

## முன்னிலை வினை

சூ.55. இஆய் ஐவிகுதி எடுப்போசை யான்வரும்
வினைப்பகுதி முன்னிலை ஒருமையும் இர் ஈர்
மின் உம் பன்மையும் உணர்த்தும் இஆய்
மின்உம் ஏவலில் எதிர்பொழுதேற்கும்.

**பொருள் :** முன்னிலை வினைக்கண் இ ஆய் ஐ என்னும் விகுதிகளும் எடுத்தலோசையால் வரும் நடவா முதலிய இருபத்திரண்டு வினைப்பகுதிகளும் முன்னிலை ஒருமையையும் இர் ஈர், மின் உம் என்னும் விகுதிகள் முன்னிலைப் பன்மையையும் உணர்த்தி வரும். இவற்றுள் இ ஆய் ஈறும் நடவா முதலிய பகுதிகளும் மின் உம் என்னும் ஈறுகளும் ஏவல் வினைக்கண் எதிர்காலம் உணர்த்தி வரும். முன்னிலை முற்றாக வருதற்கண் மூன்று காலமும் பற்றி வரும். மற்றும் இவற்றுள் மின் உம் இவை ஏவலில் மட்டுமே வரும் எனக் கொள்க.

**எ.டு :** வருதி, பெயர்தி, வினைமுற்று உண்ணுதி ! போதி! ஏவல். உண்டாய், உண்கின்றாய், உண்பாய் வினைமுற்று - காணாய் ! கேளாய் ஏவல் உண்டனை உண்கின்றனை உண்ணுவை வினைமுற்று இஃது எவல் வினை விகுதியாக வாராது. வினைப் பகுதிகள் சாத்தாவா ! நீ படி ! சாத்தாவீ (வீ = விழு) நீகொடு! கோழியே கூ ! வேடா அம்பினை ஏ! (ஏ = ஏவு) நீவை! நீ நொ!

சாத்தா சாத்தாபோ ! சாத்தா இதனை வெள ! நீஉறிஞ் ! நீ உண் ! நீ பொருந் ! நீ திரும் சாத்தாதின் ! நீ இதனைத்தேய் ! நீசெல் ! சாத்தா வாழ்! நீ கேள் நீ அஃகு பாடு எனவரும் இவற்றுள் ஏ உறிஞ் பொருந்திரும் என்பவை ஏவு உறிஞு பொருநு திருமு என உகரச்சாரியை பெற்றேவரும். உண்டனிர், உண்கின்றனிர், உண்பிர் - உண்டீர் உண்கின்றீர் உண்பீர் எனவும். காண்மின் வருமின் எனவும். நீர்கூறும், நீர்செல்லும். இங்கே வாரும். இதனைப்பாரும் எனவும் வரும் உம்மீறு பெரும்பான்மையும் உலக வழக்கில் வரும்.

உண்ணாய் வாராய் என்பன எதிர்மறைப் பொருளுணர்த்துமிடத்து ஆய் விகுதியாகும். ஆ எதிர்மறை இடைநிலையாயும் யகரமெய் ஈறாகவும் வரும் என அறிக. இந்த யகர மெய் இகரத்தின் திரிபாகும். எதிர்மறையில் ஏவற்பொருள் தாராது எதிர்கால வினைமுற்றுப் பொருள் தரும்.

## வியங்கோள் வினை

நூ.56. வியங்கோள் வினைகஇ இயஇயர் அல்ஆல்
ஈற்றொடு வாழ்த்தல் வேண்டல் வகைபடப்
படர்க்கைப் பொருளிலைம் பால்மூவிடத்துறும்

பொருள் : விரிந்துபரந்து உயர்ந்த குணத்தைக் கொண்டது (வி + அம் + கோள்) செய்கை என்னும் பொருளையுடைய வியங்கோள் வினை க இ இய இயர். அல் ஆல் என்னும் ஈறுகளோடு வாழ்த்தல் வேண்டல் வகை ஆகியபொருள் தோன்றப் படர்கைச் சொல்லாய் ஐம்பால் மூவிடப் பொருளிடத்து வரும் யாண்டுவரினும் வியங்கோள் வினைப்படர்க்கைச் சொல்லாகவே நிற்கும்.

எ.டு : யான்வாழ்க (யான் வாழ்வேனாகுக) நீவாழ்க (நீ வாழ்வாயாகுக) அவன் வாழ்க (அவன் வாழ்வானாகுக) என மூவிடத்தும் படர்க்கைப் பொருளிலேயே வந்தவாறு கண்டு கொள்க.

ககர ஈறு வாழ்க உயர்க அருள்க மகிழ்க கெடுக ஒழிக என எல்லா முதனிலை வினைகளொடும் வரும். இ இய என்பவை வாழி வாழிய என வாழ் என்னும் வினையொடு மட்டும் வரும் இயர் என்பது வாழியர், நிலீஇயர், இரீஇயர் எனச் சில வினைகளொடு வரும் அல் ஆல் என்பவை பயனில் சொல்பாராட்டுவானை மகனெனல் மக்கட்பதடி எனல் என அல் எதிர்மறையிலும் உடன்பாட்டிலும் வரும். அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல், மறைக்குங்காலை மரீஇயது ஒராஅல் (ஒருவுக!) எனவும் அவன் வாழ்க அவள் வாழ்க அவர் வாழ்க அது வாழ்க அவைவாழ்க என ஐம்பாலிலும் வரும். வாழ்க! என்பது வாழ்த்தல், அருள்க! என்பது வேண்டால், ஒழிக ! என்பது வசை வேண்டலும் வசையும் பலவாறு வரும்.

## பெயரெச்சவினை

நூ.57. வினையா லணைபெயர் இறுதிக் குறை, பெயர்
எச்சமது பாலிடப் பொதுவாய்ச் செய்த
செய்கின்ற செய்யும் எனும்வாய் பாட்டான்
வினைமுதல் செயப்படு பொருள் கருவி காலம்
நிலம் வினை ஏற்பது நீக்கம் எனும் பொருட்கு
உரியதாய் அமைந்தறு பெயர்கொடு முடிமே.

பொருள் : வினையாலணையும் பெயரீறுதியாகிய பாலிடங்காட்டும் விகுதிகள் குறைந்து நிற்பது பெயரச்சவினையாம் அது செய்த செய்கின்ற செய்யும் என்னும் வாய்பாடுகளான் அமைந்து கருத்தா செயப்படு பொருள் கருவி காலம் இடம் வினை ஏற்பது நீக்கம் என்னும் எண் பொருள்கட்கு உரியதாய்ப் ஆக்கமுற்றுப் பொருளிடம் காலம் சினை குணம் தொழில் என்னும் அறுவகைப் பெயர்களைக் கொண்டு முடியும்.

எ.டு : இவன் கற்ற மாணவன், கற்கின்ற மாணவன், கற்கும் மாணவன் என்னும் வினைமுதற் பொருளுக்கும். இது மாணவன் கற்ற நூல் கற்கின்ற நூல் கற்கும் நூல் எனச் செயப்படு பொருளுக்கும் இது வீரன் வென்ற வேல் வெல்கின்ற வேல் வெல்லும் வேல் எனக் கருவிப் பொருளுக்கும் இது குழந்தை துயின்ற நேரம் துயில்கின்ற நேரம் துயிலும் நேரம் எனக் காலப் பொருளுக்கும், இது கொற்றன் வாழ்ந்த இல்லம் வாழும் இல்லம் என இடப் பொருளுக்கும் இது கண்ணன் கண்ட காட்சி காண்கின்ற காட்சி காணும் காட்சி எனவும் இது தேவன் பெற்ற இன்பம் பெறுகின்ற இன்பம் பெறும் இன்பம் என வினைப் பொருளுக்கும் இவன் பரிசு பெற்ற பாணன், பரிசு பெறுகின்ற பரணன், பெறும் பாணன் எனவும் ஏற்றுக்கோடற் பொருளுக்கும் இது பழமுதிர்ந்த கோடு, உதிர்கின்ற கோடு உதிரும்கோடு என நீக்கப் பொருளுக்கும் உரியவாக ஆக்கம் பெற்றவாறும்.

இவை, மாணவன், நூல், வேல், பாணன், தேவன் என்னும் பொருட் பெயர்களையும் இல்லம் என்னும் இடப்பெயரையும் - நேரம் என்னும் காலப் பெயரையும் கோடு என்னும் சினைப் பெயரையும் இன்பம் என்னும் குணப்பெயரையும் காட்சி என்னும் தொழில் பெயரையும் கொண்டு முடிந்தவாறும் கண்டு கொள்க.

பெயரெச்சத்தை முடிக்கும் பெயர்ப் பயனிலைகட்கு எழுவாய் சுட்டு பெயராக வரும் எச்சச் சொல்லை முழுமையாக விரிப்பின் கற்றவனாகிய மாணவன், கற்றதாகிய நூல் எனவும் வென்றதாகிய வேல் எனவும் துயின்றதாகிய நேரம் எனவும் வாழ்ந்ததாகிய இல்லம் எனவும் கண்டதாகிய

காட்சி எனவும் பெற்றவராகிய பாணர் எனவும் உதிர்ந்ததாகிய கோடு எனவும் வினையாலணையும் பெயராக விரிதலையும் கண்டு கொள்க. பிறவிளக்கங்களைத் தொல்காப்பிய ஆராய்ச்சசிக் காண்டிகையுரையுள் கண்டு கொள்க.

## வினைஎச்ச வினை

சூ.58. வினைமுற் றிடம்பால் விகுதிகுன்றின் வினை
எச்சம் அது செய்து செய்பு செய்யாச்
செய்யூஉ செயச் செயின் செய்யிய செய்யியர்
செய்தெனச் செயற்கெனும் வாய்பாட் டானும்
மேமை ஆல்ஏல் கால்மல் வழிகடை
பின்முன் ஏனும்உம் வான்பான் பாக்கிடத்து
எனுமீற்றானும் வருமவை தெரிநிலை
முற்றொடுமுடிவுறும் செய்தென் இறுதி
இகர யகரமாத் திரிதலும் உண்டே.

பொருள் : வினைமுற்றுச் சொல் இடமும் பாலும் காட்டும் விகுதி குறைந்தவழி அது வினைஎச்சச் சொல்லாகும் அது செய்து செய்பு செய்யாச் செய்யூஉ செய, செயின் செய்யிய செய்யியர் செய்தென, செயற்கு என்னும் வாய்ப்பாட்டு வினையானும் மே, மை, ஆல், ஏல், கால், மல், வழி, கடை, பின்முன் ஏனும் உம், வான், பான், பாக்கு, இடத்து என்னும் ஈற்றிடைச் சொற்களானும் வரும். அவை தெரிநிலை வினைமுற்றுக்களொடு முடிவுறும். அவற்றுள் செய்து என்னும் வாய்பாட்டின் இறுதி இகரமாகவும் யகர ஒற்றாகவும் திரிதலும் உண்டு. இகரத்திரிபு அளபெடுத்தும் வரும்.

இவற்றுள் செய்து செய்பு செய்யா, செய்யூ என்பனவும் வான்பான் பாக்கு என்னும் ஈறுகளும் தம் வினைமுதல் வினைகொண்டு முடியும் ஏனையவை தன் வினைமுதல் வினை கொண்டும் பிறவினை முதல் கொண்டும் முடியும். மற்று செய்து செய்தென என்னும் இரண்டும் இடைநிலையானும் மற்றவை இறுதிகளானும் காலங்காட்டும்.

எ.டு : செய்து : உண்டு வந்தான், தேடிச் சென்றான் போய்ப் பார்த்தான் தழீஇக் கொண்டான்.

செய்பு : உண்ணுபுவந்தான்

செய்யா - உண்ணா வந்தான்

செய்யூ : காணூஉ வந்தான்

*செய* : காணவந்தன், கோழி கூவப்பொழுது புலர்ந்தது - நெல்வினைய மழை பெய்தது. நெல்வினைய மழை பெய்யும். இவை எதிர்காலம் காட்டின. மழை பெய்ய நெல் விளைந்தது இஃது இறந்த காலம் காட்டிற்று. ஞாயிறுபட வந்தான் இது. நிகழ்காலங் காட்டிற்று. இஃது இறந்த காலத்தில் காரணப் பொருட்டாயும் எதிர் காலத்தில் காரியப் பொருட்டாயும் நிகழ் காலத்தில் இது நிகழா நிற்க இது நிகழ்ந்தது என்னும் பொருட்டாயும் வரும். இது தன் கருத்தா பிற கருத்தா இரண்டினும் முடியும்.

*செயின்:* யான்காணின் மகிழ்வேன் அவன் காணின் மகிழும் ,,

*செய்யிய:* காணிய வந்தேன் - உண்ணிய வந்தான் ,,

*செய்யியர்:* யான்காணியர் வந்தேன் - அவன் உண்ணியர் வந்தான்

*செய்தென:* உண்டெனப் பசி தீர்ந்தது மழை பெய்தென வெப்பு நீங்கிற்று,,

*செயற்கு* : உணற்கு வந்தேன் உணற்கு வந்தான் உண்ணுதற்காக வந்தேன் வந்தான் என்பது பொருள். நான்கன் உருபேற்ற தொழிற்பெயராயின் உணவு தன்னை உண்ணுதற்காக வந்தேன் என்பது பொருள். வினையெச்சமாயின் காரணப் பொருளிலும் உருபேற்ற தொழிற் பெயராயின் கோடற் பொருளிலும் வரும்.

*மே:* காணாமே நின்றான் - காணாமே செல்வேன்

*மை:* வராமை நின்றான் - கேளாமை சென்றேன்

*ஆல்:* உண்டாற்பசி தீரும் - உண்டாற் பணி செய்வேன்

*ஏல்:* வருமேற் காணலாம் - வருமேற்காண்பேன்

*கால்:* வந்தக்கால் செய்வான் - வந்தக்கால் செய்வேன்

*மல்:* காணாமற் சென்றான் - உண்ணாமல் நின்றேன்

*வழி:* உண்டவழிப் பசி தீரும் -உண்டவழிப் பணி செய்வேன்

*கடை:* தொடர்கூரத்துவ்வாமை வந்தக்கடை

*பின்:* கற்றபின் நிற்க அதற்குத் தக (கற்றபின் = கற்றால் என்பது பொருள்)

*முன்:* சோறு தின்னா முன் வந்தான் (தின்று வந்தான் என்பது பொருள்)

*ஏனும்:* எள்ளுமேனும் வருவான் உவக்குமேனும் செல்லேன்

உம்: காண்டலும் இதுவே கூறும்.

வான் :ஓதுவான் வந்தான் - வந்தேன்

பான் : காண்பான் வந்தான் - வந்தேன்

பாக்கு : தருபாக்குச் சென்றான்

இடத்து : உண்டவிடத்துப்பசி தீரும்

இவற்றுள் கால் வழி இடத்து பின் முன் மேல் கடை என்பவை இடப்பெயர் காலப்பெயர்களில் வருதலையும் வினையெச்ச ஈறாக வருதலையும் - வான் பான் உம் இடம் என்பவை பாலிடம் காட்டும் விகுதியாக வருதலையும் வினைஎச்ச ஈறாக வருதலையும் தொடர் மொழிப் பொருளை நோக்கி உணர்தல் வேண்டும். பிறவிளக்கங்களைத் தொல்காப்பிய ஆராய்ச்சிக் காண்டிகை உரையுள் கண்டு கொள்க.

## சினைவினை

**நூ.59. *சினைவினை முதலொடு முடியினும் சிதைவிலை.***

**பொருள் :** தன் கருத்தாவின் வினை கொண்டே முடியும் எனப்பெற்ற செய்து செய்பு முதலிய எச்சங்கள் சினைவினையாயின் சினையொடு முடிதலேயன்றித் தம்முதல் வினையொடு முடியினும் வழுவாகாது.

**எ.டு :** காலிற்று வீழ்ந்தது - காலிற்று வீழ்ந்தான், காலிறுபு வீழ்ந்தது காலிறுபு வீழ்ந்தான் - வயிறு உண்பான் பசித்தது வயிறு உண்பான் பசித்தான்.

## செய்யும் என்னும் வாய்பாட்டு முற்றுவினை

**நூ.60. *செய்யுமென் முற்றுப் பல்லோர் படர்க்கை***
***தன்மை முன் னிலைதவிர் நாற்பாலிலும் வரும்.***

**பொருள் :** செய்யும் என்னும் வாய்பாட்டு முற்றுவினைச் சொல் உயர்திணைப்பலர் பால், தன்மை முன்னிலைப் பெயர் தவிர்ந்து உயர்திணை ஆணொருமை, பெண்ணொருமை அஃறிணை ஒருமை பன்மை என்னும் நான்கு பாலிலும் வரும் (எச்சம் ஐம்பால் மூவிடத்தும் வரும்)

**எ.டு :** அவன் உண்ணும் அவள் உண்ணும் அது உண்ணும் அவை உண்ணும் எனவரும். செய்யுட்கண் ஒரோவழி இடையே உள்ள உயிரும் உயிர்மெய்யும் கெட்டும் வரும் - மருளும் - மருண்ம், போலும் போன்ம் கலுழும் கலுழ்ம் எனவும் ஆம், போம் எனவும் வரும்.

## வேறு இல்லை உண்டு

சூ.61. வேறிலை உண் டைம்பால் மூவிடத்தும் வரும்.

பொருள் : வேறு இல்லை உண்டு என்னும் குறிப்பு வினைமுற்றுக்கள் ஐம்பால் மூவிடத்தினும் வரும்.

எ.டு : அவன் வேறு அவள் வேறு அவர் வேறு அது வேறு அவை வேறு யான், வேறு நீவேறு என வரும். இல்லை. உண்டு என்பவற்றையும் இவ்வறே கூட்டிக் கண்டு கொள்க.

## வினை முற்று முடியும் இயல்பு

சூ.62. முற்றுவினை அறுவகைப் பெயரொடு முடியும்
வினையொடு முடியினது முற்றெச்சமெனப்படும்.

பொருள் : இருவகை வினைமுற்றுக்களும் பொருளாதி அறுவகைப் பெயர்களை முடிபாக கொண்டு நிற்கும். வினையொடு முடியின் அவ்விடத்து அஃது முற்றெச்சம் எனப்படும்.

எ.டு : தெரிநிலை வினைமுற்றுக்கள், நடந்தான் சாத்தன், செழித்தது மதுரை, வந்தது இளவேனில் வலர்ந்தது கொம்பு, உயர்ந்தது உண்மை விரைந்தது நடை எனவும் தொழுதனன் வந்தான் என்னுமிடத்துக் தொழுதனன் என்னும் முற்றுவினை தொழுது வந்தான் எனச் செய்து என்னும் பொருள்படத்திரியும், தொழுதனனாய் வந்தான் என்பது பொருள்.

குறிப்பு வினைமுற்றுக்கள்: நல்லன் சாத்தன், ஊரது கோயில், வேனிலது பருவம், களிறது கை, பெரிது வாய்மை, அழகிது நடை, குறிப்பு வினைமுற்றுக்கள் எச்சமாகத் திரியா மற்று உண்டான் உறங்கினான் ஒழித்தான் பித்தானான் என வினையாலணையும் பெயர்களும் உறங்கினான் - உண்டவன், உண்டான் என முடிபாக வரும்.

## வினைகளின் வகைப்பாடு

சூ.63. தன்வினை பிறவினை விதிவினை மறைவினை
செய்வினை செயப்பாட்டு வினைசெயப் படுபொருள்
குன்றிய வினைகுன்றாவினை அகவினை
புறவினை எனவினை பதின்திறப்படவரும்.

பொருள் : வினைச் சொற்கள் தன்வினை முதலாகப் பத்து வகையாக வரும். விளக்கம் சிறப்புச் சூத்திரங்களிற் கண்டு கொள்க.

## தன் வினையும் பிறவினையும்

நூ.64. வினைமுதற்கே தொழில் இயைவது தன்வினை
அதனை மற்றொன்று கொண்டியல் வது பிறவினை
தன்வினைச் சொல்லொடு விப்பி இணைந்தும்
மெல்லொற்று வல்லொற்றாகியும் சொல் நிலை
திரிந்தும் ஒற்றிரட்டியும் பொருள் நிலை மாறியும்
பிறவினைச் சொற்கள் ஆக்கம் பெறுமே.

பொருள் : ஒரு வினைமுதலின் வினைப்பயனிலை அவ் வினைமுதற்கே உரியதாக இயைந்து நிற்பது தன்வினை. ஒரு தொழிலின் பயனிலை பிறிதொரு பொருளுக்கு உரியதாக வருவது பிறவினை. தன்வினைச் சொல்லொடு வி.பி. என்னும் விகுதிகள் இணைந்தும் அச்சொல்லின் மெல்லொற்று வல்லொற்றாகத் திரிந்தும், சொல் நிலை திரிந்தும் ஒற்று இரட்டியும் பொருள்நிலை திரிந்தும் பிறவினைச் சொற்கள் ஆக்கம் பெறும்.

| எ.டு : | தன்வினை | பிறவினை |
|---|---|---|
| 1. | கண்ணன் உண்டான் | கண்ணன் உண்ணுவித்தான் |
| | கண்ணன் உண்டான் | கண்ணன் உண்பித்தான் |
| 2. | தான் ஊரொடு சேர்ந்தான் | அவனை ஊரொடு சேர்த்தான் |
| 3. | தான் நடந்தான் | அவனை நடத்தினான் |
| | தான் நின்றான் | அவனை நிறுத்தினான் |
| 4. | தான் ஓடினான் | அவனை ஓட்டினான் |
| | தான் மாறினான் | அவனை மாற்றினான் |
| 5. | தான் வெளுத்தான் | துணியை வெளுத்தான் - எனவரும். |

## விதிவினையும் மறைவினையும்

நூ.65. யாதுமொரு காலத் தொடு தொழில் நிகழ்தல்
விதிவினை, தொழில் நிகழாமையும் தொழிலை
மறுத்தலும் மறைவினை, விதிவினை யிடையீற்று
ஆகாரம் வரினும் இறுதியில் அல்இல்
சேரினும் மறைவினை ஆகுதல் மரபே.

பொருள் : யாதானும் ஒரு காலத்தொடு தொழில் நிகழ்தல் விதிவினை (உடன்பாட்டு வினை) தொழில் நிகழாமையும் தொழிலை மறுத்தலும்

மறைவினை (எதிர்மறைவினை) விதிவினைச் சொற்களின் இடையிலும் ஈற்றிலும் ஆ என்னும் இடைச்சொல் இடைநிலையாகச் சொல்லின் இடையே வரினும் இறுதியில் விகுதியாக வரினும் அல் இல் என்பவை சொல்லின் ஈற்றில் வரினும் மறைவினையாதல் மரபாகும்.

விதிவினை மறைவினை

எ.டு. வந்தான், வருகிறான், வருவான். வாரான் - (வாராள் - வாரார்) தன்மை வினைக்கண் ஆகாரம் ஏகாரமாகத் திரிந்து வாரேன், வாரேம் எனவரும் முன்னிலைப் பன்மையில் ஆகாரம் ஈகாரமாகத் திரிந்து வாரீர் கேளீர் எனவரும்.

உண்டன உண்கின்றன உண்ணும் - உண்ணா - பன்மை

உண்டது - உண்கின்றது உண்ணும் - உண்ணாது - ஒருமை

ஆ இடைநிலை

மறை: உண்ணலன் - உண்டானலன், உண்பானலன் - உண்ணலன் காண்கிலன் காண்கின்றிலன், காண்பானிலன் - காண்பாலளன் காண்பாரலர் கண்டிலது காண்கிலது, கண்டில - காண்கில எனவரும்.

உலக வழக்கில் மாட்டுதல் என்னும் வினை. துணை வினையாக உண்ணமாட்டான் உண்ணமாட்டாள் உண்ணமாட்டார் உண்ணமாட்டாது உண்ண மாட்டா எனவரும்.

விதிவினையாகவும் மறை வினையாகவும் வரும் குறிப்பு வினைமுற்றுக்கள் உண்டு உளது உள என்பவை உடன்பாட்டிலும் இன்று இலது இல்லை. இல அன்று அல்ல அல என்பவை எதிர்மறையிலும் வரும்.

## செய்வினையும் செயப்பாட்டுவினையும்

நூ.66. வினைமுத லியற்றிய தொழில்நிலை செய்வினை
செயப்படு பொருள் வினை முதலாய், எழுவாய்
கருவிநிலை யுறுதல் செயப்பாட்டு வினையாம்
அவ்வழிப் பயனிலை செய்பொருள் நிலைத்தாம்
செய்வினைச் சொல்லொடு படுபெறு உண் இவை
இணைந்து வரின்செயப் பாட்டு வினை பிறக்கும்.

பொருள் : ஒருவினை முதல் தான் இயற்றிய தொழில் நிலை செய்வினையாம், செய் வினைத் தொடரின்கண் உள்ள செயப்படுபொருள் வினை முதலாகவும் எழுவாய் கருவி நிலை எய்தலும் செயப்பாட்டு வினையாம். செயப்பாட்டு வினைக் கண் பயனிலைச் சொல் செயப்படுபொருள் நிலை

எய்தும். செய்வினைச் சொல்லொடு படுபெறு உண் என்னும் வினைப் பகுதிகள் இணைந்து வரின் செயப்பாட்டு வினை வரும்.

| செய்வினை | செயப்பாட்டுவினை |
|---|---|
| எ.டு : தச்சன் கோயிலைக் கட்டினான் | - கோயில் தச்சனால் கட்டப்பட்டது. |
| பசுபுல்லை மேந்தது | - புல் பசுவால் மேயப்பெற்றது. |
| காவலர் கள்வனைக் கட்டினார் | - கள்வன் காவலராற் கட்டுண்டான் என வரும். |

## செயப்படுபொருள் குன்றியவினை - செயப்படு பொருள் குன்றாவினை

நூ.67. *செய்வினை சென்றும் பொருள்வெளிப் படையாத்*
*திகழ்வது செயப்படு பொருள்குன் றாவினை*
*பொருள் விளை வில்லன குன்றிய வினையாம்*
*செய்தல் புரிதல் இயற்றல் எனும் பொது*
*வினையொடுவரினது வேசெயப் படுபொருள்*
*ஆம்பிற வினைசெயப் படுபொருள் குன்றா.*

*பொருள் :* ஒருவினை முதல் செய்யும் வினை சென்று பொருந்தும் பொருள் வெளிப்படையாக அமைவது செயப்படுபொருள் குன்றாவினையாம். சென்று பொருந்தும் பொருள் விளைவில்லாத வினை செயப்படுபொருள் குன்றிய வினையாம். செயப்படு பொருள் குன்றிய வினை செய்தல் புரிதல் இயற்றல் என்னும் பொது வினையொடுவரின் அது செயப்படுபொருள் நீர்மைத் தாம். பிறவினைக்கண் செயப்படு பொருள்கள் குன்றிவாரா.

வாழ்ந்தான், உறங்கினான் நடந்தான் எனவரும் வினைகளை நோக்கி எதனை என வினவின் அவ்வினைகள் சென்று நிற்கும் செயப்படு பொருள் யாதுமில்லை இவற்றைத் தொழிற் பெயர் நிலையில் வைத்து வாழ்தலைச் செய்தான் உறங்குதலைப் புரிந்தான் நடத்தலை இயற்றினான் எனக் கூறுமிடத்து வாழ்தல் முதலிய தொழில்களே செயப்படுபொருள் நீர்மையவாக நிற்றலைக் காணலாம். உண்பித்தான், நடப்பித்தான் என அவ்வினைகளே செயப்படு பொருளாக நிற்கும்.

## அகவினை புறவினை

நூ.68. அறிவான் உணர்வன அகவினை பிற
பொறிப்புல னாவன புறவினையாகும்

பொருள் : அருவமாக அமைந்து மன அறிவான் உண
மற்றைய ஐம்பொறிகட்குப் புலனாவன புறவினையாகும.

எ.டு : அகவினை: நூற்பொருள் உணர்ந்தான் - உண்மையை அறிந்தான். இறைவன் அருளினான் தத்துவங்களைச் சிந்தித்தான் எனவரும்.

புறவினை: மழையில் நனைந்தான், பனியில் மெலிந்தான் தேனைச் சுவைத்தான், கதிரைக்கண்டான் மதியைப் பார்த்தான் மலரை நுகர்ந்தான், கனியை மோந்தான், இசையைக் கேட்டான் பாடலைச் செவிமடுத்தான் என வருவனவும், உண்டான் சென்றான் உறங்கினான் வென்றான் தோற்றான், பசித்தான் மயங்கினான் எனக் காட்சியானும் மெய்ப்பாடுகளானும் உணரத்தக்க வினைகள் யாவும் புறவினையுள் அடங்கும். மனத்தால் மட்டும் உணரப்படுவனவே அகவினை எனப்படும்.

## 5. இடைச்சொல் இயல்

### இடைச் சொற்களின் பொதுவிலக்கணம்

நூ.69. இடைச்சொல் பெயர்வினைக் குறுப்பாய்ப் பாலிடம்
காலம் சுட்டும் விகுதியொடு இடைநிலை
சாரியை வேற்றுமை ஒப்புருபு அசைநிலை
இசைநிறை யாகவும் தனிப்பொருள் சுட்டியும்
பெயர்வினைப் போலி யாகவும் நடைபெறும்.

பொருள் : இடைச் சொற்கள் என்பவை பெயர்ச் சொல் வினைச் சொற்களுக்கு உறுப்பாய்ப் பாலிடம் காலம் காட்டும் விகுதியாகவும் இடை நிலையாகவும் சாரியையாகவும் வேற்றுமை உருபாகவும் உவம உருபாகவும் அசை நிலையாகவும் இசை நிறையாகவும் பெயர்ச் சொல் வினைச்சொற்களைச் சார்ந்தும் தனிப்பொருள் சுட்டியும் பெயர்ப் போலியாகவும் வினைப் போலியாகவும் நடைபெறும்.

இவற்றுள் விகுதி இடைநிலை சாரியை பற்றிய விளக்கம் பதவியல் புணரியலிற் கூறப்பெற்றன வேற்றுமை உருபுகள் வேற்றுமையியலிற் கூறப்பெற்றன. உவம உருபுகள் போல, புரைய, அன்ன, ஏய்ப்ப, ஒப்ப, உறழ என்ன, மான, ஒன்ற ஒடுங்க ஒட்ட ஆங்க, என்ற வியப்ப, என்ன, விழைய, விறப்ப, நிகர்ப்ப, கள்ள, கடுப்ப, காய்ப்ப, மதிப்ப, தகைய, மருள மாற்ற, மறுப்ப, புல்ல, பொருவ, பொற்ப, வெல்ல, வீழ நாடநளிய, நடுங்க நந்த, ஒட முதலியவாக வரும்.

இவை புலி போலப்பாய்ந்தான் எனச் செயவெனச்சப் பொருளிலும் புலிபோன்ற மறவன் எனச் செய்த என்னும் பெயரெச்சப் பொருளிலும், மழை போலும் வள்ளல் எனச் செய்யும் என்னும் வாய்பாட்டுப் பொருளிலும் வரும்.

பிற இடைச்சொற்கள் பற்றி இவ்வியலுள் மேற்கூறப்பெறும்.

## அசைநிலை - இசைநிறை இடைச்சொற்கள்

நூ.70. மியாஇக மோமதி இகும் சின்யாகா
பிறபிறக்கு அரோபோ மாதிருந்திட்டு ஏ
அந்தில் ஆங்க அத்தை இத்தைகொல்
வாழிய தெய்ய மாள ஈயாழ
ஆர் ஆல் கரை ஒடு ஒரும் தாம் தான்
அன்று ஆம் போலும் அம்ம அ எனவரும்
இன்னன அசைச்சொல் ஆகும் அவற்றுள்
ஏற்பன இசைநிறை யாகவும் வருமே.

**பொருள்:** மியா முதலாக அ ஈறாகக் கூறப்பெற்ற முப்பத்தொன்பதும் அசைநிலையாக வரும் அவற்றுள் ஏற்பன இசைநிறையாக வரும்.

**அசைநிலை** : செய்யுட்கண் சீர் நிரப்பவருவன அசைநிலை எனப்படும். முன்னிலை முதலாய பொருள் பற்றி வருவன இசைநிறையாம்.

எ.டு : **மியா** : கேண்மியா கொற்றா (இ)

**இக** : தண்டுறை ஊர காணிக (இ)

**மோ** : காமஞ்செப்பாது கண்டதுமொழிமோ (அ)

**இசின்** : கண்டிசின்பெரும (இ) யா : யா பன்னிருவர் மாணவர் அகத்தியனார்க்கு.

கா. இவளிவண்காண்டிகா (அ) பிற: ஆயனை அல்ல பிற (இ)

**பிறக்கு** : பிறக்கிதனுட் செல்லான் அருந்தவப்பட்டான் (அ)

**அரோ** : இருங்குயிலாலும் அரோ (அ) போ: பிரியின்வாழாதென்போ

**மாது** : விளிந்தன்று மாதவர்த் தெளிந்த வென் நெஞ்சே (அ)

**இருந்து** : கனவென எழுந்திருந்தேன் (அ)

**இட்டு** : நெஞ்சம் பிளந்திட்டு நின்றான் (அ)

ஏ : காடிறந்தோரே (அ) அந்தில்: அந்திற் கழலினன் கச்சினன் (அ)

ஆங்க : ஆங்கத் திறனல்லயாமொழிய (அ)

அத்தை : செல்லியர் அத்தை நின்வெகுளி (அ)

இத்தை : நீயொன்று பாடித்தை (அ)

கொல் : வருவான் கொல் சேர்ப்பன் (இ - அ)

வாழிய : காணியவாமா வாழியமலைச் சாரல் (அ)

தெய்ய : வருவேன் தெய்ய நின்னொடு பெயர்ந்தே (அ)

மாள : சிறிது தவிர்ந்தீகமாளநின் பரிசிலர் உய்ம்மார் (அ)

ஈ : சென்றீ பெரும நிற்றகைக்குநர் யாரே (அ)

யாழ : செய்வினை மருங்கிற் செலவயர்ந்தியாழ (அ)

ஆர் : எல்லா உயிரொடும் செல்லுமார் முதலே (அ)

ஆல் : கண்டாயால் எம்மே (அ)

குரை : பல்குரைத் துன்பங்கள் சென்றுபடும் (இ)

ஒடு : விதைக்குறுவட்டிற் போதொடு பொதுள (அ)

ஒரும் : செயற்பாலதோரும் அறனே (அ)

தாம் : அவர் தாம் வந்தார் (அ)

தான் : அவன்றான் வந்தான் (அ)

அன்று : பிரமாபுரமேவிய பெம்மான் இவனன்றே (இ)

ஆம் : புற்றாஞ்சோறு (அ)

போலும் : மங்கலமென்பதோர் ஊர் உண்டு போலும் (அ)

அம்ம : வருகதில் அம்மயானே (அ)

அ : ஆனநெய்தெளித்து நானநீவி (அ)

இன்னன என்றமையால் கின்று வாழ் வான் ஆசைப் பட்டிருக்கின்றேன் (ஆசைப்பட்டேன் என்பது பொருள் கின்று அசை) நின்று; அழலடைந்த மன்றத் தரந்தையராய் நின்றார் நிழலடைந்தே நின்னை என்றேத்த (அசை) எனவரும்.

## தனிப்பொருள் தரும் இடைச்சொற்கள்

நூ.71. மன்கொன் தில்கொல் மற்று எற்று மற்றைஆ
ஏஓஉம் எனஎன்று ஒடுதொறு மன்றகில்
இன்னன தனிப்பொருள் தரும், சில திரியும்

பொருள்: மன் முதல் இல் ஈறாய பதினேழும் இவை போல்வன பிறவும் பெயர்ச் சொல் வினைச் சொற்களைச் சார்ந்து தனிப்பொருள் தரும். இவற்றுள் சில இயல்பாயும் வடிவு திரிந்தும் வரும் என என்று என்பவை எனா, என்றா என நீண்டு வருவழி எண்ணுப் பொருளில் மட்டும் வரும்.

## மன் இடைச் சொல்

நூ.72. அவற்றுள்,
மன்னே ஒழியிசை ஆக்கம் நிலை பேறு
கழிவசை நிலைமிகை எனும் அறு பொருள்தரும்

பொருள்: மன் என்னும் இடைச்சொல், ஒழியிசை, ஆக்கம், நிலை பேறு, கழிவு, அசைநிலை மிகை என்னும் ஆறுபொருள்களில் வரும்.

எ.டு : ஒழியிசை : கூரியதோர் வாள்மன் (இப்பொழுது மழுங்கியுள்ளது)

ஆக்கம் : சாத்தன் நெடியன்மன் (நெடியனாயினான்)

நிலைபேறு : மன்னிய பெருமநிலமிசையானே (நிலைத்து வாழ்வாயாக)

கழிவு : சிறியகள் பெறினே எமக் கீயும் மன்னே (இப்பொழுது தருவாரில்லை)

அசைநிலை : அதுமன் கொண்கன்தேரே (பொருளின்றி அசையாக உளது)

மிகை : எந்தை எமக்கருளும்மன் (மிகுதியாகத் தருவான்)

## கொன் இடைச்சொல்

நூ.73. கொன்எனும் இடைச்சொல் காலம் அச்சம்
பயனின்மை பெருமை எனும் நாற் பொருள் தரும்

பொருள் : கொன் என்னும் இடைச்சொல் உரியகாலம், அச்சம், பயனின்மை, பெருமை என்னும் நான்கு பொருளில் வரும்.

எ.டு : கொன்வரல் வாடை (உரிய காலம் உணர்த்திற்று)

கொன்முனை இரவூர் போல (அச்சந்தரும் போர்களத்து இரவு ஊர் போல)

கொன்னே கழிந்தன்றிளமை (இளமை பயனின்றிக் கழிந்தது)

கொன்னூர்துஞ்சினும் யாம் துஞ்சலமே (பெருமைபொருந்திய ஊர்)

## தில் - இடைச்சொல்

சூ.74. தில்லெனும் இடைச்சொல் விழைவே காலம்
ஒழியிசை எனும்முப் பொருள்பட வருமே.

பொருள் : வெளிப்படை விழைவு = விருப்பம்

எ.டு : பெருகதில் அம்மயானே (விழைவு)
பெற்றாங்கறிகதில்லம்மவிவ்வூரே (காலம்)
வருகதில் அம்ம எம் சேரி சேர. ஒழியிசை = (வந்தால் தலைவியைப் பெறலாம்)

## கொல்

சூ.75. கொல்லே ஐயம் அசைநிலையும்மாம்

பொருள் : கொல் என்னும் இடைச் சொல் ஐயப்பொருள் தரும். அசைநிலையாகவும் வரும்.

எ.டு : ஆண்டுத்தோன்றும் உரு குற்றி கொல் மகன் கொல் இது ஐயம். பொருள்வயிற் பிரிந்தநம் காதலர் வருவர் கொல் வயங்கிழாய். கொல் - அசை.

## மற்று

சூ.76. மற்று வினைமாற்றசை நிலை பிறிதே

பொருள் : மற்று என்னும் இடைச்சொல் வினைமாற்றாகவும், அசைநிலையாகவும் பிறிது என்னும் பொருளிலும் வரும்.

எ.டு : மற்றறிவாம் நல்வினை யாம் இளையம் என்னாது அறஞ்செய்க. இது இப்பொழுதே செய்க என வினையை மாற்றுதலின் வினைமாற்று. மற்றடிகள் கண்டருளிச் செய்ய மலரடிக் கீழ் - இது அசைநிலை ஊழிற்

பெருவலியாவுள மற்றொன்று சூழினும் தான் முந்துறும் - இதுபிறிது என்னும் பொருளில் அமைந்தது.

## எற்று

**நூ.77. எற்றே கழிந்த செயல் நிலையுணர்த்தும்**

**பொருள் :** எற்று என்னும் இடைச்சொல் ஒரு செயல் கழிந்த நிலையை உணர்த்தும்.

எ.டு : எற்றென் எழில்நலம். இப்பொழுது என் இளமையழகு குன்றி விட்டது என்பது பொருள்.

## மற்றை

**நூ.78. மற்றை எனும்சொல் சொற்றதற்கு இனமாம்**

**பொருள் : மற்றை என்னும் இடைச்சொல் கூறப்பெற்றதொரு பொருளுக்கினமான பொருளைச் சுட்டிவரும்.**

எ.டு : இத்தொடியை அணிக என்றவழி அது சிறிதாக உள்ளமை நோக்கி மற்றையதைத் தருக என்னுமிடத்து அது இனமானதொரு தொடியை உணர்த்துமாறறிக.

இவ்விடைச்சொல் மற்றையவன் மற்றையவள், மற்றையவர், மற்றையது மற்றையவை எனப் பாலுணர்த்தும் ஈறுகளோடு கூடியே வரும்.

## ஏ இடைச்சொல்

**நூ.79. தேற்றம் வினாஎண் பிரிநிலை இசைநிறை**
**ஈற்றசை இரக்கமென் றேழ்பொருள் ஏதரும்.**

**பொருள் :** 'ஏ' என்னும் இடைச்சொல் தேற்றம் (தெளிவு) வினா, எண்ணிக்கை பிரிநிலை, இசைநிறை ஈற்றசை இரக்கம் என்னும் ஏழுபொருள்களில் வரும்.

**எ.டு : இதனை அவனே செய்தான் (தேற்றம்) 2. நீயே இவ்வாறு செய்தாய்? (வினா) நிலனே நீரே தீயே வளியே வானே எனப்பூதங்கள் ஐந்து (எண்) அவருள் இவனே நெடியன் (பிரிநிலை) எஏ இவளொருத்தி பேடியோ என்றான் (அசைநிலை) கடல் போல் தோன்றல காடிறந்தோரே (ஈற்றசை) என்பிலதனை வெயில் போலக்களையுமே அன்பிலதனையறம் இரக்கம் சிறுபான்மை யானே**

கொள்வேன் என்புழிக் கொள்ளேன் எனப் பொருள் தருமிடத்து எதிர்மறையாகவும் வரும்.

## ஆ. இடைச்சொல்

சூ.80. ஆவியப் பாக்கம் வினா மறைப்பொருள் தரும்

பொருள் : ஆ என்னும் இடைச்சொல் வியப்பு, ஆக்கம், வினா, எதிர்மறை ஆகிய பொருள் வரும்.

எ.டு : ஆஅ என்னே அழகு வியப்பு அஆ இழந்தான் என்று எண்ணப்படும் இரக்கம் சாத்தனா வருவது? (வினா) அவனா செய்வான் (செய்யான் என்னும் பொருளில் எதிர்மறை)

## ஓ இடைச்சொல்

சூ.81. பிரிநிலை ஒழியிசை வினாச் சிறப் பெதிர்மறை
தெரிநிலை கழிவசை எனும் பொருள் ஓ தரும்.

பொருள் : ஓகார இடைச் சொல் பிரிநிலை, ஒழியிசை வினா சிறப்பு, எதிர்மறை தெரிநிலை, கழிந்த நிலை, அசை என எண் பொருள் தரும்.

எ.டு : பிரிநிலை, அவனோ கொண்டான் (பிறர்தாம் கொண்டனர் என்பது பொருள்)

ஒழியிசை : தனக்கோ பெற்றான் (பிறர்க்கு அளிப்பதற்கே பெற்றான்)

வினா : அவ்வுரு கொற்றனோ மரமோ?

சிறப்பு உயர்வு சிறப்பு - இழிவு சிறப்பு என இருவகைப்படும்.
ஓஒ பெரியர் உயர்வு சிறப்பு ஓஒ கொடியன் இழிவு சிறப்பு.

தெரிநிலை : இவன் கண்ணனோ முருகனோ தேவனோ யார் எனக் காண்போம்.

எதிர்மறை : அவனோ கொள்வான் (கொள்ளான்).

கழிவிரக்கம் : இவருக்கு உண்மை தெரியாதோ, பாவம்

அசைநிலை : அவனோ இன்னும் வரவில்லை என் செய்வது.

## உம் - இடைச்சொல்

சூ.82. எச்சம் எண்சிறப்பெதிர் மறைமுற்றையம்
தெரிநிலை ஆக்கமென்று உம்மை எண்பொருள் தரும்

பொருள் : உம்மை இடைச்சொல் எச்சம், எண், சிறப்பு, எதிர்மறை, முற்று ஐயம், தெரிநிலை, ஆக்கம் என்னும் எட்டுப்பொருள் தரும். இவற்றுள் எச்சம். இறந்தது தழுவிய எச்சம், எதிரது தழுவும் எச்சமென இருவகைப்படும்.

எ.டு : இறந்தது தழுவிய எச்சம், சாத்தனும் வந்தான் (முன்பே கொற்றன் வந்தமை காட்டிற்று) எதிரது தழுவும் எச்சம். சாத்தனும் வந்தான் என்பது இனிக் கொற்றன் வருவான் எனப் பொருள்தரின் எதிரது தழுவியது. அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள் ஒன்றை ஒன்று தழுவிப் பொதுப்பட வந்தது.

எண் : நிலனும் நீரும் தீயும் வளியும் வானும் எனப்பூதம் ஐந்து எனவரும்.

உயர்வு சிறப்பு : குறவரும் மருளும் குன்று - இழிவு சிறப்பு புலையனும் விரும்பாப்புன் புலால்யாக்கை எனவரும்.

எதிர்மறை : சாத்தன் வருதற்கும் உரியன் (வாராமைக்கம் உரியன்)

முற்று : புலன்களைந்தையும் வென்றான். ஐயம் அவனிடம் சென்றால் பத்தாயினும் பதினைந்தாயினும் தருவான். தெரிநிலை - இது நரியுமன்று நாயுமன்று ஓனாயாகலாம் சாத்தன் நெடியனுமாயினான் (வலியனுமாயினாள் என்னுமிடத்து ஆக்கம்)

## என - என்று - இடைச்சொற்கள்

சூ.83. வினைபெயர் பண்பெண் குறிப்பு இசை ஆறினும்
எனவென் சொல்வரும் என்றும் அற்றே.

பொருள் : என என்று என்னும் இடைச் சொற்கள் வினைப்பொருள் பெயர்ப்பொருள் பண்பு எண் குறிப்பு இசை என்றும் ஆறுபொருள்களில் வரும்.

எ.டு : கொள் எனக் கொடுத்தான் - (எனச் சொல்லிக் கொடுத்தான்)

ஊர் எனப்படுவது உறையூர் - என்று சிறப்பித்துக் கூறப்படுவது ஊர் வெள்ளெனவெளுத்தது (பண்பு)

நிலவெனைத் தீயென வளியென நீரென வாளெனப்பூதம் ஐந்து. எண். பொள்ளென ஆங்கே புறம் வேரார் (குறிப்பு)

பொம் என வண்டலம்பும் புரிகுழல் (இசை) என்று என்பதையும் இவ்வாறே அமைத்துக்கண்டு கொள்க.

இவ்விடைச் சொற்கள் எனா, என்றா என இறுதி நீண்டும் வரும் வருமிடத்து எண்ணுப் பொருளில் மட்டும் வரும் என என்று என்பன ஓரிடத்து நின்று ஏனையவற்றிலும் சேரும்.

## தொகை பெற்றும் பெறாதும் வரும் எண்ணிடைச்சொற்கள்

சூ.84. என்றா எனாப்பெயர்ச் செவ்வெண் ஏஇவை
தொகை பெறும் பிறஅஃதின்றியும் இயலும்

பொருள் : என்றா எனா பெயர்ச்செவ்வெண் ஏ இவை எண்ணுப் பொருளில் வருமிடத்து இறுதியில் தொகை பெற்றே வரும். பிற உம்மை, என்று, என, ஒடு என்பவை பெற்றும் பெறாதும் வரும்.

எ.டு : இயலென்றா இசையென்றா நாடகமென்றா தமிழ்மூன்று சாத்தனெனா கொற்றனெனா இருவரும் வந்தனர். சாத்தன் பொன்னன் இருவரும் வந்தனர். புலியே கயலேவில்லே கொடி மூன்று எனத் தொகை பெற்று வந்தவாறு கண்டுகொள்க. உம்மை, சாத்தனும் கொற்றனும் ஆகிய இருவரும் வந்தனர் - சாத்தனும் கொற்றனும் வந்தனர் எனத் தொகை பெற்றும் பெறாதும் வந்தது.

## தொறு - ஒடு

சூ.85. ஒவ்வொன்றும் எனும் பொருள்தரும் தொறு மற்று
ஒருங்கெனும் பொருள்தரல் ஒடுவிற்குரித்தே

பொருள் : தொறு என்னும் இடைச்சொல் ஒவ்வொன்றும் எனப் பொருள்தரும். ஒடு எனும் இடைச் சொல் ஒருங்கு என்னும் இணைப்புப் பொருள் தருதற்குரியதாகும்.

எ.டு : நாள்தொறும் புரிக நல்வினை என்றும் வாளொடு வந்தான் - பாலொடு தேன் கலந்தற்றே என்றும் வரும் - ஒடு ஓரிடத்தில் நின்று ஏனையிடங்களிலும் சென்று சேரும்.

## மன்ற - கில் இடைச்சொற்கள்

சூ.86. மன்ற என் கிளவி தேற்றப் பொருள் தரும்
செய்தலும் ஆற்றலும் கில்லினது பொருளாம்

பொருள் : மன்ற என்னும் இடைச்சொல் தேற்றம் (தெளிவு) என்னும் பொருள் தரும். கில் என்னும் இடைச்சொல் செய்தல் ஆற்றல் என்னும் பொருள் தரும்.

எ.டு : கடவுளாயினும் ஆக மடவை மன்ற வாழிய முருகே எனவும் கிற்பன்கில்லேன் என்றிலன் எனவும் செய்கிற்பேன் எனவும் வரும்.

## பெயர்ப் போலியாகவும் வினைப் போலியகவும் வரும் இடைச்சொற்கள்

நூ.87. தஞ்சம் அம்மஎல் பிறபிறிது ஒப்புருபு
வினாச் சுட்டிவை பெயர் வினைப் போலியாவரும்

பொருள் : தஞ்சம் அம்ம எல் பிற பிறிது போல, புரைய முதலிய உவம உருபுகள் வினா, சுட்டு ஆகிய இடைச் சொற்கள் பெயர்ப் போலியாகவும் வினைப் போலியாகவும் வரும்.

எ.டு : முரசு கெழுதாயத்து அரசோதஞ்சம் (தஞ்சம் = எனிது). அம்ம வாழிதோழி ! (அம்ம = கேட்பாயாக) எல்வளை மகளிர் (எல் = இலங்குதல்) பிற கொள்ளேன் (பிற = அயலானவை) பிறிது யாதும் வேண்டேன் (பிறிது = அயலது) பிற என்பதனடியாகப் பிறன் பிறள் பிறர் என்னும் உயர்திணைப் பெயர்கள் வரும். யாது, யாவை, எது, எவை, அது இது உது எனவரும் ஏனைய பால் காட்டும் விகுதிகளோடு கூடி இருதிணைக்கண் வினாவும் பெயருமாக வரும்.

## 6. உரிச்சொல்லியல்

நூ.88. பண்பிசை குறிப்பமை உணர்வொடு தோன்றி
உயிர் உயிர் மெய் அவை சார்ந்தெழு புள்ளிமெய்
முதலா ஒரெழுத் தொருநே ரசையாய்ப்
பொருள் தரற்கியலாக் குறைச்சொலும் பொருள்பட
நிரம்பிய முதனிலைச் சொல்லுமாய்ப் பெயரினும்
வினையினும் விரவுதற் கொத்துப் பல்பொருள்
குறித்த ஒருசொல்லாய் ஒரு பொருள் குறித்த
பல சொலாய்ப் பெயர்முதல் நால்வகைச் சொற்கும்
பொதுப்பட வருவன உரிச்சொல் என்ப.

பொருள் : மெய்வாய் கண் மூக்கு ஆகிய பொறிகளால் காணவும் சுவைக்கவும் படும் பண்பு செவியால் கேட்கப்படும் ஓசை ஒலி உள்ளத்தில் தோன்றும்

குறிப்பு ஆயவை பற்றிச் சிந்தையில் தோன்றும் உணர்வு காரணமாக ஓர் உயிர் எழுத்தாயும் ஓர் உயிர் மெய் எழுத்தாயும் அவற்றைச் சார்ந்து புள்ளியீறாக ஒரு நேராசையாயும் வரும் அடிச்சொற்கள் பொருள்தரற் கியலாத குறைச் சொல்லும் பொருள்பட வரும் நிறைச் சொல்லுமாய்ச் பெயரினும் வினையினும் விரவு தற்கொத்துப் பலபொருள் குறித்த ஒரு சொல்லாகவும் ஒருபொருள் குறித்த பல சொல்லாகவும் பெயர் வினை இடை உரி என்னும் நால்வகைச் சொற்கும் பொதுப்பட வருவன உரிச்சொல் என்று கூறுவர் நூலோர்.

எ.டு : செம்மை, கருமை என வருவன நிறப்பண்பு, வட்டம், கோணம், நீளம் என வருவன வடிவப்பண்பு, ஈரம் வெம்மை என வருவன குணப்பண்பு, இனிப்பு, புளிப்பு என வருவன சுவைப்பண்பு நடத்தல் இருத்தல் என வருவன தொழிற் பண்பு ஓலம், கூச்சல் சிலம்பு என வருவன இசை சால்பு, கூர்தல், திண்மை என வருவன குறிப்பு.

இவற்றின் அடிச் சொற்கள் செம், கர், வள், கோண், நீள், ஈர், வெம், இன், புள், நட், இர் என்பனவாகும். இவற்றுள் செம், வள், கோண், நீள், ஈர், வெம், இன் என்பவை நிறை உரிச் சொற்கள், கர், புள், நட், இர் என்பவை குறையுரிச் சொற்கள். குறைச் சொற்கள் மேலும் ஓர் எழுத்தோ அசையோ கூடி நிரம்பும் கர் + உ = கரு, புள் + இ = புளி, நட் + அ = நட, இர் + உ = இரு என ஆக்கம் பெறும்.

2. ஒரெழுத்து நிலையில் ஆ ஈ ஊ கா, கை, சீ, கோ, பா, தா, தீ எனவருவனவும் ஈரெழுத்து நிலையில் அல், ஆல், ஆர், ஊர் எண், ஒண், கல், கால், சில், சூல், பல், பால் என வருவனவும் நிரம்பிய உரிச்சொற்களாம். ஒரெழுத்து நிலையில் க கி செ தி ப ம என வருவனவும். கீ, கே, சு, தோ எனவருவனவும் ஈரெழுத்து நிலையில் சுட், உச், எங், உஞ், கக் தங் காச், பாத் என வருவனவும் குறையுரிச் சொற்களாம். இக்குறைச் சொற்கள் - கண், கிளி, செவி, திணை, பரி மழை கீழ் கேணி சுறா தோகை அடு உச்சி - எங்கு, உஞ்சை, கக்கு, தங்கு, காசி, பாதை என மற்றுமோர் எழுத்துக் கூடியபின் பெயர்வினைச் சொற்களாக ஆக்கம்பெறும்.

3. ஓர் உரியடி நான்கு சொற்களுக்கும் பொதுவாக வரும் நிலை ஆ - பசு - பெயர் ஆயினான் - வினை அவனா - இடைச்சொல் - கல் - மலை - கற்றான்வினை கல்கல் உரிச்சொல். வெகுள் - வெகுளிபெயர், வெகுண்டான்வினை - பார் - பூமிபெயர் - பார்த்தல் வினை.

4. பலபொருள் ஒருசொல் மா - மரம் - மா - விலங்கு மா - பெரிய, மா - நிலஅளவு மா - வண்டு மா - திருமகள் ஒருபொருள் பலசொல்

குதிரையைக் குறித்து வருவன மா, பரி, கோணம், கொக்கு, கிள்ளை முதலியனவாகும்.

5. ஓர் உரிச்சொல் விகுதி இடைநிலை உறுப்புக்களைப் பெற்று நால்வகைச் சொற்களாக வருதல்: மல் என்பது வளம் என்னும் குறிப்புணர்த்தும் உரியடிச் சொல் இது. மலை, மலையன், மலைச்சி எனப் பெயராயும், மலைத்தான், மலைந்தான் மலையான் என வினையாயும் காணாமல் சென்றான் வாராமலி இந்தான் என இடைச்சசொல்லாயும் மற்போர் மல்லாந்ந்தான் என உரிச் சொல்லாகவும் வரும்.

## நால்வகைச் சொற்களுள் ஒன்றாக வரும் சிறப்புரிச் சொல் இயல்பு

நூ.89. பெயர்வினைச் சொற்களின் முதனிலைப் பொருளின்
வேறுபட்டவற்றின் குணநிலை சுட்டும்
அடையாய்ப் பெயர்வினைப் போலியாய்ப் பண்பும்
குறிப்பும் இசையும் வெளிப்பட விளக்கி
ஒருபொருள் சுட்டியும் பல்பொருள் குறித்தும்
வருவன வகைப்பாட் டுரிச் சொல்லாகும்.

பொருள் : நால்வகைச் சொற்களுள் ஒன்றாக வரும் சிறப்புரிச்சொல், பெயர்ச் சொல் வினைச் சொற்களுக்கு முதனிலையாக வருமிடத்துத் தரும் பொருளின்று வேறுபட்டு பெயர்வினைகளின் குணநிலைகளைச் சுட்டும் அடையாயும் பெயர்ப் போலியாயும் வினைப்போலியாயும் பண்பும் குறிப்பும் இசையும் நெறிப்பட விளக்கி ஒருபொருள் சுட்டியும் பலபொருள் குறித்தும் வரும்.

எ.டு : (1) 'உற்' என்னும் குறையுரிச் சொல் அகர உகரத்தால் நிறைந்து உற - உறு என வருமிடத்து பெயர்ச்சொற்கள் உறவு - உறவினர் எனக் கேகண்மைப் பொருள் தரும். வினைச்சொற்கண் - உற்றான் உறுகின்றான் உற்ற பொருள் உற்று நோக்கினான் என அடைதல் பொருந்துதல் என்னும் பொருள் தரும். உறுகால் உறுபொருள் எனப்பெயரடையாய் உரிச் சொல்லாக வருமிடத்து மிகுதி என்னும் பொருள் தரும்.

சால் என்னும் எரிச்சொல் சால்பு, சான்றோர் எனப் பெயராக வருமிடத்து நிரம்புதல் என்னும் பொருள் தரும். சான்றது சால் கின்றது சாலும் என வினையாக வருமிடத்து நிரம்புதல் என்னும் பொருள்தரும் சாலச் சிறந்தது சாலவும் நன்று என அடையாக உரிச் சொல்லாக வருமிடந்து மிகுதி என்னும் பொருள் தரும்.

(2) மா என்னும் உரிச்சொல் பண்புபடியாக நின்று மா மரத்தையும் மாமைநிறத்தையும் குதிரையையும் பெருமையையும் - இசையடியாக நின்று விலங்கையும் - வண்டினையும் குறிப்படியாக நின்று திருமகளையும் உணர்த்தும் - உப்பின்று புற்கை உண்க மா, கொற்கையோனே என இடைச் சொல்லாய் நின்றது.

ஆர் என்னும் உரிச் சொல் - குறிப்படியாக நின்று ஆத்தி மரத்தையும் கொன்றை மலரையும் வண்டிச் சக்கரத்தையும் உணர்த்திற்று பண்படியாக நின்று ஆர்வம் ஆர்வலர் ஆராய்ச்சி என நிறைவுப் பொருளையுணர்த்திற்று. இசையடியாக நின்று ஆரவாரம், ஆரித்தான் என ஒலி உரிச்சொல்லாய் வந்தது.

3. நல்லன் இனியன் கரியன் நெடியன் என முதல் நிலையாயும் - நல்வாழ்வு இன்சொல், கருங்குதிரை நெடும் நோக்கு எனப் பெயரடையாயும் வினையடையாயும் வந்தன.

ஒரு பொருள் குறித்தும் பல பொருள் குறித்தும் வருவன மேற்கூறப் பெற்றது.

## பண்பு - குறிப்பு - இசைபற்றி வருவனவற்றுள் சில

நூ.90. குருகேழ் தடகய நனி இவை போல் வன
பண்புரிச் சொற்களாம் உறுதவ நனிகூர்
கழியிவை போல்வன குறிப்புரிச் சொற்களாம்
கம்பலை சிலைத்தல் சும்மை துவைத்தல்
இரங்கல் போல்வன இசையுரிச் சொற்களாம்.

எ.டு : குருமணித்தாலி - கேழ்கிளரகலம், தடமருப்பெருமை கயவாய்ப்பெருங்கையானை, நளிமலை நாடன் எனவும். உறுபொருள், தவப்பெரியன், நனி பேதை, துனிகூர் எவ்வம் கழி பேருவகை எனவும் வினைக்கம்பலைச் சிலம்பவும் சிலைத்தார் முரசங்கறங்க தள்ளாத சும்மைமிகு தக்கிணநாடு, பல்லியம் துவைப்ப எனவும் வரும்.

## பெயரடையாக வருவன சில

நூ.91. மழகுழ நொசிவு நுழைவு நுணங்கு
நுண்மை போல்வன பெயரடையாய் வரும்.

பொருள் : வெளிப்படை

எ.டு : மழகளிறு, குழக்கன்று - நொசி மட மருங்குல் நுழைநூற் கலிங்கம் நுணங்கிய கேள்வி நுண்ணிடை எனவரும்.

## வினையடையாக வருவன சில

நூ.92. பழுது வயாநன்று போல்வன வினையடை.

பொருள் : வெளிப்படை

எ.டு : பழுது கழிவாணாள் வயாவுறு மகளிர் நன்றும் அரிது துற்றனையாற் பெரும எனவரும்.

## பெயர்ப் போலியாக வருவன சில

நூ.93. வறிதுஉரு போல்வன பெயர்ப்போலி யாய்வரும்

பொருள் : வெளிப்படை.

எ.டு : வறிதுவடக்கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி (வறிது = சிறிது) உருகெழுகடவுள் (உரு = அச்சம்) எனவரும்.

## ஒருபொருள் - பலபொருள் தருவன சில

நூ.94. வய வயா போல்வன ஒரு பொரு ளுணர்த்தும்
மதகடி போல்வன பலபொருள் உணர்த்தும்

பொருள் : வெளிப்படை எ.டு : வயக்களிறு (வய = வலிமை) வயாவுறு மகளிர் (வயா = ஈன்றணியதுன்பம்) மதவு நடை நல்லான் (மத = மடன்) கயிறிருகதச்சேப் போல மதமிக்கு (மத = வலிமை) கடிநுனைப்பகழி (கடி = கூர்மை) கடிமரம் (கடி = காப்பு) கடுந்தேர் (கடி = விரைவு) கடுங்கால் (கடி = மிகுதி)

இங்ஙனம் பலநிலைகளில் வரும் உரிச் சொற்களையும் அவற்றின் பொருள் நிலைகளையும் தொல்காப்பியத்துள் விரிவாகக் கண்டு கொள்க.

# 7. ஒழிபியல்

நூ.95. அர் ஆர் விகுதிகள் உயர்தற் பொருள்வயின்
இருதிணைக் கண்ணும் ஒருமை சுட்டியும்
கள்ளெனும் ஈறு விகுதி மேல் விகுதியாய்ப்
பன்மையை மிகுக்க வருதலும் வழக்கே.

பொருள் : அர் ஆர் என்னும் விகுதிகள் ஒருவரையும் ஒன்றனையும் உயர்த்திக் கூறும் பொருள்வயின் இருதிணைக் கண்ணும் ஒருமை சுட்டி வருதலும் கள் என்னும் ஈறு விகுதி மேல் விகுதியாய்ப் பன்மையை மிகுக்க வருதலும் வழக்காகும்.

எ.டு : சோழ அரசர் வந்தார், புகழேந்திப் புலவர் என்தாய் வந்தார் தந்தை வந்தார், நம்பியார் வந்தார் அம்மையார் வந்தார், காக்கையார், நரியார் திருக்கோவையார் நாலடியார் எனவும், அரசர்கள், புலவர்கள், பெரியயோர்கள் ஊரார்கள், மற்றையவர்கள், எனவும் வரும் மரபு வழக்கின்கண் அஃறிணைப் பன்மை வினைக்கண் வந்தனகள் சென்றனகள் எனவும் வரும்.

## குறிப்புப் பொருள் தரும் சொற்கள் - வெளிப்படைப் பொருள் தரும் சொற்கள்

சூ.96. உயர்சொற்கிளவி கருத்தமை வினாச் செப்பு
ஒன்றொழி பொதுச் சொல் பலபொருளொரு சொல்
இனமொழி பொருளொடு புணராச் சுட்டு
திணைப்பெயர் பாற்பெயர் பொதுப்பிரி பாற்சொல்
விரவுப் பெயர் பொது வினை, பெயர்க் கிளவி
தடுமாறு வினை வினைக் குறிப்புப் பயவினை
ஆகு பெயரன் மொழி குறிப் பெச்சம்
இசையெச்சம் பிற முன்னம் விகாரம்
தொன்னெறி மொழியொடு மந்திரக் கிளவி
மெய்ந்நிலை மயக்கம் உள்ளுறை இறைச்சி
முதல்தொகை குறிப்பொடு அணிநிலை இன்னன
குறிப்பிற் பொருள் தரும் மற்றவை வெளிப்படை.

பொருள் : ஒருவனையும் ஒருத்தியையும் ஒன்றனையும் உயர்த்துக் கூறும் வழக்கினாகிய உயர் சொற்கிளவி வுழுவமைதியாக மேற் கொள்ளப்படும் வினா, செப்பு இருதிணையுள் ஒன்றனை ஒழித்து ஒன்றனை உணர்த்துதலும் இருபாலுள் ஒன்றினை ஒழித்து ஒன்றையுணர்த்துதலுமாகிய பெயர்களும் வினைச் சொற்களும் பயனிலையால் ஒன்றனை உணர்த்தும் பல பொருளொரு சொற்கள். ஒன்றனைக் கூறுமிடத்து அதன் இனத்தையும் சுட்டும் இன மொழி - பொருளின்றி அதன் அடையாளத்தை வைத்துச் சுட்டியுணர்த்தும் சுட்டுச் சொற்கள் திணை பற்றி வரும் பொதுப் பிரிபாற் சொல், விரவுப் பெயர், பொது வினைகள் பெயர் நிலை பற்றி வரும் குறிப்புச் சொற்கள் தடுமாறுவினை வினைக் குறிப்புச் சொற்கள் பயவினை ஆகுபெயர் அன்மொழித் தொகை குறிப்பெச்சம், இசையெச்சம் பிறவகையாக வரும்.

முன்னம், செய்யுள் விகாரங்கள் தொன்னெறி மரபாக வருவன. மந்திரக்கிளவி, மெய்ந்நிலை மயக்காக வருவன அகப்பொருட் செய்யுட் கண் வரும் உள்ளுறை இறைச்சி. முதற் குறிப்பு, தொகைக் குறிப்பு அணிநிலைக் கிளவி ஆகியவையும் இவை போல்வன பிறவும் குறிப்பாற் பொருள் பயப்பனவாகும் இவையல்லாதவை வெளிப்படையாகப் பொருள் பயப்பனவாகும்.

எ.டு : (1) *உயர்சொற்கிளவி* : சாத்தனார் வந்தார், நாச்சியார் பாடினார், யானை யார் முழங்கினார் - நாலடியார் படித்தான்.

(2) *கருத்தமை வினா* : கண்ணா உனக்கு மேலாடை இல்லையோ என்னும் வினா அவனுக்கு மேலாடை வழங்குதற் பொருட்டு எழுந்த குறிப்பு.

(3) *கருத்தமை செப்பு* : சாத்தா உண்பையோ என்ற வழிப் பசியில்லை என்று விடை கூறுமிடத்து அது உண்ணேன் என்னும் பொருட் குறிப்புடையதாகும்.

(4) *ஒன்றொழி பொதுச் சொல்* : இப்பெற்றம் உழவொழிந்தது - இப்பெற்றம் அறத்திற்கே கறக்கும் என்புழிப் பெற்றம் என்னும் பொதுச் சொல் உழவொழிந்தது என்னும் வினையால் காளைமாட்டையும் கறக்கும் என்னும் வினையால் பசுமாட்டையாம் குறித்து நின்றது. இருபால்களில் ஒன்றை ஒழித்து ஒருபாலை உணர்த்தினமையின் ஒன்றொழி பொதுச் சொல்.

(5) *பலபொருளொருசொல்* : மா என்னும் பெயர் பூத்தது காய்தது என்னும் வினையால் மாமரத்தையும் மா ஓடிற்று என்னும் வினையால் குதிரையையும் உணர்த்திற்று.

(6) *இனமொழி* : அறஞ்செய்தான் சுவர்க்கம் புகும் என்னுமிடத்து மறம் செய்தான் நரகம்புகும் என்பதை உணர்த்துமிடத்துக் இனம் சுட்டினமையின் குறிப்பு மொழி.

(7) *பொருளொடு புணராச் சுட்டு* : காட்டுள் செல்வோன் மற்றவனிடம் தடத்திற்படிந்துள்ள காற் சுவடுகளை காட்டி இது குதிரை இதுமாடு இது ஆடு எனவும் இந்த யானை அரசயானை என்னுமிடத்து ஆங்கு அப்பொருள்கள் இல்லை எனினும் அவற்றை உணர்த்தலின் பொருளொடு புணராச் சுட்டு குறிப்பால் அவற்றை உணர்த்தின.

(8) **திணைப்பெயர்** : மீளி, காளை என்றாற்போல் வரும் அஃறிணைப் பெயர்கள் அகப்பொருளிலக்கியத்துள் ஆடவரை (தலைவனை)ச் சுட்டுதல் மரபு பற்றிய திணைப் பெயர்களாம்.

(9) **பாற்பெயர்** : அஃறிணை இயற்பெயர்கள் ஒருமை பன்மைக்குப் பொதுவாகும். அவை பின்வரும் பயனிலைகளால் ஒருபாலை வரைந்தும் சுட்டுதல் குறிப்பாகும். யானை இது - யானை இவை - யானை வந்தது - யானை வந்தன எனவரும்.

(10) **பொதுப்பிரிபாற்சொல்** : ஒருவர் என்றும் பெயர் ஆடவன் பெண்டு இருபாலுக்கும் பொது அது இவருள் ஒருவர் கன்னி, என்னுமிடத்துப் பெண் பாலையும் ஒருவர் செம்மல் என்னுமிடத்து ஆண்பாலையும் குறிப்பாலுணர்த்திற்று. பெரும்பான்மையும் இது பொதுவாகவே வரும்.

(11) **விரவுப்பெயர்** : பொதுப் பெயர்கள் இருதிணைப் பொதுவாய் ஒருபாலைச் சுட்டியும் ஒருதிணைக்கண் ஆண் பால் பெண்பாலுக்குப் பொதுவாயும் வரும். சாத்தன் என்னும் ஆண்பாற்பெயர் சாத்தன் இவன், வந்தான் என்னுமிடத்து உயர்திணை ஆடவனையும், சாத்தன் இது, சாத்தன் வந்தது என்னுமிடத்து அஃறிணையும் உணர்த்திற்று. தமிழ்மணி வந்தான், தமிழ்மணி வந்தாள் என உயர்திணை இருபாலுள் ஒன்றனை உணர்த்திற்று. பூமாலை வந்தான், வந்தாள், நன்று என்னுமிடத்து இருதிணைக்கண்ணும் ஒருமைப்பாலையும் உணர்த்திற்று.

(12) **விரவுவினை** : அவன் செய்யும் அவள் செய்யும் அது செய்யும் அவை செய்யும் எனச் செய்யுமென்முற்று திணைப் பொதுவாயும் பாற்பொதுவாயும் வந்து எழுவாயால் சிறப்புப் பொருள் உணர்த்திற்று. வாழ்க என்னும் வியங்கோள் ஐம்பால் மூவிடத்திற்கும் பொதுவாய் எழுவாயால் ஒன்றனை வரைந்துணர்த்தும்.

(13) **பெயர்நிலைக் கிளவி** : அரசனிடத்திலிருந்து திருமுகம் வந்துள்ளது என்னுமிடத்து திருமுகம் என்னும் பெயர் செய்தி மடலைக் குறிப்பால் உணர்த்திற்று.

(14) **தடுமாறு தொழிற்சொல்** : புலிகொல் யானை என்புழி இத்தொடர் புலியைக் கொன்ற யானை எனவும் புலியாற் கொல்லப் பெற்ற யானை எனவும் தடுமாறும் இவற்றுள் எது உயிருடன் உள்ளதோ அதற்கேற்பப் பொருள் பயக்கும்.

**(15) வினைக்குறிப்பு :** நிலவு விண்ணது = நிலா விண்ணிடத்தது எனவும் குண்டு கட்டு - குழிந்து ஆழ்ந்த கண்ணையுடையது என்றும் விரிந்து வினை நிலையுணர்த்தும்.

**(16) பயவினை :** ஒரு பொருளின் தன்மை உணர்வை அதற்குரிய வினையாற் கூறாமல் ஆகுபெயர் போல ஓராற்றாற் தொடர்புடைய வினையால் கூறுதல் பயவினையாகும். அவள் அழகைக் கண்களாற் பருகுகிறான் (கண்டான்) அடிதின்றான் (பட்டான்) செவிகைப்பச் சொற் பொறுத்தல் (வருந்த) எனவரும்.

**(17) ஆகுபெயர் :** ஒருபொருளை அதனொடு தொடர்புடைய பிறபெயர்களால் கூறுதல். தாமரை பூத்தது, கொடியின் பெயர் மலருக்காக கிவந்தது. புளி காய்த்தது சுவையின் பெயர் மரத்திற்காகி வந்தது. காளை போல்வானைக் காளை வந்தான் எனல் உவம ஆகுபெயர்.

**(18) அன்மொழி :** பொற்றொடி வந்தாள் பெய்வளை ஆடினாள் என அணிதற்குரிய அணிகலனையே பெண்மகளாகக் கூறுதல் இது. அணியும் உரிமை பற்றி வருவது.

**(19) குறிப்பெச்சம் :** குழலினிது யாழினிது என்பதம் மக்கள் மழலைச் சொல் கேளாதவர் என்புழிக் கேட்டவர் மழலையே இனிது என்பர் என்பது குறிப்பெச்சம்.

**(20) இசையெச்சம் :** உப்பமைந்தற்றால் ஊடல் அது சிறிது மிக்கற்றான் நீளவிடல் என்புழி. ஊடல் இனிதாயினும் அதனை அளவறிந்து புரிதல் வேண்டும். இன்றேல் அதுவே துன்பத்தைத் தரும் என்னும் உட்கருத்து இசை எச்சம் எனப்படும்.

**(21) முன்னம் :** குழை கொண்டு கோழி எறியும் வாழ்க்கையர் என்னுமிடத்து அத்தகைய செல்வமுடையவர் என்பது குறிப்பு. இவ்வாறு வருவன முன்னம் எனப்படும்.

**(22) விகாரம் :** மூவகைப் புணர்ச்சி விகாரம் - அறுவகைச் செய்யுள் விகாரம். இவை புணரியலுட் கூறப்பெற்றன. ஆண்டுக் கண்டுக் கொள்க.

**(23) தொன்னெறி மொழி :** உருவகம் போல ஒருபொருளை விடுகதை முறையில் கூறுவது இக்குறிப்பு.

எழுதுவரிக் கோலத்தார் ஈவார்க்குரியார்
தொழுதிமைக் கண்ணமைந்த தோட்டார் - முழுதகலா
நாணிற்செறித்தார் நலங்கிள்ளி நாடோறும்
பேணற்கமைந்தார் பெரிது

இங்ஙனம் இலக்கியம் வரைந்த ஓலைச் சுவடியை ஒரு பெண் மகளை வருணிப்பது போல அமைந்துள்ளது இக்குறிப்பு மொழி.

(24) **மந்திரக்கிளவி :** மந்திர ஒலி எழுத்துக்கள் தத்துவப் பொருள் தரும். அவற்றை மறைமுகமாகக் கூறுவது குறிப்பு "பட்டிமண்டபம் ஏற்றினை ஏற்றினை ஏட்டினோடு இரண்டும் அறியேனையே" என்னும் திருவாசகத் தொடரில் எட்டு இரண்டு என்பவை. அகரத்தையும் உகரத்தையும் குறிக்கும் அ.சிகாரத்தைம் உவகாரத்தையும் குறிக்கும் சிவ என்பது மந்திரப் பொருள்.

(25) **மெய்ந்நிலை மயக்கு :** ஓர் அறநெறிக் கருத்தைப் பிற சொற்களால் கூறி உணரவைப்பது இதன் இயல்பு. நிலையாமை கடைப்பிடி. சிவபுண்ணியம் செய் என்ற கருத்தை

நீத்தொழிந்த ஆறைந்தடக்கிப்பின் நிச்சயமே
வாய்த்தமைந்த வாயில் பெண் ஆனையே - கூத்தற்கு
வாள்ஏறோ டோசை விளைநிலம் இவ்வல்லாற்
கேளாய் உடன் வருவதில்.

இதன்கண் அமைந்த குறிப்பு வருமாறு.

| | |
|---|---|
| நீத்தொழிந்த ஆறு - நிலை | கூத்தன் - சிவம் |
| ஐந்தடக்கி - ஆமை | வாளேறு - புண் |
| வாயில் - கடை | ஓசை - இயம் |
| பெண் ஆனை - பிடி | விளைநிலம் - செய் |
| இவற்றைக் கூட்டினால் நிலையாமை கடைப்பிடி என வரும் | இவற்றைக் கூட்டினால் சிவ புண்ணியம் செய் என வரும். |

இனி வேங்கை மரத்தைத் தீத்தீண்டு கையார் எனவும் முசுமுசுக்கைச் செடியை இருகுரங்கின்கை எனவும் கூறுதல் இதன்பாற்படும்.

(26) உள்ளுறை (27) இறைச்சி இவை அகப்பொருள் இலக்கியத்தில் பயின்று வருவன பொருளிலக்கணத்திற் கண்டு கொள்க.

**(28) முதற்குறிப்பு :** ஒரு நூலின் பெயர் பாட்டு முதலியவற்றை அந்நூலும் பாட்டும் தொடங்கும் முதற் சொல்லையே பெயராகக் கூறுவது ஆத்திசூடி - என்னும் நூல். ஆத்திசூடி அமர்ந்த தேவனை எனத் தொடங்கும் அதுவே அந்நூலுக்குப் பெயராயிற்று. 'அறத்தாறிது வென வெள்ளைக்கிழிபு' என்னுமிடத்து குறள் வெண்பாவிற்கு எடுத்துக்காட்டு அறத்தாறு எனத்தொடங்கும் பாட்டு என்பதை உணர்த்திற்று.

**(29) தொகைக்குறிப்பு :** தொகைச் சொற்கள் அவற்றால் உணரப்படும் பொருள்களைச் சுட்டும் குறிப்பு ஐவர் பொருட்டுக் கண்ணன் நூற்றுவர்பால் தூது சென்றான் என்புழி ஐவர் பாண்டவர்களையும் நூற்றுவர் கௌரவர்களையும் குறித்து நிற்றலை அறியலாம்.

**(30) அணிநிலை :** உவமம் உருவகம் வேற்றுப் பொருள் வைப்பு முதலாய அணிகளைப் போல அணிநயம்பட வந்து பொருள் உணர்த்தும் குறிப்பு வேங்கை எனின் அது வேங்கை மரத்தையும் வேங்கைப்புலியையும் உணர்த்தும் மரத்தை உணர்த்தப் பாயா வேங்கை புலியை உணர்த்தப் பூவா வேங்கை என்று வருவனவும் இடக்கரடக்கலாக வருவனவும் அணிநிலைக் குறிப்பு மொழிகளாம்.

**இன்னன என்றமையான் :** குழூஉக் குறியாக வருவனவும் திசைநிலைக் கிளவிகளாக வருவனவும் பிறவாறு விடுகதை - பழமொழி போல வருவனவும் கொள்க.

ஈண்டுக் கூறப் பெற்ற குறிப்பு மொழிகள் பற்றிய இலக்கணங்கள் எழுத்தியலுள்ளும் சொல்லியலுள்ளும் கூறப்பெற்றனவேயாதலின் விரிவான விளக்கங்களை அவ்வந்நூற்பா உரைகளிற் கண்டுகொள்க.

## பத்துவகை எச்சம்

நூ.97. **பெயர்வினை பிரிநிலை ஒழியிசை**
**எதிர்மறை என சொல் குறிப்பிசை பத்தும்**
**தத்தம் நெறியான் எஞ்சு பொருள் உணர்த்தும்.**

**பொருள் :** பெயரெச்சம், வினைஎச்சம் உம்மை எச்சம் பிரிநிலை எச்சம் ஒழியிசை எச்சம், எதிர்மறை எச்சம் எனவென் எச்சம் சொல்லெச்சம் குறிப்பெச்சம் இசை எச்சம் ஆகிய பத்தும் அவ்வவ் இலக்கண நெறியானே எச்சப் பொருள் உணர்த்தும்.

இவற்றுள் பெயரெச்சம் வினைஎச்சம் வினையியலுள்ளும் உம்மை பிரிநிலை ஒழியிசை எதிர்மறை என என்னும் ஐந்தும் இடையியலுள்ளும் ஓதப் பெற்றன - எஞ்சிய மூன்றும் ஈண்டுக் கூறப்படும்.

## சொல்லெச்சம்

**நூ.98. *சொல்லென் எச்சம் ஒரு சொல்லொடு நிறையும்***

**பொருள் :** சொல்லுதல் என்னம் பொருள்பட ஒரு சொல் எஞ்சி நின்றுபின்னர்க் கூடி நிறைவது சொல்லெச்சம் எனப்படும்.

**எ.டு :** எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும் கண்ணென்ப வாழுமுயிர்க்கு என்ப - எண் என்று சொல்லப்படுவன என்ப. எழுத்து என்று இயம்பப்படுவன என்ப. கண்ணென்று கூறுவர் எனவரும். என் என்பது சொல் என்னும் வினையடிக்கு மாற்றாக அமைந்ததோர் இடைச் சொல்லாகும். விரியுங்கால் சொல் என்பதனொடு சேர்ந்தே விரியும்.

## குறிப்பெச்சம்

**நூ.99. *குறிப்பெச்சம் சில சொற்களான் நிறையும்***

**பொருள் :** முன்னியதொரு கருத்து ஓரிரு சொற்களான் நிறைவது குறிப்பெச்சமாகும்.

**எ.டு :** இழுக்கல் உடையுழி ஊற்றுக் கோலற்றே ஒழுக்கம் உடையார் வாய்ச்சொல். இதன்கண் அவற்றைக் கேட்க என்பது குறிப்பெச்சம். ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும். இதன்கண் விழுப்பம் தருவதாகிய அவ்வொழுக்கம் என்பது குறிப்பெச்சம்.

## இசையெச்சம்

**நூ.100. *இசையெச்சம் பல சொற்களான் நிரம்பும்***

**பொருள் :** முன்னிய கருத்து பலசொற்களான் விரிந்து நிரம்புவது இசை எச்சம்.

**எ.டு :** "வானுயர் தோற்றம் எவன் செய்யும் தன்னெஞ்சம் தானறி குற்றப்படின்" என்னுமிடத்து தவ ஒழுக்கத்திற்கொவ்வாத வேடத்தால் யாதொரு பயனுமில்லை தன்னெஞ்சமே அவ்வேடத்தை இகழும் என்னும் கருத்து இசையெச்சமாக நின்றது.

## வழாநிலையும் வழுவமைதிகளும்

நூ.101. வினைமுதல் பயனிலை யொடுதொடர்ந் திறுவுழித்
திணைபாலிடம் பொழுது எச்சம் வேற்றுமை
சுட்டு வினா விடை உம்மை முதலாயவை
பொருந்த நடத்தல் வழாநிலை - அவைதமுள்
தழுவா நடையின வழுவாம் வழுவினுள்
வழக்கினும் மரபினும் பயில்வன அமைதியாம்

பொருள் : கருத்துக்கள் செப்பாகவும் வினாவாகவும் தொடர்களாக உரைக்கப் பெறுமிடத்து வினை முதல் தொடர்ந்து பயனிலையொடு முடிதற்கண் திணை, பால் இடம் காலம் வேற்றுமை சுட்டு வினாவிடை உம்மை முதலியவை தம்முள் முரணின்றிப் பொருந்த நடைபெறுதல் வழாநிலையாம். அவை தம் முள் முரணி ஒன்றையொன்று தழுவாமல் நடைபெறுவன வழுவாம். வழுவினுள் நூலோர் வழக்கினும் புலவோர் மரபினும் பிறிதொறின்றிப் பயின்று வருவன வழுவமைதியாகும்.

எ.டு : வழாநிலை : நம்பி நாளை வருவான், ஆயன் பசவின் பாலைக் கறக்கிறான், யானும் அவனும் கற்றோம். இவன் போரிட்ட வீரன் இவன் ஊரினின்று வந்தான், விருந்துண்டு சென்றான் அதுவந்தது அவை வந்தன யானையும் யானையும் போரிட்டன. மணிமேகலைக் காவியத்தை இயற்றியவர் யார் மணிமேகலைக் காவியத்தை இயற்றியவர் சாத்தனார் எனவரும்.

வழுநிலை : நம்பி வந்தது திணைவழு நங்கை பாடினான் பால்வழு - யான் வந்தான் கண்ணன் நாளை வந்தான் காலவழு - நம்பி உண்டு நங்கை உணவு படைத்தாள் எச்சவழு ஆங்கு வந்தான் இடவழு கறக்கின்ற எருமைபாலோ சினையோ வினாவழு கருவூர்க்கு வழியாது என்னுமிடத்து உறையூர்க்குச் சென்று வருகிறேன் என்பது விடை வழு சாத்தனும் கொற்றன் தேவனும் வந்தனர். உம்மை வழு. யானை மேய்ப்பானை இடையன் என்றும் மாடு மேய்ப்பானைப் பாகன் என்றும் கூறுவது மரபுவழு. வழுவமைதி மேற் கூறுப்படும்.

## திணைபால் வழுவமைதி

நூ.102. உவப்பினும் இகழ்வினும் எண்ணினும் சிறப்பினும்
செறலினும் திணைபால் வழுவினும், மரபொடு
வரினவை அமையுமென்றியம்புவர் புலவர்

பொருள் : ஒருவர் ஒன்றை உவந்து கூறுமிடத்தும் இகழ்ந்துரைக்குமிடத்தும் தொகுதியாக என்னுமிடத்தும் சிறப்பித்துக் கூறுமிடத்தும் வெகுண்டுரைக்குமிடத்தும் உயர்திணையும் அஃறிணையும் ஆண்பால் பெண்பால்

ஒன்றன்பால் பலவின்பால்களும் வழுவிவரினும் அவை மரபொடு வருவனவாயின் அவற்றை வழுவமைதியாக ஏற்கலாமென்று கூறுவர் புலவர்.

எ.டு : ஒரு பசுவைச் சுட்டி என்னம்மை நிறையப் பால் தருவாள் என்றும் ஒருபரிமாவைச் சுட்டி என்னையன் என்னைப் பாதுகாப்பாக ஏற்றிச் செல்வான் என்றும் உவந்து கூறுமிடத்து திணையும் பாலும் வழுவாயினும் அமையும்.

நல்லொழுக்கமில்லா ஒருவனைப் பற்றிக் கூறுமிடத்து அவன் ஒரு கழுதை, மாடு என இழிவினால் உயர்திணை அஃறிணையாகக் கூறப்பட்டது. பெண்வழிச் செல்வானை அவன் ஒரு கைம்மணாட்டி எனல் ஆண்பால் பெண்பாலாகக் கூறப்பட்டது.

பார்ப்பரர்தவரே சுமந்தார் பிணிப்பட்டார் மூத்தோர் இளையர் பசுப்பத்தினிப் பெண்டிர் என்றிவர்கட்கு ஆற்றவழி விலங்கினாரே பிறப்பிடைப் போற்றி எனப்படுவார். என்னுதற்கண் அஃறிணை உயர்திணையோடும் மயங்கிற்று மிகுதி பற்றி. அங்கண் விசும்பின் அகனிலாப் பாரிக்கும் திங்களும் சான்றோரும் ஒப்பர் இது சிறப்புப்பற்றி எண்ணியது. மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா இது இழிவுபற்றி உயர்திணை அஃறிணை முடிபேற்றது.

எனைத்துணையராயினும் என்னாம் திளைத்துணையும் தேரான் பிறனிற்புகல் இது உயர்திணைப் பன்மை ஒருமையாகச் செறல் பற்றிக் கூறியது. இவை எல்லாம் மரபு பற்றி வழுவமைதியாகக் கொள்ளப்படும்.

## பன்மைப் பொருள் ஒருமையாகக் கூறப்படுதல்

சூ.103. பால்பிரிப்பில்லாப் பூதக்கிளவியும்
பன்மைக் குரியசினை நிலைக் கிளவியும்
தெய்வம் சுட்டிய பெயர் நிலைக்கிளவியும்
தொகுதிக்கிளவியும் தம்பாலிறுதியொடு
புணரா விடத்துப் பால் வரைவின்றே.

பொருள் : ஒருமை பன்மை எனப் பிரிக்கப் பெறாத நிலம் முதலிய பூதப் பெயர்களும் கண் காது முதலிய பன்மையாக அமைந்துள்ள உறுப்புப் பெயர்களும் தெய்வங்களைக் குறித்த பெயர்களும் தோப்பு - அவையம் முதலிய தொகுதிப் பெயர்களும் பால்காட்டும் விகுதிளொடு கூடாமல் நிற்குமிடத்து ஒருமையாகவும் பன்மையாககவும் பயனிலை முடிவு பெறும் வரையறை இன்று.

எ.டு : நிலம் விளைந்தது - நிலம் வளைந்தன வெள்ளம் பெருகிற்று - வெள்ளம் பெருகின - தீபரவிற்று - தீபரவின எனவும் கண் சிவந்தது. கண்

சிவந்தன எனவும் தெய்வங்காத்தது, தெய்வம் அருளின எனவும் அவை கூடிற்று அவை முழங்கின எனவும் வரும்.

இப்பன்மைப் பெயர்கள், கள் என்னும் விகுதியொடு கூடி நிற்குமிடத்து ஒருமை முடிபுபெறாபன்மையாகவே முடியும். நிலங்கள் விளைந்தன. கண்கள் சிவந்தன தெய்வங்கள் அருளின அவையோர் கூடினர் முழங்கினர் எனவரும்.

## சிலமரபுகள்

சூ.104. இருதிணைக் கண்ணும் ஆண்பெண்பாற்கென
வழக்கு வழிப்பட்ட பெயரும் தொழிலும்
மயங்கின் மரபு வழுவாம் எனினும்
சிறப்பின் பாலாற் றிரிதலும் அமைமே.

பொருள் : உயர்திணை அஃறிணையாகிய இருதிணைக் கண்ணும் ஆண்பால் பெண்பால்களுக்கென வழக்குவழிப்பட்ட பெயர்களும் தொழில்களும் மயங்கின் வழுவாகும் எனினும் சிறப்பின்பாற் படின் அவை திரிதல் வழுவமைதியாக அமையும்.

எ.டு : ஐவர் கழல் கட்டினர். உயர்திணை ஆண்பாற்கே உரியது. ஐவர் வளையல் அணிந்தனர். உயர்திணைப் பெண்பாற்கே உரியது. நால்வர் யானை ஏற்றம் பயின்றனர். உயர்திணை ஆண்பாற்கே உரியது. நால்வர் நாட்டியமாடினர் உயர்திணைப் பெண்பாற்கே உரியது. இவை வண்டிமாடுகள் அஃறிணை ஆண்பாலுக்குரியது. இவை பால்மாடுகள் அஃறிணைப் பெண்பாலுக்குரியது. சிறுபான்மை ஆடவர் நாட்டிய மாடலும் பால்மாடுகள் வண்டியிழுத்தலும் நிகழலாம்.

மற்று மன்னன், காவலன், புலவன் என்றாற் போல்வன ஆண்மை சுட்டுவனவாகும். மனைவி, இல்லாள், தாழ்குழல், மென்மொழி முதலியவை பெண்மை சுட்டுவனவாகும். இவை தன்மை பற்றியவைன்றித் தொழில் பற்றியவையல்ல.

## இடவழுவமைதி

சூ.105. சிறப்பினும் தகவினும் தன்னைப் பிறன்போல்
கூறும் குறிப்பினும் முன்னிலைத் தன்மைகள்
படர்க்கை இடத்தொடு மயங்குதல் மரபே.

பொருள் : சிறப்புப் பற்றியும் தகவு பற்றியும் தன்னைப் பிறன் போற்கூறும் குறிப்புப் பற்றியும் பேசுமிடத்து முன்னிலையிடமும் தன்மையிடமும் படர்க்கை இடத்தொடு மயங்குதல் மரபு பற்றிய வழுவமைதியாம்.

எ.டு : தலைவரவர்கள் எழுந்தருளல் வேண்டும். அம்மையார் பாடுதல் வேண்டும் சிறப்புப் பற்றி முன்னிலைப் பெயர் படர்க்கையாகக் கூறப் பெற்றன. தாங்கள் தான் பரிசளித்தல் வேண்டும். அரசர்பிரான் வழங்குதல் வேண்டும் தகுதி பற்றி முன்னிலை படர்க்கையாயின, ஒருவன் ஐயுறும் தன் தம்பியிடம் உன் அண்ணன் அவ்வாறு செய்வேனா? எனவரும்.

## காலவழுவமைதி

நூ.106. விரைவுறும் உணர்வொடு செப்புதற்கண்ணும்
இயற்கையும் தெளிவும் கருதிய விடத்தும்
எதிர்வும் நிகழும் இறப்பொடு மயங்கலும்
பண்டைய நிகழ்வினை நினைகூர்தற்கண்
இறப்பெதிர் வாக மயங்கலும் வழக்கே.

பொருள் : விரைந்து முடிக்கும் உணர்வொடு விடை கூறற்கண்ணும், இயற்கை நியதியாக நடை பெறுதல் கருதியும் பல்கால்நிகழ்ந்த தெளிவு கருதியும் எதிர்காலத்தாலும் நிகழ் காலத்தாலும் கூறவேண்டியவை இறந்த காலத்தொடு மயங்கவும், பண்டைய நிகழ்வுகளை நினைவு கூர்தற்கண் இறந்த காலத்தால் கூற வேண்டியவை எதிர்காலத்தொடு மயங்கலும் வழக்குப் பற்றிய வழுவமைதிகளாம்.

எ.டு : ஒரு பணிக்காகத் தன்னை அழைத்துச் செல்ல வந்த நண்பன் அவனை நோக்கி சாத்தா நீ இன்னும் உண்டிலையோ என வினவுமிடத்து உண்ணப் போகும் அவன் உண்டேன் உண்டேன் இதோ வந்து விட்டேன் சிறிது பொறு எனலும் உண்டுகொண்டிருப்பவன் அவ்வாறு கூறுதலும் விரைவுபற்றிய வழுவமைதியாகும் எறும்புகள் தம்முட்டைகளைச் சுமந்து மேட்டு நிலத்திற்குச் செல்லுமாயின் அது மழைவருதற்கு அறி குறி அதனைக் கண்ட ஒருவன் மழை பெய்தது பெய்தது எனல் இயற்கை நியதி பற்றிய வழுவமைதி. ஒரு காட்டில் வழிப்பறிக் கள்வர்கள் அவ்வழிச் செல்வோரின் பொருள்களை பறித்துக் கொள்ளுதலைக் கேள்வியுற்றுறறிந்த ஒருவன். தன் நண்பன் அவ்வழியே செல்ல முற்பட்டபோது நீ அக்காட்டு வழியே போயின் தொலைந்தாய் உன் பொருள்களும் தொலைந்தன எனல் தெளிவு பற்றிய கால வழுவமைதியாம். ஒருவர் தாம் பயின்ற கல்லூரிக்குப் பின்னொரு சமயம் தன் நண்பனுடன் சென்றவிடத்துத் தன் நண்பனிடம் நான் கல்லூரியுற் பயின்ற காலை எல்லோரும் இங்கே தான் விளையாடுவோம். இந்த விடுதியில் தான் உணவு உண்போம் எனக் கூறுதல் நினைவு கூர்தற் பற்றிய கால வழுவமைதியாகும். பிறவும் இவ்வாறே கண்டுகொள்க.

## இதுவுமது

நூ.107. முக்காலத்தினும் ஒத்தியல் பொருளை
நிகழ்காலத்தாற் செப்புதல் மரபே.

பொருள் : முக்காலத்திலும் ஒரு தன்மைத்தாகத் திகழும் பொருளை வினைப்படுத்துக் கூறுங்கால் நிகழ்கால வினையாற் கூறுதல் மரபாகும். நிகழ் காலம் சுட்டும் வினை செய்யும் என்னும் வாய்பாடு பற்றியும் உண்டு என்னும் குறிப்பு வினை பற்றியும் வரும். சிறுபான்மை கால இடை நிலையொடும் வரும்.

எ.டு : நீர் குளிரும், தீச்சுடும், மலை நிற்கிறது, இறைவன் உண்டு, கடவுள் உண்டு, உலகம் சுழல்கிறது எனவரும்.

## வினாவழாநிலை - வழுவமைதி

நூ.108. ஐயம் அறியாமை பற்றி எழும்வினா
வழாநிலை தெரிதல்தெரித்தல் கொளல் கொடை
முனிவான் எழும் வினா வழுவமை வாகும்.

பொருள் : ஐயம் பற்றியும் அறியாத நிலையிலும் எழும் வினா வழா நிலையாம். தேருதற்காகவும் தெரிவித்தற்காகவும் கொள்ளுதற்காகவும் கொடுத்தற்காவும் வெகுளி காரணமாகவும் எழும் வினா வழுவமைதியாகும்.

எ.டு : இச்செயலைச் செய்தவன் சாத்தனா கொற்றனா? என்பதும் ஆண்டுத் தோன்றும் உருவம் ஆண் மகனா பெண் மகளா என்பதும் ஐய வினா மாணவன் இச்சூத்திரத்தின் பொருள் யாது என்பது அறியா நிலை பற்றிய வினா இவையிரண்டும் வழாநிலை. ஆசிரியன் மாணவனை திருவாசகத்தை அருளியவர் யார் என்பது தேர்தல் வினா. இமய மலைக்குரிய தமிழ்ப் பெயர் என்ன தெரியுமா என்பது தெரிவித்தல் வினா - வணிகரிடம் ஒருவர் பசும் பயறு உள்ளதோ? எனல் கொள்ளல் வினா - கண்ணா எழுதுகோல் கொண்டு வரவில்லையா என நண்பன் வினாவுவது கொடுத்தலுக்காக வினாவலின் கொடை வினா - யான் யார் தெரியுமா உனக்கு என்னிடம் பகைக்காதே என்பது வெகுளி பற்றிய வினா. இவை வழுவமைதி வினாக்கள்.

## விடை வழாநிலை - வழுமைதி

நூ.109. நேரிதின் வழங்கும் விடை வழாநிலையாம்
விடைப் பொருள் குறிப்பான் வெளிப்பட விடுத்தலும்
எதிர் வினாதலும் வழு வமைதி என் றேற்ப

பொருள் : ஒருவன் வினாவிய போது அதற்கு நேரான விடை தருதல் வழாநிலையாம். விடைப் பொருள் குறிப்பாக விளங்கக் கூறுதலும் எதிர் வினாவையே விடையாகக் கூறுலும் வழுவமைதிவுடையவாக ஏற்பர் நூலோர்.

எ.டு : சாத்தா ! உண்டியோ? என வினாவியவிடத்து உண்டேன். உண்டிலேன் என்பவை நேர்விடை உண்ணேன் என்பது எதிர்மறை விடை. பசியில்லை எனவும், வயிறு நோகும் எனவும், பழமாயின் நன்று எனவும் கூறுதல் ஒருவாறு விடைப் பொருள் பயப்பன. நீயே உண் என்பது ஏவல் விடை - உண்ணேனோ என்பது எதிர் வினாவிடை மற்றும் பொழுதாயிற்று. நோன்பினேன் என்றாற் போலக் கூறுவனவும் வழுவமைதியாம் - விடை, செப்பு - இறை என்பன ஒரு பொருட் சொற்கள்.

## ஐயவினாவிடைபற்றிய சில இயல்புகள்

நூ.110. திணைபால் ஐயவினாவினும் செப்பினும்
உருபென உரைத்தலும் பன்மைபகர்தலும்
அஃறிணை யாயின் இயற்பெயர் அறைதலும்
அன்மையொடு தன்மை சுட்டலும் மரபே.

பொருள் : திணை ஐயம் உயர்திணை ஒருமைப்பால் ஐயம் இவற்றை வினாவுமிடத்து உருபு பிழம்பு என்னும் பொதுச் சொற்களால் வினவலும் பால் ஐந்தின்கண் பன்மைப் பாலால் வினவலும் அஃறிணைப் பால் ஐயத்தின்கண் அஃறிணை இயற்பெயரால் வினவலும் மரபாம் விடை கூறுமிடத்துத்திணை ஐயத்தின்கண் உருபெனச் சுட்டிக் கூறலும் உயர்திணைப் பாலையத்தின் கண் விடை கூறுமிடத்து உருபு அல்லது இயற்பெயரைச் சுட்டிக் கூறலும் மரபாம். மற்றுத் துணிந்த பொருளின்கண் அன்மைத் தன்மைச் சுட்டிக் கூறலும் வழாநிலையேயாம்.

எ.டு : திணை ஐய வினா : சேய்மையிற் காணப்படும் பொருளைச் சுட்டிக் கூறுமிடத்து ஆண்டுத் தோன்றும் உருபு குற்றியோ மகனோ?

விடை : துணிபொருள் மகனாயின் அவ்வுருபுமகன் எனவும் குற்றியாயின் அவ்வுருபு குற்றி என்றும் வரும் அன்னமத் தன்மையை ஏற்றிக் கூறுமிடத்து துணிபொருள் மகனாயின். குற்றியல்லன் எனவும் துணிபொருள் குற்றியாயின் மகனன்று எனவும் வரும்.

உயர்திணைப் பாலைய வினா : ஆண்டுத் தோன்றும் உருபு ஆண்மகனோ பெண் மகனோ எனவும் ஆண்டுத் தோன்றுவார் ஆண்மகனோ பெண்மகளோ என்றும் வரும்.

விடை : துணிபொருள் ஆண்மகனாயின் ஆண்டுத் தோன்றும் உருபு ஆண்மகன் அல்லது ஆண்டுத் தோன்றுவோர் ஆண்மகன் என்றும் அன்மைத் தன்மையை ஏற்றிக் கூறுமிடத்து பெண்மகள் அல்லன் என்றும் துணிபொருள் பெண்மகளாயின் ஆண்மகனல்லள் என்றும் வரும்.

அஃறிணைப் பால் ஐயம் : இச்செய்யின் ககண்புக்க உருபு ஒன்றோ பலவோ என்றும் அல்லது இச்செய்யின்கண் புக்க பெற்றம் ஒன்றோ பலவோ என்றும் வரும்.

விடை : ஒன்றெனத் துணிந்த வழி இச்செய்புக்க பெற்றம் ஒன்று எனவும் அன்மைத் தன்மையை சுட்டிக் கூறுமிடத்து பலவன்று எனவும் வரும். துணிந்த பொருள் பலவாயின் செய்புக்க பெற்றம் பல என்றும் - ஒன்றல்ல என்றும் வரும்.

## வினைப்படுதொகுதிக்கண் உம்மை

சூ.111. இனைத்தென அறிந்தமுதல் சினைத் தொகுதிகள்
வினைப்படு மிடத்துமுற் றும்மை வேண்டும்.

பொருள் : இவ்வளவு என வரையறையுடன் அறிந்துள்ள முதல் பொருள் சினைப் பொருள்களை வினைப்படுத்துக் கூறுமிடத்து முற்றும்மை கொடுத்துக் கூறல் வேண்டும்.

எ.டு : தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தனர். அறம் பொருள் இன்பம் வீடென்னும் நான்கும் உறுதிப் பொருள் எனவும் இரண்டு கண்ணும் சிவந்தன. புலனைந்தும் கலங்கின எனவும் வரும் வினைப்படாத வழி தமிழ்நாட்டு வேந்தர் மூவர், மக்களுக்கு கண்கள் இரண்டு எனவரும்.

சூ.112. நிலைபேறி லாப்பொருள் உலகினிலாப் பொருள்
மறைவினைப்படுத்தொரு பொருளோ டுரைப்புழிக்
காலம் இடஞ்சார்ந் தும்மை பெறுமே.

பொருள் : நிலைபேறில்லாத அநித்திய பொருளையும் உலகில் இல்லாத பொருளையும் எதிர்மறையாக ஒரு பொருளொடு சார்த்தி வினைப்படுத்திக் கூறுமிடத்து காலத்தொடும் இடத்தொடும் சார்ந்து உம்மை பெறும்.

எ.டு : மாமல்லன் இளமையும் நிலையாது மருத்துவன் யாக்கையும் நிலையாது பேரரசன் செல்வமும் நிலையாது எனவரும். ஒரு பொருளைச் சாராத வழி இளமை நிலையாது யாக்கை நிலையாது செல்வம் நிலையாது என உம்மையின்றி வரும். உலகின்கண் இல்லாத பொருள் குருடு காண்டல் பகலுமில்லை,

பவளக் கோட்டு நீலயானை சாதவாகனன் அரண்மனையிலுமில்லை எனவரும் இவை காலத்தொடும் இடத்தொடும் கூடி வரா விட்டத்துக் குருடு காண்டல் இல்லை பவளக் கோட்டு நீலயானை என்பதில்லை எனவரும்.

## பலபொருளொருசொல் ஒன்றற்காதல்

சூ.113. பல பொருளொரு சொல் வினைசார்பு இனம் இடத்
தொடர்பான் ஒரு பொருள் தேறத்தோன்றும்
பொருள் வேறுபடுத்தாப் பொது வினையாயின்
பொருளிது எனவெளிப் படுத்துணர்த்தப் பெறும்.

பொருள் : பலபொருளுக்குரிய ஒருசொல், கொண்டு முடியும் சிறப்பு வினையாலும் பிறவற்றொடு இணைத்துக் கூறப்பெறும் சார்பானும் எண்ணப்படும் இனத் தொடர்பானும் கூறப்பெறும் இடச் சூழலானும் ஈண்டு இச்சொல் இப்பொருளது என விளங்கும். வினை பொதுவாயின் கூறுவோன் விளங்கக் கூறுதல் வேண்டும்.

எ.டு : மா என்னும் சொல் பல பொருள் தரும் ஒரு சொல். மாபூத்தது, மா ஓடிற்று என வரின் சிறப்பு வினைகளான் மரம் என்பதும் குதிரை என்பதும் விளங்கும். மாவுக்கு வேலி கோலினார், மாவுக்குக் கடிவாளம் பூட்டினார் என வருமிடத்துச் சார்பான் பொருள் விளங்கும் மாவும் மருதும் கமுகும் ஓங்கின. மாவும் கரியும் தேரும் உடையன் எனவருமிடத்து இனத்தான் பொருள் விளங்கும். விருந்து படைத்தற்கண் உண்பவன் மாநன்று எனின் மாம்பழத்தையும் போர்க்கவசம் பூண்டு வரும் வீரன் என்மாவைக் கொணர்க எனின் குதிரையும் சூழலான் உணர்த்தும் மற்று மாவீழ்ந்தது, மாஏறினான் மாவிற்கு நீரூட்டுக என்னுமிடத்து அவை பொது வினையாதலின் மரமா வீழ்ந்தது - பரிமா வீழ்ந்தது மரமாவிற்கு நீரூட்டுக என வெளிப்படையாக எடுத்துக் கூறல் வேண்டும்.

## பலபொருட்டொகுதிக்கு ஒரு பெயரிடல்

சூ.114. பல்பொருட் டொகுதிக்கு ஒரு பெயரிடுங்கால்
தலைமையும் பன்மையும் அறிந்திடல் மரபே

பொருள் : பல பொருள்கள் விரவிய ஒரு தொகுதிக்கு ஒரு பெயரிட நேருங்கால் அப்பொருள்களுள் தலையாய பொருளானும் அல்லது பலவாக உள்ள பொருளானும் பெயரிடுதல் மரபாகும்.

எ.டு : பலமரங்கள் உள்ள தோட்டத்திற்குப் பெயரிடுங்கால் அத்தோட்டத்தில் மட்டும் அரிதாக அமைந்துள்ள மரம் பற்றியோ அல்லது பன்மைபற்றியோ

பெயரிடுமிடத்துக் கமுகந்தோட்டம் என்பது தலைமை பற்றியமையும் மாந்தோட்டம் என்பது பன்மை பற்றியமையும் அரசர் பெருந்தெரு - தலைமை பற்றியமைந்த பெயர் - வைரமுடி என்பதுமது.

வேளாளர் தெரு - பன்மை பற்றி அமைந்த பெயர் - பொன்முடி என்பதுமது.

## பல்வினைப் பொருட்டொகுதி பற்றிய மரபு

சூ.115. வேறுவேறு செயலுடைப் பல்பொருள் பற்றிய
பொது நிலைக் கிளவி வினைப்படுமிடத்தும்
ஆங்கவை எண்ணப்பெற்றிறு மிடத்தும்
இயைபுறு பொதுவினை இயம்பல் வேண்டும்.

**பொருள் :** வேறு வேறு வினை நிலைகளையுடைய பல்பொருள்கட் குரிய பொதுப் பெயரை வினைப்படுத்துக் கூறுமிடத்தும் அவற்றின் செயல் தோன்ற என்னுமிடத்தும் இயைபுடைய பொதுப் பெயர் பொது வினைகளாற் கூறுதல் வேண்டும்.

**எ.டு :** (1) உணவு என்பது தின்பன, மெல்லுவன அருந்துவன நக்குவன முதலியவற்றிற்குரிய பொதுப் பொருட் பெயர். அதனைக் கூறுமிடத்து உணவு உண்டார் அடிசில் அயின்றார், மிசைந்தார் எனக் கூறுதல் வேண்டும் எண்ணுமிடத்துச் சோறும் கறியும் தேனும் நீரும் துவையலும் உண்டார் மிசைந்தார் எனக் கூறுதல் வேண்டும்.

(2) அணிகலன் என்பது கட்டுவன கவிப்பன தொடுவன செறிப்பன முதலியவற்றிற்குரிய பொதுப் பெயர் அவற்றைக் கூறுமிடத்து அணிந்தார், பூண்டார் எனப் பொதுச் சொல்லரற் கூறுதல் வேண்டும் எண்ணுமிடத்தும் தொடி, தோடு, மாலை, வளை, கழல் அணிந்தார் எனப் பொதுச் சொல்லாற் கூறுதல் வேண்டும்.

(3) வாச்சியம் என்பது மீட்டுவன, இசைப்பன, ஊதுவன முழக்குவன அறைவனவற்றிற்குரிய பொதுப் பெயர் அவற்றைக் கூறுமிடத்து இயம்பினார் வாசித்தார் எனக் கூறுதல் வேண்டும் எண்ணுமிடத்தும் யாழ், குழல், முழவு பறை இயம்பினார் வாசித்தார் எனக் கூறுதல் வேண்டும்.

(4) படைக்கருவி என்பது எய்வன, எறிவன, வெட்டுவன, குத்துவன முதலியவற்றிற்குரிய பொதுப் பெயர் அவற்றைக் கூறுமிடத்துப் படை வழங்கினார் படை தொட்டார் எனல் வேண்டும் எண்ணுங்காலும் வாள், வேல், அம்பு வழங்கினார் தொட்டார் எனல் வேண்டும்.

## சில மரபுகள்

**நூ.116. ஒருபால் மேல் வைத்துரைக்கும் ஒருபொருள்
ஏனைப்பாற்கும் எய்துமிடமுண்டே**

**பொருள் :** பொதுவானதொரு கருத்தை ஒருபாலின் மேல் வைத்துக் கூறுமிடத்து அஃது ஏனைப்பால்களுக்கும் சென்று சேர்தலும் உண்டு.

எ.டு : நஞ்சுண்டான் சாவான் எனக் கூறுமிடத்து அது நஞ்சுண்டவள் சாவாள் உண்டவர் சாவார் நஞ்சுண்டது சாகும் உண்டனசாகும் எனச் சென்று பொருந்தும்.

## மீமிசைச்சொல்

**நூ.117. தெளிவு குறித்திருசொல் ஒருபொருட்கண்வரல்
மீமிசைக் கிளவியென விளம்புவர் புலவர்.**

**பொருள் :** தெளிவு கருதி இருசொற்கள் ஒரு பொருட்கண் வருதல் மீமிசைக்கிளவி என்பர் புலவர்.

எ.டு : மீமிசை இரண்டும் மேல், உயர்வென்னும் பொருளே தரும் இதுவே இவ்வாறு வருவனவற்றிற்குக் குறியீடாக அமைந்தது. நிவந்தோங்கு பெருமலை கூர்நுனைப்பகழி, குழிந்தாழ்ந்தகண் என்பவை மீமிசைக்கிளவிகளாம் நடுமையம் என்றாற் போல வழக்கில் வரும்.

## இரட்டைக்கிளவி

**நூ.118. இரட்டைக்கிளவி இரட்டிற்பிரிந்திசையா**

**பொருள் :** பல்வேறு குறிப்பும் ஓசையும் பற்றி இரட்டித்து வரும் இரட்டைக் கிளவி இரட்டித்தேவரும் பிரிந்துவாரா வரின் கருதிய பொருள் பயவா.

எ.டு : துருதுருவெனச் சிறுவன் விளையாடுகிறான். கல கல வெனச் சிரிக்கிறார் திடுதிடுவென ஓடினான் மளமளவெனக் காரியம் செய்தான் நறநற வெனப் பல்லைக் கடித்தான் குறு குறு வென விழிக்கிறான் எனவரும்.

## அடுக்குச் சொல்

**நூ.119. அச்சம் வெகுளி உவகை அவலம்
விரைவே அசைநிலை இசைநிறைக் கொரு சொல்
மூன்றுநான் கெல்லைவரை அடுக்கிவரு மென்ப.**

பொருள் : அச்சம் முதலியவை பற்றி ஒரு சொல் மூன்று நான்கு எல்லை வரை அடுக்கி வரும்.

எ.டு : *அச்சம்* : பாம்பு பாம்பு பாம்பு, தீத் தீத் தீத்தீ

*வெகுளி* : போ போ போ, சீ சீ சீ

*உவகை* : வா வா வா பாடுகோ பாடுகோ பாடுகோ

*அவலம்* : வாழேன் வாழேன் உய்யேன் உய்யேன் உய்யேன்

*விரைவு* : பார் பார் பார் ஓடு ஓடு ஓடு

*அசைநிலை* : ஒக்குமே ஒக்குமே ஒக்குமே ஒக்கும்

*இசைநிறை* : ஏ ஏ ஏ ஏ அம்பல் மொழிந்தனள் எனவரும்.

## இனமொழி

நூ.120. விதந்தெடுத் திசைக்குமொரு மொழி இனக் கருத்தினை
விதி எதிர் மறைவழி விளக்கவும் பெறுமே

பொருள் : எண்ணி எடுத்துக் கூறப்படுவதொரு மொழி அப்பொருளேயன்றி அதற்கு இனமாக உள்ள தொருகருத்தை உடன்பாடாகவும் எதிர்மறையாகவும் விளக்கவும் பெறும் - எதிர்மறை உம்மையால் இனஞ்சுட்டாமலும் வரும்.

எ.டு : குடத்தைச் சுமந்து சென்றவன் வீழ்ந்தான் எனின் குடமும் வீழ்ந்தது என்பதும் நால்வர் சென்ற படகு கவிழ்ந்தது எனின் அதிற் சென்ற நால்வரும் கவிழ்ந்தார் என்பதும் உடன்பாட்டால் இனஞ்சுட்டி நின்றன.

ஒழுக்கமுடையார் புகழ் பெறுவர் என்புழி ஒழுக்கமில்லார் இகழ்வெய்துவர் என்பதும் அறஞ்செய்தான் சுவர்க்கம் எய்தும் என்புழி மறஞ்செய்தான் நரகம் எய்தும் என்பதும் எதிர்மறையாக இனஞ்சுட்டி நின்றன.

ஆவாழ்க! அந்தணர் வாழ்க என்னுமிடத்து இனமுண்டெனினும் இனஞ் சுட்டாமல் வாழ்த்துதல் பொருள்பட நின்றன. இனஞ் சுட்டுதலும் சுட்டாமையும் கூறுவோனது குறிப்பின் வழி உணரப்படும்.

## பயவினை

நூ.121. மெய்வாய் கண்செவி மூக்கெனும் பொறிகட்கு
அமைந்தியல் தொழிற் சொல் அப்பொருள் விளைக்கும்

**கலைப்பயன் சுட்டும் வேறுவினைச் சொற்களான்**
**அணிபெற இயம்புதல் பயவினை என்ப.**

**பொருள் :** மெய் வாய் கண் செவி மூக்கென்னும் பொறிகட்கமைந்த தொழிற் சொற்கள். செய்யும் பொருள் வினைக்கும் கலை நலம் சுட்டும் வேறு வினைச் சொற்களான் அணி நயம்பட இயம்பப் படுவன பயவினை என்று கூறுப.

எ.டு : அவள் கண்கள் சிரித்தன, செந்தமிழ் நாடென்னும் போதினிலே இன்பத்தேன் வந்து பாயுது காதினிலே - நாவினாற் சுட்ட வடு, பூவின் மணத்தைத் தழுவிக் கொண்டான் கண்குளிரக் கண்டான் எனவரும்.

## அஃறிணையை உயர்திணை ஒப்பக் கூறுதல்

சூ.122. **கேளா மரபின கேட்குந போலவும்**
**பேசா மரபின பேசுந போலவும்**
**இயங்கா மரபின இயங்குந போலவும்**
**இலக்கிய வழக்கான் இயம்புவன வெல்லாம்**
**கற்பனைச் சுவை கமழ் குறிப்பின ஆங்கே**
**யான் யாம் நாமிவை அஃறிணைக்கும் வரும்**

**பொருள் :** மொழிவதைக் கேட்கும் பொறியும் உணர்வுமில்லாத அஃறிணை பொருள்கள் செவியாற் கேட்பன போலவும், பேசுந்திறம் வாயாத அஃறிணைப் பொருள்கள் வாய் திறந்து பேசுவன போலவும் - இயங்குதற் கியலாத அஃறிணைப் பொருள்கள் கால் கொண்டு இயங்குவன போலவும் இம்மரபாக வரும் பிறவும் - புலவோர் தம் கற்பனைச் சுவை கமழக் கூறும் குறிப்பு மொழிகளாகும். இங்ஙனம் கூறும் கற்பனைக் கூற்றில் யான் யாம் நாம் என்னும் உயர்திணைக்கே உரிய தன்மைப் பெயர்கள் அஃறிணைக்கண்ணும் வரும்.

எ.டு : கிள்ளை விடுதூது வண்டு விடுதூது - முகில் விடு தூது, நெஞ்சு விடுதூது முதலிய இலக்கியங்களும் காமமிக்க கழிபடர் கிளவி முதலிய அகப்பொருட் கிளவிகளும் சில செய்யுள் அணிகளும் இவ்வியல்பான் அமைந்தனவாகும். பகைமையும் கேண்மையும் கண் உரைக்கும் - நன்னீரை வாழி அனிச்சமே எனவும், இவ்வழி அவ்வூர்க்குச் செல்லும் அம்மலை ஈண்டு வந்து கிடந்தது எனவும் அஃறிணைப் பொருள்கள் தம்முள் பேசிக் கொள்வதாக அமையும் இலக்கியங்களில் தன்மைப் பெயர்கள் அஃறிணைக்கண் வரும்.

## தொடரியல்

### கருத்தாக்கத் தொடரமைப்பு நெறிமுறை

சூ.123. எண்ணிய கருத்தினை இயம்புங் காலை
நுதலியது சுட்டிச் சுருக்கம் முறைமை
தொகை வகை விளக்கம் மாட்டேறுணர்ச்சி
வன்புறை காட்டொடு பண்படத் தொடுத்தல்
முழுமைதருந்தொடர் அமைப்பு முறை என்ப.

பொருள் : ஒருவர் தாம் பிறர்க்குப் புலப்படுத்த எண்ணிய கருத்தினை அதனைக் கேட்கத் தக்காரிடம் இயம்புமிடத்து முதற்கண் கருத்தின் திரட்சியடங்க ஓரிரு சொற்களான் தலைப்பாக உணர்த்திப்பின் சுருக்கமான அளவில் தக்க சொற்களைத் தொடுத்துச் சுருக்கமாகவும் முன்னுக்குப் பின் முரண்படாமல் முறையாகவும் தொகுத்தும் வகுத்தும் விளக்கந் தர வேண்டியவிடத்து விரிவாகவும் முற்கூறியவற்றோடு பின் தொடரும் கருத்துப் பொருந்தும் வண்ணமும் உணர்வு தோன்ற வற்புறுத்த வேண்டுமிடத்து வற்புறுத்தியும் எடுத்துக்காட்டுக்கள் அளவாக அமைய இசைநயத்தோடு தொகுத்துக் கூறுதல் முழுமை தரும் தொடரமைப்பு முறை என்று கூறுவர் நூலோர்.

எ.டு : எடுத்துக் கொண்ட கருத்து திருக்குறளின் நோக்கு, சிறப்பு அமைந்துள்ள முறை கொள்ளும் பயன் பற்றியது.

திருக்குறள் ஓர் அறநூல். தெய்வப் புலவர் திருவள்ளுவர் அருளியதொரு தமிழ்ப் பனுவல். அறம் என்பதற்கு மக்கள் மனமொழி மெய்களான் ஒழுக வேண்டிய முறைமை என்பது பொருள்.

வள்ளுவர் அதனைத் தனி மனித அறம், குடும்ப நிலை அறம், சமுதாயத் தொடர்பு அறம் அரசியல் அறம் எனப்பகுத்து அவற்றை அறத்துப் பால் பொருட்பால் காமத்துப் பால் என வகுத்துணர்த்துகின்றார். அறம் என்பதன் பொது இலக்கணமாக அவர் கூறுவது மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன் அழுக்காறு அவா வெகுளி இன்னாச் சொல் நான்கும் இழுக்கா இயன்றதறன் இவற்றுள் அழுக்காறும் அவாவும் மனத்தைப் பற்றியது வெகுளி மெய்யைப் பற்றியது இன்னாச் சொல் மொழியைப் பற்றியது. ஏனைமாசுகள் இவற்றின் உட்கூறுகளேயாகும்.

திருவள்ளுவர் கூறும் அறம் சமுதாயத்துள் மக்கள் வகுத்துக் கொண்டொழுகும் சாதி இன சமயப்பகுப்புக்களுக்கு அப்பாற்பட்டது. அவற்றை

உள்ளடக்கியது. ஆடவர் பெண்டிர் செல்வர் ஏழையர் கற்றார் கல்லார் யாவர்க்கும் பொதுவானது. காலம் இடம் அரசு ஆகியவை பற்றிய கோட்பாடுகள் மக்களுக்கு உணவும் நீரும் போல்பவை. அறம் மூச்சுக் காற்றுப் போன்றது. எக்காலத்திற்கும் ஒத்தது. எனவே "ஒத்த தறிவான் உயிர் வாழ்வான் மற்றையான் செத்தாருள் வைக்கப்படும்" என்பதை ஓர்ந்துணர்ந்து திருக்குறள் கூறும் நெறியைப் போற்றி வாழ்வது பயனுறு மக்கள் வாழ்வாகும். முப்பால் நெறியை எப்பாலும் எப்போதும் பேணுவோமாக!

## தவிர்க்க வேண்டிய குறைகள்

சூ.124. ஒன்றைப் பற்றி ஒன்றுரைக்குங்காலை
குறைபட உரைத்தலும் மிகைபட விளக்கலும்
முரண்பட மொழிதலும் மன்றொன்று விரித்தலும்
மயங்கத் தொடுத்தலும் வழூஉச் சொற்புணர்த்தலும்
பயனில மொழிதலும் தவிர்த்தல் வேண்டும்.

பொருள் : வெளிப்படை.

## வாக்கிய அமைப்பு

சூ.125. எழுத்து சொல் இயலுள் இயம்பிய முறையான்
பல்வகை யானும் பழுதின்றமையும்
சொற்றொடர் யாவும் திணைபால் காலம்
இடமுதலாயவை முரணாதமைந்து
மரபோடியங்கல் செந்தமிழ்த் தொடராகும்

பொருள் : எழுத்தியல் சொல்லியல்களில் உணர்த்தப்பட்ட இலக்கண நெறி முறைகளான் பல்வகையானும் பழுதின்றி அமையும் சொற்றொடர் யாவும் திணை, பால் காலம் இடம் வேற்றுமை சுட்டு உம்மை முதலாய இடைச் சொற்கள் முதலியவை தம்முள் முரண்படாமல் அமைந்து மரபு பிறழாமல் இயங்குதல் செந்தமிழ்த் தொடராகும்.

## இதுவுமது

சூ.126. எழுவாய் முதற்பல பொருட்குறு சிறப்படை
அவற்றினை ஒட்டியும் செயப்படு பொருட்காம்
கருவி இடம் சிறப்பன்னவை பிறவும்
பயனிலை விளக்கம் பற்றிய சொற்களும்
அண்மை நிலையான இயைபுறத் தழுவி
நடைபெறல் வேண்டுமென நவிலுவர் நூலோர்

**பொருள் :** எழுவாய் பயனிலை முதலாய பொருள்களுக்குரியவாக வரும் பண்பு முதலாய அடைமொழிகள் எச்சங்கள் முதலியவை அவற்றை ஒட்டியும் செயப்படுபொருள் விளக்கமாக வரும் கருவி, இடம் சிறப்பு அவை போன்றவையும் பிறவும் பயனிலை விளக்கம் பற்றி வரும் சொற்களும் ஒன்றை ஒன்று அணுகி நிற்கும் முறைமையான் இடையீடின்றித் தழுவி நடைபெறல் வேண்டும் என்று நவில்வர் நூலோர்.

## தொடர்களின் வகை

நூ.127. எழுவாய்த் தொடர்வினை முற்றுத் தொடரே
சுட்டுப் பெயர்த் தொடர் வினாத் தொடர் ஏவல்
வியங்கோள் தொடரே விளித் தொடர் பல்வகை
விடைத்தொடர் அடுக்கெதிர் மறைவியப் பெண்ணே
முதுமொழி மந்திரம் அகநிலை ஒலிக்குறிப்பு
ஏதுவொடு இன்னன இயற்றமிழ்த் தொடராம்.

**பொருள் :** எழுவாய்த் தொடர் முதலிய பதினேழும் அவை போல்வன பிறவும் இயற்றமிழ் தொடர்களாம்.

எ.டு : 1. **எழுவாய்த்தொடர் :** கண்ணன் வந்தான், கண்ணன் வந்து விருந்துண்டு சென்றான்.

2. **வினைமுற்றுத்தொடர் :** வந்தான் சாத்தன் கண்டேன் கதிரெழும் காட்சியை யான்.

3. **சுட்டுப் பெயர்த்தொடர் :** அவன் மிகவும் நல்லவன். அது யாரும் விரும்பாத பொருள்.

4. **வினாத்தொடர் :** எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் - நீயா இதைச் செய்தாய்.

5. **ஏவல் தொடர் :** செய் கொற்றா இப்பணியை. பாராய் சாத்தா இக்காட்சியை.

6. **வியங்கோள் தொடர் :** வாழ்க தமிழ் வெல்க அறம் வளர்க மெய்யுறிவு

7. **விளித்தொடர் :** இறைவா! நல்லருள் புரிக. குழந்தாய் ! வருக.

8. பல்வகை விடைத் தொடர் : இறைவன் அருள் வேண்டி வழிபட்டேன். உலகம் வாழ வேண்டுமென்று வரங்கேட்டேன். நேற்று வெளியூர் சென்றிருந்தேன் பசியில்லை உணவு வேண்டா. தாண்டக வேந்தர் அப்பர் பெருமான்.

9. அடுக்குத்தொடர் : நன்று நன்று நீ செய்த செயல் போ போ போ என்முன் நில்லாதே.

10. எதிர்மறைத்தொடர் : வாரான் கண்ணன். அருந்தேன் கள்ளினை.

11. வியப்புத்தொடர் : ஓஓ இனிது இக்காட்சி, ஆஅ உள்ளம் கவரும் இவ் இசை.

12. எண்ணுத் தொடர் : நிலனே நீரே தீயே வளியே வானே எனப் பூதங்கள் ஐந்து சாத்தனும் கொற்றனும் தேவனும் வந்தனர். முப்பத்து முக்கோடி தேவர்கள்.

13. முதுமொழி : புலிபசித்தாலும் புல்லை உண்ணாது. எறும்பும் தன் கையால் எண்சாண்.

14. மந்திரத்தொடர் : சிவசிவ என்றிடின் தீவினை மாளும். அரி ஓம் நமோ நாராயணா.

15. அகநிலைத்தொடர் : பொற்றொடிதந்தபுனைமடல் (பொற்றொடி ஈண்டுக் காதலி) அறம்வெல்லும் (மறம் தோற்கும் என்பது உட்கருத்து)

16. ஒலிக்குறிப்பு : கஃஃறென்னும் கல்லதரத்தம். டுண் டுண் டொ டென்னும்பறை.

17. ஏதுத்தொடர் : கள்ளுண்டு மயங்கினான் உண்ணா திளைத்தான்.

பிறவாறுவருவன தீத் தீண்டுகையார் அறிவித்தல் காண். வேங்கை பூத்து தினை முற்றியமையை அறிவித்தது என்பது பொருள். உண்ணாதிரான். உண்பான் என்பது கருத்து. பிறவும் இவ்வாறே கண்டு கொள்க.

## தொடராக்கவகை

நூ.128. குறுந்தொடர் நெடுந்தொடர் உட்பிணைப்புத்தொடர்
எனத்தொடராக்கம் மூவகைப்படுமே.

பொருள் வெளிப்படை : குறுந்தொடரைச் சிறுதொடர் என்றும் நெடுந்தொடரைப் பெருந்தொடர் என்றும் உட்பிணைப்புத் தொடரை கலவைத் தொடர் என்றும் கூறுவர்.

## குறுந்தொடர்

நூ.129. அல்வழி வேற்றுமைப் பொருளில் ஓர் எழுவாய்
பயனிலை யொடுகருத்துரைப்பது குறுந்தொடர்.

பொருள் : அல்வழித் தொடராகவோ வேற்றுமைத் தொடராகவோ அமைந்து ஒரு பொருளை ஓர் எழுவாய் பயனிலையளவில் விளக்குவது குறுந்தொடராகும்.

எ.டு : கண்ணன் சென்றான் - கண்ணன் நடந்து சென்றான் கண்ணன் விரைந்து நடந்து சென்றான். சாத்தன் உறங்கினான், சாத்தன் நெடுநேரம் உறங்கினான், யானை பிளிறிற்று நரி நீண்ட நேரம் ஊளையிட்டது என்றாற் போல்வன அல்வழியில் குறுந்தொடர்.

கண்ணன் சோறுண்டான், கண்ணன் காய்கறிகளுடன் சோற்றை உண்டான். சாத்தன் மலை ஏறினான். சாத்தன் கால்களை ஊன்றி மலையின் கண் ஏறினான். தேவன் போரில் யானையை வென்றான் தேவன் போரில் வேலெறிந்து யானையை வென்றான் என்றாற் போல்வன வேற்றுமையில் குறுந்தொடர்.

சிலதொடர்கள் தோன்றா எழுவாயாகவும் வரும். கண்ணா உண்டாயோ என்றான். உண்டேன் என்றான் கண்ணன் - என்றான் அவன் என்றும் முடியும். வான் மழை வழாது பெய்க. செந்தமிழ் செழித்து வாழ்க என்றாற் போல்வன வியங்கோளாக வந்த குறுந் தொடர்கள். முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும். அறஞ்செய விரும்பு ஆறுவது சினம் என்றாற் போலப் பழமொழியாகவும் விழைவாகவும் வரும்.

## நெடுந்தொடர்

நூ.130. எழுவாய் புரியும் தொழில் விரிந்தடுக்கிச்
சில பல கருத்தினை விளக்குவது நெடுந்தொடர்.

பொருள் : ஓர் எழுவாய் புரியும் தொழில் பலவாக அமைந்து பயனிலைகள் பெயரெச்சமாகவும் வினை எச்சமாகவும் அடுக்கி ஒருவினை முற்றுப் பயனிலையுடன் சிலபல கருத்துக்களை விளக்கி முடிவது நெடுந்தொடராகும்.

எ.டு : ஆசிரியர், திருக்குறளை இயற்றியருளிய ஆசான் திருவள்ளுவர். அந்நூலுக்கு மணக்குடவர் முதலாய பல்வேறு நோக்குடைய பெருமக்கள் உரைவிளக்கம் செய்துள்ளனர். எனினும் வள்ளுவத்தின் கோட்பாடுகள் காலந்தொறும் பொருந்தி விரிந்து செல்கின்றன என்று கூறினார்.

வேடன் மான் வேட்டம் புரிதற்கெண்ணி குடுவையுள் அம்புகளை நிறைத்து வில்லைக் கைக் கொண்டு மான்கள் மிகுதியாக உலவும் காட்டின் உட்பகுதி நோக்கிச் சென்றான்.

## உட்பிணைப்புத்தொடர்

நூ.131. *சிலபல எழுவாய் பயனிலை விரவித்*
*தடைவிடை யமையக்கட்டு ரைபோல*
*நடைபெறும் உட்பிணைப்புத் தொடரென்ப.*

பொருள் : சிலபல எழுவாயும் பயனிலைகளும் விரவித் தடை விடைகள் அமைய ஒருசிறு கட்டுரை போல நடைபெறுவது உட்பிணைப்புத் தொடராகும் என்பர்.

எ.டு : ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றாகிய சிலப்பதிகாரத்தை இயற்றியவர் இளங்கோவடிகள் என்பதில் யாவர்க்கும் ஒத்த கருத்துண்டு. எனினும் அவர் சேரன் செங்குட்டுவனுடன் பிறந்தவர் என்பதில் கருத்து வேறுபாடுண்டு என்கின்றனர் ஆய்வாளர்கள் சிலர்.

சிலப்பதிகாரம் வரலாற்றுக் காப்பியமா கற்பனைக் காப்பியமா என்பது ஒருபுறமிருக்க இளங்கோவடிகளின் காலம் பற்றிய ஆய்வாளர் கருத்துக்களில் பல முரண்பாடுகள் உள்ளமையைச் சுட்டிக் காட்டி ஒருநூல்காலத்தால் பழமையானதாக இருப்பதால் மட்டும் சிறப்பெய்துவதில்லை. அதன்கண் கூறப்பெறும் வரலாற்றுத் தத்துவங்கள் எக்காலத்திற்கும் பொருந்தி வருமாயின் அதுவே சிறப்பாகும் என்பர் சான்றோர் பலர். எனவரும்.

## மொழிநடை

நூ.132. நால்வகைச் சொற்களும் கருத்தினைவிளக்க
தொடர்ந்திணைந்தமையும் நடைவகைகாணின்
கண்டம் கண்ணி கலம்பகம் அலங்கல்

யாற்றொழுக் கருவி யாப்பணி வண்ணம்
தேர்வடம் மின்னல் சேரி முடமெனப்
பல்வவகைப் படுமவற்றிறுதி நான் கையும்
விடுதல் நலமென விளம்புவர் புலவர்.

**பொருள் :** பெயர்வினை இடை உரி என்னும் நால்வகைச் சொற்களும் கருத்தினை விளக்கத் தொடர்ந்து இணைந்து அமையும் நடை வகைகளை ஆராயின் அவை கண்டம் முதலாக முடம் ஈறாகப் பலவகைப்படும். அவற்றுள் இறுதியில் உள்ள தேர்வடம் முதலிய நான் கையும் நீக்கி மற்றைய நடைகளை மேற்கொள்ளல் நலம்பயக்கும் என்று கூறுவர் புலவர்.

**எ.டு : (1) கண்டநடை :** கம்பன் கவிஞன் கவிஞருள் தலைவன் கல்விக்கடல் கற்பனைச் சிகரம் உளவியல் தேர்ந்தவன் சொற்களை ஆள்பவன் என்பதை கம்பராமாயணத்தைக் கற்பவர் உணர்வர் - எனவரும்.

**(2) கண்ணிநடை :** ஒன்று செய்யினும் நன்று செய்க அஃது அன்பு நயப்புடன் இன்பவயப்படும் எனவரும்.

**(3) கலம்பகநடை :** முத்தமிழ்க் காப்பியம் சிலப்பதிகாரம் அதனை முறை தெரிந்திசைத்தவர் இணையிலாப் புலமை இளங்கோவடிகள் அஃது ஊழின் வலிமையை யாழின்னிசையால் உறுதிசெய்வது. செங்கோல் வளையின் விளையும் பழியைச் சிலம்பினால் தெரிப்பது. கற்பின் பொற்பினைக்வின்பட வரைவது நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம் என்பது பாரதி வாக்கு.

**(4) அலங்கல் நடை :** அரிதரிது மானிடராய்ப் பிறத்தல் பிறப்பின் உடற்குறை புலக்குறை இன்றிப் பிறப்பது அதனினும் அரிது. அதனின் உயர்ந்தது அறிவுடையராதல் அதனினும் சிறந்தது ஒழுக்கமுடைமை. ஒழுக்கம் விழுப்பந்தரலான் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும் என்பது பொய்யாமொழி - எனவரும்.

**(5) யாற்றொழுக்கு நடை :** ஆரூரான் ஆரூரின் அம்மானுக் காளாகிய ஆளுடைய நம்பிகள் அருளிய திருத்தொண்டத் தொகையைச் சிறிது விரித்தோதினார். நம்பியாண்டார் நம்பிகள் அத்திருத்தொண்டர் தம் தெய்வீக வரலாற்றினைச் செந்தமிழின் செம்மாப்பு விளங்க தேன் கசியும் செஞ்சொற்களை தெய்வ மணங்கமழும் பக்திப் பாலிற் கலந்து திருத்தொண்டர் புராணமாக்கியருளியவர் மாக்கவி வள்ளல் சேக்கிழரர் பெருமான் எனவரும்.

**(6) அருவிநடை :** கொடி படர்ந்த சிறு மரங்கள் அன்னையின் முகம் நோக்கி விழிக்கும் மழலைக் குழவியின் கண் போல் மலர்ந்து கவின்

செய்யத் தென்றெலென்னும் செவிலி சிலுசிலுப்புடன் கிளைகளை அசைத்துக் கீதம் பாடப் புள்ளினங்கள் பொல பொல வெனச் சிறகசைத்துப் பாணி கொட்ட இடையசைத்துக் கரை தழுவி வருகின்றாள் சிற்றோடை எனும் பெதும்பை வெற்றி மகள் எனவரும்.

(7) யாப்புநடை : அரும்பொன்னே மணியே என் அன்பே நல்லருளுவாய் அடியேன் என் அகங் குளிர ஆனந்தத் தேனூற வந்தென்னை ஆட்கொள்க. ஆரமுதே அருட்கடலே அடைக்ககலம் அடைக்கலம் - எனவரும்.

(8) அணிநடை : மாதுளை விதை போல அடுக்கடுக்காக அறவுரைகள் அகக்கதவை உணர்வுக் கையால் திறந்து சிந்தைப் பேழையிலே கிடைகொண்டதென்நெஞ்சம் அதுவே யான் பெற்ற அழியாத பேறு - எனவரும்.

(9) வண்ணநடை : சின்னச் சின்ன சீறடியைப் பின்னிப் பின்னி முன்ன நடந்து அன்ன மென்ன முன்னர் வரும் தன் மகவை உன்ன உன்ன உள்மகிழ்ந்து பன்னிப்பன்னி வன்னிக்கிறாள் அன்னை. அவள் தன்னை மறந்தின்னுமென்ன செய்வாள். எனவரும்.

(10) தேர்வடநடை : பொருளியைபோ கருத்துச் செறிவோ அமையாமல் சுவையின்றி நீண்டு செல்லும் நடை தேர்வட நடை அது.

முன்னமொரு காலத்திலேயொரு காட்டினிலே யிருகுரங்குகளிணையாக வசித்தனவவை கணவனுமனைவியும் போல வன்புபூண்டொழுகி வருங் காலத்திலேயொருவேடனவற்றைப் பார்த்தவற்றைப் பிடிக்க வெண்ணியொருவலையைக் கட்டியதிலே கடலை களைத்தூவி விட்டு மறைந்திருந்தானக் குரங்குகளதனையறியாமலவற்றைத் தின்னப் போய் வலையிலேசிக் கொண்டன என்றாற் போல வரும். இது தவிர்க்க வேண்டிய நடை.

(11) பின்னல்நடை : கண்ணன் கந்தனிடம் ஒரு புத்தகத்தை இரவலாக வாங்கிச் சென்றான். கந்தனிடம் கண்ணன் வாங்கிச் சென்ற புத்தகத்தை அவன் திருப்பி தரவில்லை. கண்ணன் புத்தகத்தைத் திருப்பித் தாராமையால் கந்தன் அப்புத்தகத்தைத் திரும்ப வாங்கிவர அவனிடம் சென்றான். அவன் வீட்டில் இல்லாமையால் மிகவும் கோபப்பட்டான் என்றாற் போல் வரும் இது தவிர்க்க வேண்டிய நடை.

(12) சேரிநடை : அடே சின்சாமி எங்கிட்டுப் போறாப்பில டே கந்தசாமியா கிச்சாமியெ பாத்துட்டு வரலா முன்னு போறேன். ஏனாம் அத கேக்கிற அந்தப்பய எங்கிட்ட கடனெ வாங்கித் தின்னுட்டு இந்தா அந்தான்னு

கடுக்காக் கொடுக்குறான் நா உட்ருவனா நெட்டி வாங்குறம் பாரு - என்றாற் போல வரும் - இது தவிர்க்கக வேண்டிய நடை.

**(13) முடநடை :** அநுமான் சீதையைத் தேடி வர இராமனிடம் விடை பெற்றான். வீடணன் இராவணனிடம் தூதுவனைக் கொல்வது அரசநீதியில்லை என்றான். நீ ராமனிடம் போய்ச் சேர எண்ணுகின்றாய். என் கண் முன் நில்லாதே ஓடிப் போ என்று சினந்து கூறினான். அநுமான் இலங்கையைத் தன் வாலில் வைத்த தீயால் எரித்துச் சாம்பலாக்கினான் என்றாற் போல வரும். இதுவும் தவிர்க்க வேண்டிய நடை.

## கூற்றுவகை

நூ.133. ஒருவர்தம் கூற்றையவர் கூறியாங் குரைக்கும்
தற்கூற்று அதைத்தன் வயப்படுத்துரைக்கும்
அயற்கூற்றெனக் கூற்றிருவகைப்படுமே.

**பொருள் :** ஒருவர் கூறியதனை அவர் கூறியவாறே சொல்லி என்றார் எனச் சொன்னார் எனக் கூறுதல் தற்கூற்று, ஒருவர் கூறியதனைத் தன்வயப்படுத்திக் கூறுதல் அயற்கூற்று. இங்ஙனம் கூற்று இருவகைப்படும்.

எ.டு : சாத்தன், "திருக்குறள் படித்து வருகிறேன்" என்றான்
- தற்கூற்று.

சாத்தன், திருக்குறள் படித்து வருவதாகச் சொன்னான்
-

அயற்கூற்றி

"கம்பர் இராமாயணத்தைத் தமிழ்ப் பண்பாட்டிற்கியைப்
பாடியுள்ளார்" என ஆசிரியர் கூறினார். - தற்கூற்று.

கம்பர் இராமாயணத்தைத் தமிழ்ப் பண்பாட்டிற்இயைப்
பாடியிருப்பதாக ஆசிரியர் கூறினார். - அயற்கூற்று

## இந்நூற்புறனடை

நூ.134. துளங்குதமி ழியல்பையித் தொகுத்துரை நோக்கி
விளங்கவிரித் துரைத்தல் வித்தகர்கடனே.

### வளர்தமிழ் இலக்கணம்

காண்டிகையுரையுடன் நிறைவுற்றது



# சூத்திர முதற் குறிப்பு அகராதி

## எழுத்துப்படலம்

## சொல்லிலக்கணப்படலம்

# ச. பாலசுந்தரம் வெளியீடுகள்

## இலக்கணம்

| | | |
|---|---|---|
| 1. | தொல்காப்பியம் ஆராச்சிக் காண்டிகையுரை 5 தொகுதிகள் (அச்சில்); 5ம் தொகுதி செய்யுளியல் மரபியல் உரையுடன் | ரூ. 60 - 00 |
| 2. | தொன்னூல் எழுத்துப்படலம் சொற்படலம் (குறிப்புரையுடன்) | ரூ. 37 - 00 |
| | தொன்னூல் இலக்கியப்படலம் | ரூ. 32 - 00 |
| 3. | வளர்தமிழ் இலக்கணம் - நூற்பா - உரை - எடுத்துக்காட்டுடன் | ரூ. 60 - 00 |
| 4. | நன்னூல் திறனாய்வுரை : நூற்பா - உரை - திறனாய்வுடன் | ரூ. 80 - 00 |
| 5. | எழுத்திலக்கணக் கலைச்சொற்பொருள் விளக்க அகராதி | ரூ. 40 - 00 |
| 6. | சொல்லிலக்கணக் கலைச்சொற்பொருள் விளக்க அகராதி | ரூ. 55 - 00 |
| 7. | யாப்பிலக்கணக் கலைச்சொற்பொருள் அகராதி (உதாரணங்களுடன்) | ரூ. 50 - 00 |
| 8. | அகப்பொருளிலக்கணம் கலைச்சொல், திணை, துறை விளக்க அகராதி | ரூ. 57 - 00 |
| 9. | புறப்பொருளிலக்கணம் கலைச்சொல், திணை, துறை விளக்க அகராதி | ரூ. 25 - 00 |
| 10. | மொழியாக்க நெறி மரபிலக்கணம் - நூற்பா - உரை - எடுத்துக்காட்டுடன் | ரூ. 55 - 00 |

## ஆய்வுரைகள்

11. மடைமாறிய தமிழ் இலக்கண நூல்கள் ரூ. 30 - 00

12. மொழியிலக்கண வரலாற்றுச் சிந்தனைகள் ஆய்வுக்கட்டுரை ரூ. 28 - 00

13. தமிழிலக்கண நுண்மைகள் ரூ. 55 - 00

14. செய்யுளிலக்கணம் - மூலமும் உரையும் (அச்சில்)

*மொட்டும் மலரும்* சொல்லாய்வு விளக்கம்
3 தொகுதிகள் முதல் தொகுதி ரூ. 40 - 00
இரண்டாம் தொகுதி ரூ. 35 - 00
மூன்றாம் தொகுதி ரூ. 30 - 00

## கவிதைகள்

15. இருபெரும் கவிஞர்கள் - ரூ. 40 - 00
(பாரதி - பாரதிதாசன் பற்றியவை)

16. அருட்புலவோரும் அரும்பெறற் கவிஞர்களும் ரூ. 55 - 00

17. புகழ் பெற்ற தலைவர்கள் காந்தி முதல் கலைஞர் வரை ரூ. 45 - 00

18. மழலைத்தேன் குழந்தைப் பாடல்கள் (அச்சில்) ரூ.

## கவிதை நாடகங்கள்

19. புலவருள்ளம் 20. புலவருள்ளம் 21. ஆதிமந்தி
(கவிதைகள் அச்சில்)

## உரைநடை நாடகங்கள்

22. புலவருள்ளம் 23. வேள்எவ்வி

24. சோழப் பேரொளி 25. ஓரங்க நாடகங்கள் (அச்சில்)





இந்நூலாசிரியர் தஞ்சாவூர் கரந்தையில் விசயாம்பாள் சந்திரசேகரனார்க்கு இரண்டாவது மகனாக 18.01.1924 இல் பிறந்தார். கரந்தைத் தமிழ்ச் சங்கப் புலவர் கல்லூரியிற் பயின்று 1950 இல் புலவர் பட்டயம் பெற்று அக்கல்லூரியிலேயே பேராசிரியராகவும் துணைமுதல்வராகவும் பணியாற்றி 1982 இல் பணியினின்று ஓய்வு பெற்றார்.

பின்னர்த் தமிழ்பல்கலைக் கழகத்தில் சங்க இலக்கிய அகராதித் துறையில் பணியாற்றினார். கரந்தைத் தமிழ்ச் சங்கப் பணிகளிலும் நூல் வெளியீடுகளிலும் பங்கேற்றும் " தமிழ்ப் பொழில்" பதிப்பாசிரியராகவும் அமர்ந்தும் தொண்டாற்றி வருகிறார்.

தஞ்சை தொல்காப்பியர் கழகத்தின் தலைவராக இருந்து பல்லாண்டுகள் தொண்டு புரிந்தார்."கரந்தைக் கோவை"முதலிய இலக்கியங்களையும்" புலவருள்ளம்" "ஆதிமந்தி" முதலிய கவிதை நாடகங்களையும் படைத்துள்ளார். இவை தமிழகப் பல்கழைக் கழகங்களில் இளங்கலை, முதுகலைப் பாடங்களாக ஏற்கப்பெற்றுள்ளன. பல்வேறு இயல், இசைக் கருத்தரங்கங்களில் பங்கேற்றுக் கட்டுரைகள் அளித்துள்ளார். இலக்கணஇலக்கிய ஆய்வுக்கட்டுரைகள் பல வரைந்துள்ளார். பன்னூறு கவியரங்குகளிற் பங்கேற்றும் தலைமை தாங்கியும் கவிதைப் பணியாற்றியுள்ளார்.தமிழிசைப் பாடல்கள் பல படைத்துள்ளார். வானொலியில் பல இலக்கியப் பேச்சுகள் நிகழ்த்தியுள்ளார். நாடகங்களில் நடித்துள்ளார். தஞ்சை சரசுவதி மகால் நூலகத்திற்குப் பல நூல்கள் பதிப்பித்துத் தந்துள்ளார்.

தொல்காப்பியம் மூன்றதிகாரங்கட்கும் அறிவியல் நோக்கில் ஆராய்ச்சிக் காண்டிகையுரை வரைந்து வெளியிட்டுள்ளார். தென்னூல் என்னும் பெயரில் புதிய இலக்கணநூலைப் படைத்துள்ளார். முத்தமிழ்த் தொண்டாற்றிவரும் இவருக்கு இலக்கிய மன்றங்கள் பல பாவலரேறு, கவிஞர்கோ, செஞ்சொற் கவிவலவன், தொல்காப்பியப் பேறிஞர், தொல்காப்பியச் சுடர், தொல்காப்பியச் செம்மல் முதலிய பட்டங்கள் வழங்கிப் பாராட்டியுள்ளன.தமிழக அரசு பாரதிதாசன் விருதும், மதுரைப் பல்கலைக்கழகம் தமிழ்ப் பேரவைச் செம்மல் விருதும் வழங்கிச் சிறப்பித்துள்ளன. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் விருதளித்துப் பாராட்டியுள்ளது. கவிதைத் தொகுதிகள் பல வெளியிட்டுள்ளார்.

இந்நாள் இருவகை வழக்கிலும் பயின்று வரும் சொற்களுள் ஏறத்தாழ மூவாயிரம் சொற்களுக்குப் பொருள் விளக்கங்கள் தரும் "மொட்டும் மலரும்" என்னும் மூன்று தொகுதிகளும், எழுத்து,சொல்,பொருள்,யாப்பு பற்றிய இலக்கணக் கலைச் சொற்பொருள் விளக்க அகராதிகளும், " மொழியாக்க நெறி மரபிலக் "மடைமாறிய தமிழ் இலக்கணநூல்கள்" "மொழிஇலக்கணவரலாற்றுச் சிந்தனை என்னும் நூல்களுடன் "புறப்பொருள் இலக்கணக் கலைச்சொல் துறை விளக்க அ "இருபெருங் கவிஞர்கள்" "அருட்புலவோரும் அரும்பெறற் கவிஞரும்" "புகழ் தலைவர்கள்" என்னும் கவிதைகள் படைத்துள்ளார் . "வளர்தமிழ் இலக்க "நன்னூல் திறனாய்வுரை" ஆகிய நூல்கள் இப்பொழுது வெளிவருகின்றன.

**தமிழ்த் தொண்டர் கோ. முத்துப்பிள்ளை**